REGD. NO. M. 4392




# இந்த கைகள் மறைந்திருக்கும் அபாயத்தை வகிக்கின்றன

அழுக்கிலிருக்கும் கண்ணுக்குப்புலப்படாத கிருமிகளில் அபாயமிருக்கிறது.

## லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து உங்களைக்காப்பாற்றுகிறது!




L. 136-50 TM

# டி.எஸ்.ஆர்.

சந்தனாதித் தைலம்






அரைக்கீரைவிதை தைலம்

டி. எஸ். ஆர். தைலங்களை ஆயிரக்கணக்கான மக்கள் விரும்பி உபயோகிப்பதற்குக் காரணம் அவைகளின் சிறந்த குணமே. ஆயுர்வேத சாஸ்திரிய முறைப்படி தயாரிந்த சந்தனாதித் தைலம், அரைக்கீரை விதைத் தைலம் மூளைக்குக் குளிர்ச்சியையும் சருமத்திற்குப் பளபளப்பையும் கொடுக்கின்றன



## டி.எஸ்.ஆர் & கோ.
கும்பகோணம்

TAS-375

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டுகள்
சுராஜ் ஏஜன்ஸீஸ்
157, வாயிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை
கோவை, பாலக்காடு அண்டு நீலகிரிக்கு
சோல் ஏஜண்டுகள்
R. பாலபட்டாபி செட்டியார்
240, வைசியாள் தெரு, கோயமுத்தூர்
வட ஆற்காடு ஜில்லாவுக்கு
சேகர்ஸ், திருப்பத்தூர் (N. A.)

---

"கல்கி" ஆசிரியர் எழுதிய
முப்பெரு நவினங்கள்

•

# சிவகாமியின் சபதம்

பரிசுப் பதிப்பு ரு. 15
மலிவுப் பதிப்பு ரு. 9

•

# பார்த்திபன் கனவு

தமிழ் நாட்டுச் சரித்திரத்தின் மகோன்னத காலத்தை இவ்விரு நவினங்களும் அற்புதமாக விளங்குகின்றன

விலை ரு. 6-8-0

•

# சோலைமலை இளவரசி

1942-ல் நடந்த இந்திய சுதந்திரப் புரட்சியை அடிப்படையாக வைத்து முற்றிலும் புதிய முறையில் எழுதப்பட்டது

விலை ரு. 3-8-0

(தபால் செலவு பிரத்தியேகம்)

•

கிடைக்குமிடம்

## கல்கி காரியாலயம்

கீழ்ப்பாக்கம் :: சென்னை

**பாலுட்ரின்** மலேரியாவிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுவதற்கு

# ஒரு வாராந்திர மாத்திரை





# ஒரு அணா

இன்றிலிருந்து நீங்கள் இந்தப் புதிய ஸைஸ் 0·3 கிராம் 'பாலுட்ரின்' மாத்திரையை, வாரம் ஒரு முறை சாப்பிட்டு வந்தால், உங்களை மலேரியாவிலிருந்து காப்பாற்றிக் கொள்ளலாம். 'பாலுட்ரின்' இப்பொழுது சுத்தமான முறையில், சீதோஷ்ணத்தால் பாதிக்கப்படாத தடிப்பு கண்ணாடி காகிதத்தில் பாக் செய்யப்பட்டிருக்கிறது.



ஒரு ஸ்ட்ரிப்பின் விலை 8 அணா
அல்லது ஒரு மாத்திரையின் விலை

**ஒரு அணா**




PH.20 இம்பீரியல் கெமிகல் இன்டஸ்டிரீஸ் (இந்தியா) லிட்.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras

# நாளுக்கு நாள் எழில்மிக்க சருமம்

ரெக்ஸோனாவிலிருக்கும் **கேடில்** சருமத்திற்கு புது ஆரோக்கியமும், புது தூய்மையும், புது எழிலும் தரும்.

தினமும் குறைந்த பக்ஷம் இருமுறையாவது ரெக்ஸோனா உபயோகியுங்கள். அதன் கேடில் அடங்கிய நுரையை மெதுவாக சருமத்தில் தேய்த்து பிறகு கழுவுங்கள். குறிப்பிடத் தக்க மாற்றத்தைக்காண்பீர்கள்—சருமம் அதிகப் பொலிவும், அதிக மழமழப்பும் அழுத்தமும் பெற்றிருக்கும். ரெக்ஸோனாவிலிருக்கும் கேடில் சருமத்திற்கு புது ஆரோக்கியமும் புது அழகும் தரும். மேலும் சருமத்தை சூட்டிலும், குளிரிலும், புழுதியிலும் வனப்பு வாய்ந்ததாக இருக்கச்செய்யும்.




## ரெக்ஸோனா

கேடில் கலந்த சோப் இது ஒன்றே

RP. 49-172 TM

அதற்குள் முதல்நாள் கொண்டு வந்த ஜாடியை இறக்கிக் கொண்டிருந்தான் ஆரோக்கியம். காலடிச் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். வாசற்படியில் பாக்கியம் நின்று கொண்டிருந்தாள். "மண்ணெண்ணெய் வாங்கியாந்தேன்; இனிமே ஆம்டாதாம்... அதுக்காகத்தான் முன்னாடியே வாங்கிவந்து விட்டேன்" என்று ஏதோ உளறி மண்ணைத் தள்ளி மூடினான். பாக்கியம் பதிலே சொல்லவில்லை. இரவு அழுததினால் மனப்பாரம் ஓரளவு குறைந்திருந்தது. ஆரோக்கியத்தைப் போலீஸில் காட்டிக் கொடுக்கும் எண்ணத்தைச் சற்று அடக்கிக் கொண்டாள். பாசம் தலை தூக்கி நின்றது. 'இன்னும் பார்க்கலாம்; இப்பொழுதைக்கு வேண்டாம்!' என்று நினைத்தாள்.

வேலைக்குப் போய் விட்டான் ஆரோக்கியம். அவனுடைய பேச்சை நம்பாமல் கொல்லைக் குழியிலிருக்கும் ஜாடியைத் திறந்து பார்த்தாள். நெடி மூக்கைத் துளைத்தது. அது மண்ணெண்ணெய் அல்ல என்பதை அறிந்து கொண்டாள். சம்பளம் போன வழியும் சட்டென விளங்கிவிட்டது. ராமுவும் இவனுமாகச் சேர்ந்து சுமார் முப்பது ரூபாய் சரக்கை வாங்கிப் புதைத்து விட்டிருந்தார்கள். பாக்கியத்தின் மனம் நடுங்கிற்று. மண்ணைத் தள்ளி மூடி விட்டுப் பேசாமல் தன் வேலையில் ஈடுபட்டாள்.

பொழுது சாய்ந்து ஏழு மணிக்கு வந்தான் ஆரோக்கியம். வழக்கத்துக்கு விரோதமாக அன்று புத்தி ஸ்வாதீனத்துடன் அவன் வந்தது பாக்கியத்துக்கு வியப்பாகவே இருந்தது. அத்துடன் புருஷன் வீட்டிலும் இருக்கவே, "கடைத்தெருவிற்குச் சென்று வரட்டுமா?" என்று அவனைக் கேட்டாள்.

"நீ போய் வா. நான் இங்கே பிள்ளைகளைப் பாத்துக்கறேன்" என்று சொல்லி விட்டான்.

கடை வீதியில் சாமான்கள் வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்த பாக்கியம் திடுக்கிட்டாள். ஆரோக்கியத்துடன் ராமுவும் உட்கார்ந்திருந்தான். அவனைக் கண்டதும் பேயைக் கண்டதுபோல நடுங்கினாள். இருவரும் நல்ல வெறியில் இருந்தார்கள். இவள் வந்ததைக்கூடப் பார்க்கவில்லை. குழந்தைகள் வீதியில் விளையாடிக் கொண்டிருந்தன. சந்தேகத்துடனே நேராகக் கொல்லையில் சென்று ஜாடி இருந்த இடத்தைக் காலால் துழவிப் பார்த்தாள். ஈர மண் காலில் ஒட்டிற்று! பாழும் சந்தேகம் பொய்க்காதா? அதுதான் இல்லை! அது பரம சத்தியமாகவே உடைந்துவிட்டது. ஒரு விஷயத்தைச் சந்தேகப்படுவதும், அதைக் கண்டுபிடிக்க ஆவல் கொள்ளுவதும் கடைசி விநாடியில் "நம் சந்தேகம் பொய்க்காதா பகவானே!" என்றும் எண்ணுவதும் மனிதர்களின் சுபாவமேதான். அப்படியே நினைத்தாள் பாக்கியமும்! ஆனால் உண்மை தெரிந்ததும் கோபம் மேலிட்டது. முதல் நாளைய நிகழ்ச்சிகள் எல்லாம் அவளுடைய மண்டையில் வேகமாகச் சுழன்றன. அத்தானின் போதனை விஷமாக ஏறி உடம்பு முழுவதும் பரவிற்று. ஆவேசத்துடன் உள்ளே ஓடி வந்தாள். "மண்ணெண்ணெய்ன்னு என் பித்தலாட்டம் செய்தீங்க?" என்று ஆரோக்கியத்தைப் பார்த்துப் படபடப்பாகக் கேட்டாள்.

ஆரோக்கியம் ஆத்திரமடைந்து எழுந்தான். "எதுவானு உனக்கு என்னடி?" என்று சொல்லி 'பளார், பளார்' என்று கன்னத்திலும் முதுகிலும் அறைகள் வைத்தான். ராமு கடகடவென்று சிரித்தான். துச்சாசனனுடைய சிரிப்பால் வெருண்ட பாஞ்சாலியைப்போல் பொங்கி எழுந்தாள் பாக்கியம். இனி பொறுக்க முடியாது! வந்தது வரட்டும். என்று வாசலில் ஓடினாள். பேயால் விரட்டப்பட்டவளைப் போல் ஓடிய பாக்கியம் அந்தத்தெருவின் முக்கூட்டில் இரண்டு போலீஸ்காரர்களைப் பார்த்தாள்! தெய்வம் அனுப்பியதாக எண்ணினாள்! அத்தான் செய்த உபதேசப்படியே அவர்களிடம் விஷயங்களைச் சொல்லி அழுதாள்.

"ஏது அம்மா உன் புருசனுக்குத் தண்ணி! கடையெல்லாம்தான் சர்க்காருலே மூடிட்டாங்களே!" என்று அவர்களில் ஒருவன் துப்பு அகப்படக் கேட்டதற்கு ஜாடியின் ரகசியத்தையும் வெளியிட்டுவிட வேண்டி வந்தது அவளுக்கு. அன்று காலைதான் சென்னை நகரத்தில் மதுவிலக்குச் சட்டம் அமுலுக்கு வந்துள்ளது என்பதும் அதன்படி குடிப்பவனும், கையில் சரக்கு வைத்திருப்பவனும் தண்டிக்கப்படுவான் என்பதையும் அவள் அறியாள். பயமுறுத்திவிட்டுப் போய்விடும்படியும் அவர்களுக்கு ஏதாவது கொடுப்பதாகவும் போலீஸாரிடம் கேட்டுக் கொண்டு அவர்களை அழைத்து வந்துவிட்டாள். அதற்குச் சம்மதித்தவர்களைப்போல் நடித்து அவர்களும் வந்து விட்டார்கள். மதுவிலக்குச் சட்டம் ஏற்பட்டுக் கிடைத்த முதல் வழக்கு! அதை அவ்வளவு இலகுவில் விட்டு விடுவார்களா அந்தப் போலீஸ்காரர்கள்?

குழந்தைகள் பசித்து அழும் ஓலமும், பாக்கியம் பண்டம் போதாமல் அங்கலாய்க்கும் முணுமுணுப்பும் அவனுக்கு சகிக்கவே முடியவில்லை. பாக்கியமும் வெறும் சோம்பேறியாக இல்லாமல் ஆஸ்பத்திரியில் 'வச்சி' வேலை செய்து சம்பாதிக்கத்தான் செய்தாள். அதுவும் போதவில்லை; குடும்பத் தொல்லை அதிகரித்தது. இந்தப் பிடுங்கல்களை மறக்க வழி தேடினான் ஆரோக்கியம். என்ன வழி? எப்படி மறக்க முடியும்? தன்னையே மறந்தாலன்றோ குடும்பத்தை மறக்க முடியும்! யோகிகளுக்கும் கிட்டாத அந்தத் 'தன்னை மறக்கும்' நிலையை அடைய வழி தேடினான்.

ஒரே வழிதான் அவனுக்குத் தோன்றிற்று. சமய சஞ்சீவியைப் போல் ரேஷன் கடை ராமுவின் நட்பு கிடைத்தது. அவன் கலியாணமாகாதவன். சாப்பாட்டுச் செலவு போக மிச்சத்தைச் சாராயக் கடையில் செலவழித்தான். அவனுடைய சிநேகம் ஆரோக்கியத்துக்குக் கிடைத்த பிறகு கேட்கவா வேண்டும்! இணை பிரியா நண்பர்களானார்கள் இருவரும். இரவு நேரம் சென்று வீட்டுக்கு வர ஆரம்பித்தான் ஆரோக்கியம். பாக்கியம் சந்தேகப்பட்டுக் கேட்டால், அவளைத் திட்டுவது முற்றி, உதைக்கவும் தொடங்கினான். விதியைச் சபித்துக் கொண்டு பொழுதைத் தள்ளினாள் பாக்கியம்.

• • •

அன்று காலையில் வெளியில் சென்ற ஆரோக்கியம் மாலை ஏழு மணிக்கு வந்தான். "ஏ பாக்கியம்!" என்று கூப்பிட்டான்.

"என்னவாம் பாக்கியத்துக்கு?" என்று அலுத்துக் கொண்டாள் அவள்.

"நான் பெரம்பூர் வரைக்கும் போய் வாரேன். ராத்திரி வர நேரஞ் செல்லும்."

"இன்னைக்கி என்னவாம் பெரம்பூரிலே? கன்னியம்மன் கோயில் திருநாள் பார்க்க அத்தான் செல்லதுரை ராத்திரி வாரேன்னாச்சே! நீங்க வீட்டிலே இல்லேன்னு அது எதனாச்சம் னெனச்சுகிடாதா?"

"வரட்டுமே! என் உன் அத்தான் பெரிய கவனரு துரையா? நீதான் இருக்கியே! விசாரிச்சிக்கோயேன்!" என்று சொல்லிவிட்டுப் போய் விட்டான்.

இரவு செல்லதுரை வந்தான். பாக்கியமும் அவனும் குழந்தை முதல் விளையாடிப் பழகியவர்கள். பட்டாளத்தில் சேர்ந்து அக்கரைச் சீமைக்குப் போய்விடவே, அவனுக்கென்று வளர்ந்த பாக்கியம் ஆரோக்கியத்தை மணக்க நேர்ந்தது. இப்பொழுது லீவில் வந்தவன் பாக்கியத்தைப் பார்க்கும் ஆசையால் கன்னியம்மன் திருநாளைச் சாக்கிட்டு வருவதாகச் சொல்லியிருந்தான்.

அத்தான் வந்தால் அவனிடம் சொல்லி ஆரோக்கியத்தைத் திருப்பலாம் என்று நினைத்தாள் பாக்கியம். இன்று செல்லதுரை வரும்போது தன் புருஷன் வீட்டில் இல்லாதது அவளுக்கு ஏமாற்றமாகவே இருந்தது.

எனினும் பாக்கியம் கையில் இருந்த சாமான்களைக் கொண்டு சமையல் செய்திருந்தாள். செல்லதுரை சாப்பிட்டான். அவன் சாப்பிட்ட பிறகு பாக்கியமும் சாப்பிட்டாள். பின் குழந்தைகள் தூங்கி விட்டார்கள். செல்லதுரை முற்றத்தில் கிடந்த கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்திருந்தான். அவனிடம் ஆரோக்கியம் இருந்த அருமையும், இப்பொழுது இருக்கும் நிலைமையையும் சொல்லி அழுதபடி தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்தாள் பாக்கியம்.

அந்தச் சமயம் கன்னியம்மன் கோவிலில் கொட்டு மேளம் வானை அளாவ





மூழ்கிக் கொண்டிருந்தது. நாதஸ்வரக்காரன் ஏதோ சினிமாப் பாட்டை ஊதித் தள்ளிக் கொண்டிருந்தான். 'அகிலாண்ட கோடி ஈன்றும் பின்னையும் கன்னியென மறைகள் போற்றும் கன்னியம்மன்' பவனி வந்து கொண்டிருந்தாள்.

உள்ளே செல்லதுரையும் பாக்கியமும் பேசிக் கொண்டிருந்தார்கள். "இதைப் பார், பாக்கியம்! ஒரு நாளேக்கி அவன் குடிச்சிட்டு வரான் பாரு, அப்ப ஒரு தாணக்காரனைக் கூட்டிக்கொண்டு வந்து கொஞ்சம் பயமுறுத்தி வச்சிடு, அப்பாலே அவன் ஏன் அந்தக் கடைப் பக்கம் போகிறான்!"

இப்படித் தூபம் போட ஆரம்பித்தான் செல்லதுரை. வெகு நாளாகவே ஆரோக்கியத்தின் மேல் இருந்த வஞ்சத்தைத் தனக்குக் கிடைக்காத பாக்கியத்தைக் கொண்டே பழி தீர்த்துக் கொள்ளப் பார்த்தான். அந்தச் சுழலில் அகப்பட்டுக் கொண்டு விட்டாள் அப்பாவி பாக்கியம். "நெசமாவா அத்தான்?... அப்படி செய்தா அவரு திரும்பிடுவாரா?" என்று கேட்டாள். ஆவல் மிகுந்த அவளது கேள்விக்கு, "கண்டிப்பா! நீ மட்டும் செய்து பாரு! அப்பாலே சொல்லுவே அத்தான் சாமர்த்தியத்தை" என்றான்.

"ஒரு வேளை நிசமாகவே தாணாவிலே கொண்டுபோய் அடைத்துவிட்டால் என்ன செய்வேன்?"

"சே! போ! சுத்த பைத்தியமாட்டமா கேக்கிறியே! இதுலே ஏதாவது ஆபத்து வரும் என்று இருந்தால் நான் உன்னிடம் சொல்லுவேனா? அதெல்லாம் ஒண்ணும் நேர்ந்துவிடாது, பயப்படாதே!

அத்தானுடைய வார்த்தைகளை அமிர்தமாக நினைத்தாள் பாக்கியம். அவனுடைய விஷ எண்ணம் அவளுக்கு விளங்கவில்லை.

இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டிருந்த போது வாசல் கதவு தட்டும் சத்தம் கேட்டது. பாக்கியம் சென்று கதவைத் திறந்தாள். ஆரோக்கியமும், ராமுவும் உள்ளே நுழைந்தார்கள். ராமுவின் தோள் மேல் ஒரு பெரிய திருகு மூடியிட்ட ஜாடி இருந்தது. ஆரோக்கியம் அதைக் கீழே இறக்கினான். அப்போது செல்லதுரை எழுந்து பின் பக்கம் செல்வதைப் பார்த்தான். ஆரோக்கியத்துக்கு வெறிகிளம்பி விட்டது.

"யாருடி அவன்?"

"அதுதான் அத்தான் வரப்போவதுன்னு சொன்னேனே, ஞாபகமில்லே?"

"அத்தானும், அத்தான்! கண்ட கண்ட பயல்கள் இங்கே ஏன் வரணும்?"

"வீடு தேடி வந்தவங்களுக்கு நல்லாத் தான் இருக்கு உங்க மரியாதை!"

"என்னடி தள்ளுகிறாய்! வந்த பயல் வாசலில் உக்காரணும்! வயசு குட்டியோடே உள்ளே என்னடி ரகசியம்?"

"இப்பத்தான் சோறு போட்டேன்! வீட்டுக்கு வந்தவங்களோடு இரண்டு வார்த்தை பேசக்கூடாதா?"

பேச்சு பலத்தது. பின் கட்டிலிருந்து வந்தான் செல்லதுரை. அவன்மேல் பாய ஆரம்பித்தான் ஆரோக்கியம்.

"ஏன் அப்பா! ஆம்புள்ளே இல்லாத வீட்டிலே உனக்கு என்ன வேலே?"

"நீ இல்லேன்னு எனக்கு என்ன சோசியமா தெரியும்? வந்தேன்! சாப்பாடு போட்டது பாக்கியம்! பேசிக்கிட்டு இருந்தேன். உனக்கு ஏன் இவ்வளவு கோவம்?"

"பேசினாலும் பேச்சு! என்ன பேச்சடா உனக்கு அவளோடே?"

வாய்க்கு வந்ததை உளறத் தொடங்கினான் ஆரோக்கியம். ராமுவும் அவனுடன் தாளம் தட்டிக் கொம்மாளம் போடவே பாக்கியத்தின் எஞ்சான் உடம்பும் வெட்கத்தால் குன்றி விட்டது. பட்டணத்திலிருந்து விட்டு வந்திருக்கும் அத்தானுக்கு எதிரில் தன் புருஷன் இப்படி நடந்து கொண்டதில் அவளுக்கு மானமே போய் விட்டது.

நிலைமையை அறிந்து செல்லதுரை வெளியே செல்லக் கிளம்பினான். ஆனமட்டிலும் இருந்து விட்டுப் போகும்படி பாக்கியம் சொல்லியும் அவன் சம்மதிக்கவில்லை. போகு முன் பாக்கியத்திடம் "ஜாடியில் வந்திருப்பது சரக்குத்தான்! நான் சொன்னதை மறக்காதே!" என்று நினைவு மூட்டி விட்டுச் சென்று விட்டான். அவன் போனதைக் கூடத் தெரிந்து கொள்ளாத குடியர்கள் இருவரும் தங்கள் மனம் போனபடி கொம்மாள மடித்துக் கொண்டிருந்தார்கள்.

அழுது கொண்டே படுத்த பாக்கியம் எப்பொழுது தூங்கினாளோ அவளுக்கே தெரியாது.

விடியற்காலை மண் வெட்டியால் வெட்டும் சத்தம்கேட்டு விழித்துக் கொண்டாள் பாக்கியம். கொல்லையில் சென்று பார்த்தாள். பெரிய பள்ளம் வெட்டி

தில் 'பீட்' கொடுத்துக் கொண்டிருந்தோம். அப்பொழுது இதோ இருக்கும் இந்த அம்மாள் — கைதியாக இருக்கும் நபரின் மனைவி — அழுது கொண்டே அங்கு வந்து எங்களைக் கூப்பிடவே இங்கு வந்து பார்த்தோம். இவன் நன்றாகக் குடித்து விட்டுப் பெண்சாதியை அடித்து நொறுக்கி இருக்கிறான்! அந்த அடியும் உதையும் பொறுக்காமல் இந்த அம்மாள் எங்களிடம் வந்து முறையிட்டாள். அத்துடன் இவனும் இவனுடைய சிநேகிதன் ஒருவனும் சேர்ந்து வீட்டின் பின் பக்கத்தில் ஒரு ஜாடி நிறையச் சாராயம் புதைத்து வைத்திருப்பதாகவும் சொன்னாள். நாங்கள் உடனே வந்து இவனைப் பிடித்துக் கொண்டு உங்களுக்குத் தகவல் கொடுத்தோம்! இவனுடன் கூட இருந்த சிநேகிதனை நாங்கள் வரும்பொழுது காணவில்லை. எங்கேயோ ஓடி விட்டான். நாங்கள் பின்பக்கம் சென்று மண்ணைத் தோண்டிப் பார்த்தால் ஜாடி அகப்படும் என்று தன்னுடைய வாக்கு மூலத்தைக் கொடுத்தாள்" என்றான்.

இதைக் கேட்ட இன்ஸ்பெக்டர் பாக்கியத்தைப் பார்த்து, "என் அம்மா! 144 சொல்வதெல்லாம் உண்மைதானா?" என்று கேட்டார்.

பாக்கியம் உடனே "இல்லவே இல்லை, ஐயா! அத்தனையும் பொய்! நாங்க ஒரு பாவமும் அறிய மாட்டோம்! அவரை ஒண்ணும் பண்ண வேண்டாம்! உங்க பிள்ளை குட்டி நல்லா இருக்கும்! எசமானே! நான் ஏதோ ஆத்திரத்தாலே உளறிப்புட்டேனுங்க' அம்புட்டும் பொய் தானுங்க!" என்று ஒப்பாரி வைக்கத் தொடங்கினாள். அவளை லட்சியம் செய்யாத இன்ஸ்பெக்டர், ஆரோக்கியத்தையும் பாக்கியத்தையும் இரண்டு சேவகர்களிடம் ஒப்படைத்துவிட்டு வீட்டினுள் நுழைந்து பின் பக்கம் சென்றார். அவருடன் இரண்டு போலீஸ்காரர்களும் மண்ணைத் தோண்ட ஆயுதங்களுடனும் விளக்குடனும் பின்தொடர்ந்தனர்.

பாக்கியத்தின் அழுகுரலும் சொறி நாய்களின் குரைப்பும் ஓயவே யில்லை.

• • •

ஆரோக்கியம் ஒரு வண்டி இழுக்கும் கூலி. ராயபுரம் அரிசிக் கிடங்கிலிருந்து பார வண்டியில் மூட்டைகளை ஏற்றிக் கொண்டு ஒவ்வொரு ரேஷன் கடையிலும் கணக்குப்படி அளந்து விட்டு வருவதுதான் அவன் உத்தியோகம். மாதச் சம்பளம் பதினெட்டு ரூபாய்.

அரிசி மூட்டைகளின் பளுவை விட அதிகமாக அவன் உணர்ந்தது குடும்ப பாரம் தான். குழந்தைகள் பிறப்பதற்கு முன் வாழ்க்கை அவனுக்குச் சொர்க்கமாகவே இருந்தது. அப்பொழுது பத்து ரூபாய் சம்பளமே அவனுக்குப் பெரிய நிதியாக இருந்தது. சாயந்திரம் ஐந்து மணிக்கு வேலைகளை முடித்துக் கொண்டு அவன் வீடு திரும்பிவிடுவான்.

ராயபுரம் பழைய ஜெயில் ரோடின் பக்கத்தில் உள்ள மீன் கிடங்குகளின் அருகில் தான் அவன் வீடு. பாக்கியத்தை விவாகம் செய்து கொண்ட போது அவனுக்கு வயது இருபத்தைந்து; நல்ல பலசாலி. அவனுடைய உழைப்பிற்காகவும் குணத்திற்காகவும்தான் சர்வ 'பாப'ரான அவனுக்குப் பாக்கியத்தை விவாகம் செய்து கொடுத்தார்கள். அவளுடைய பிறந்த வீடு கொஞ்சம் சலுகை உள்ளது. கல்யாணம் ஆன கையோடு குடித்தனம் வைத்து விட்டான் ஆரோக்கியம்.

வேலை முடிந்து வீட்டுக்கு வரும்பொழுது அவனுடைய வரவை எதிர்பார்த்து வாசலில் நிற்பாள் பாக்கியம். வேப்பெண்ணெய் தடவி இழைய வாரிய கூந்தலை 'எஸ்' கட்டுக் கட்டி அதில் மஞ்சள் நிறமான செவ்வந்திப் பூக்களை வைத்துக் கொண்டு, காலணா அகலம் ஜிகினாத்தான் கலந்த ஊதா நிறக் குங்குமம் நெற்றியில் மின்ன, நல்ல ரோஸ் கலரில் பெரிய வெள்ளைப் பூக்கள் போட்ட புதுச்சேரிச் சேலையைக் கட்டிக்கொண்டு வாசலில் நிற்பாள். அந்தி மயங்கும் வேளை வீடு திரும்பும் ஆரோக்கியத்துக்கு அந்த பாக்கியம் சாக்ஷாத் ரதி தேவியாகவே காட்சி அளிப்பாள். பாக்கியம் சமைத்துள்ள கஞ்சியோ, கூழோ அமிர்தமாக நினைத்துச் சாப்பிட்டு விட்டுச் சல்லாபிக்க ஆரம்பித்து விட்டால் அவர்களுக்குப் பொழுது போவதே தெரியாது. மறுநாள் விடியற்காலை ஐந்து மணிக்கு மில்லில் ஊதும் சங்கொலிதான் அவர்களைச் சுயநினைவுக்கு வரச் செய்யும். தினமும் இவ்விதமே இன்பப் பாதையில் அவனுடைய வாழ்க்கைச் சக்கரம் ஓடிக் கொண்டிருந்தது.

காலமும் ஓடிக் கொண்டிருந்தபடியால், அதன் போக்கில் ஆரோக்கியம் நான்கு குழந்தைகளுக்குத் தகப்பனாகி விட்டான். இவ்வளவு காலமும் இனித்த வாழ்வு தெவிட்டவும்—ஏன், கசக்கவுமே தொடங்கி விட்டது. சம்பளமோ எட்டு ரூபாய்தான் உயர்ந்தது. அதுவும் யுத்தகாலப் பஞ்சப்படி. இப்பொழுதெல்லாம் வீட்டுக்கு வருவதே அவனுக்கு வேதனையாக இருந்தது. வந்தால்

முறித்து போய்விட்ட படியால் தென்னம் பொருள்களை உற்பத்தியாளர்கள் இஷ்டப்பட்ட விலைக்கு விற்று லாப மடையலாம் என்று அரசாங்கம் அறிவித்திருக்கிறது. இதுவரை உற்பத்தியாளர்களிடமிருந்து கொப்பரையை டன்னுக்கு அறுநூறு ரூபாய் வீதம் விலை கொடுத்து சர்க்கார் வாங்கிக் கொண்டு வந்தனர். இதற்கு மேல் அதிக விலைக்கு உற்பத்தியாளர்கள் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்தால் அதிக விலை பூராவையும் சர்க்கார் தீர்வையாக வசூலித்து எடுத்துக்கொண்டனர். எனவே, ஒரு ஸ்திரத் தரமான தீர்வையில்லாமல் விலைக்குத் தக்கபடி அது மாறியது. இனி அத்தகைய நிலைமைக்கு இடமில்லை. டன் ஒன்றுக்கு நூற்றைம்பது ரூபாய் வீதம் ஸ்திரமான ஏற்றுமதி வரி விதிக்கப்படும். கொப்பராவுக்குச் சுதந்திர மார்க்கெட்டில் கிடைக்கும் அதிக விலை பூராவும் உற்பத்தியாளர்களையே சேரும். புதிய திட்டத்தினால் கொப்பரை, தேங்காய் எண்ணெய் ஆகியவற்றின் விலை வெகுவாக அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## தமிழ் அரசுக் கட்சி

பார்லிமெண்டு தமிழ் அங்கத்தினரும் மந்திரி பொன்னம்பலத்தின் கட்சியிலிருந்து இந்தியப் பிரச்னை காரணமாகத் துண்டித்துக் கொண்டவருமான ஸ்ரீ செல்வநாயகம் தமிழ் அரசுக் கட்சி என்று ஒரு புதிய கட்சியை ஸ்தாபித்திருக்கிறார். சென்ற வாரம் இதன் அங்குரார்ப்பணக் கூட்டம் நடந்த பொழுது தமிழர்களுக்கும் சிங்களவர்களுக்கும் தனித்தனி சுயாட்சியுடைய மாகாணங்களை ஏற்படுத்தி சமஷ்டி அரசியல் திட்டத்தைப் பெறும் வரையில் போராடுவதென்று பல பிரபல தமிழர்கள் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டார்கள். அடுத்த பொதுத் தேர்தலில் சமஷ்டிப் பிரச்னையை முக்கியமாகக் கொண்டு போராடத் தமிழ் அரசுக் கட்சி பலம் திரட்டி வருகிறது.

## பிரிட்டிஷ் கொடிக்கு விடை

அடுத்த பிப்ரவரி 4-ம் தேதி பிரிட்டிஷ் யூனியன் ஜாக் கொடிக்கு இலங்கை விடை கொடுத்து அனுப்பப் போகிறது. இலங்கைக்கு ஒரு தேசியக் கொடியைத் நிர்மாணிக்க சுமார் இரண்டு வருஷங்களுக்கு முன்னால் பிரதம மந்திரி ஒரு கமிட்டியை நியமித்தார். அந்தக் கமிட்டி பல கூட்டங்கள் நடத்திய தென்றாலும் அதில் அபிப்பிராய ஒற்றுமை ஏற்படவில்லை. கமிட்டியின் அடுத்த கூட்டத்திலும் ஒரு முடிவு ஏற்படா விட்டால், பிரதம மந்திரி தாமாகவே ஒரு தேசியக் கொடியைத் நிர்மாணித்து அதை இலங்கை சுதந்திர தினமாகிய பிப்ரவரி 4-ம் தேதி பறக்க விடுவாரென்றும், அந்தத் தேதிக்குப் பின் அரசாங்க வைபவங்களில் எதிலும் பிரிட்டிஷ் யூனியன் ஜாக் கொடி பறக்க விடப்பட மாட்டாதென்றும் தெரிகிறது. அனேகமாகச் சிங்கக் கொடியே சொற்ப மாறுதல்களோடு தேசியக் கொடியாக்கப்படும் என்று கூறப்படுகிறது.

## பார்லிமெண்டில் சாராயக் கடை

பூரண மதுவிலக்கு இயக்கத்தினர் ஆனந்தா கல்லூரியில் ஒரு பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தை நடத்தியபொழுது, இலங்கை அரசாங்கம் குடியை ஒழிக்க நடவடிக்கை எடுக்காதிருப்பதை மாஜி கல்வி மந்திரி டாக்டர் கன்னங்கரா உள்பட பல பிரமுகர்கள் அழுத்தமாகக் கண்டித்தார்கள். பார்லிமெண்டிலும் செனட் சபையிலுள்ள சாராயக் கடைகளை மூட அச்சபைகளின் அங்கத்தினர்கள் உடனே நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும், இலங்கையிலும் வெளி நாடுகளிலுமுள்ள இலங்கை சர்க்கார் பிரதிநிதிகளால் நடத்தப்படும் விருந்து வைபவங்களில் போதை தரும் மது விநியோகிக்கப் படலாகாதென்றும், மது விலக்குக்கு அரசாங்கம் ஆதரவு காட்ட வேண்டுமென்றும் பல தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேறின. பூரண மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வரச் சட்டமியற்ற வேண்டுமென்று சர்க்காரை வற்புறுத்தி பாரதி சேவா மண்டலத்தின் வருடாந்திரக் கூட்டத்திலும் ஒரு தீர்மானம் நிறைவேறியது.

## வேலை நிறுத்தப் போர்

இலங்கை இந்திய காங்கிரஸ் மற்றொரு பெரிய வேலை நிறுத்தத்தில் இறங்கியிருக்கிறது. ஆறு தோட்டங்களில் சுமார் ஐயாயிரத்துக்கு மேற்பட்ட தொழிலாளர் வேலை நிறுத்தத்தை ஆரம்பித்திருக்கிறார்கள். இன்னும் பல தோட்டங்களிலும் வேலை நிறுத்தம் பரவுமென்று தெரிகிறது. சமீபத்தில் ஆயிரத்து எழுநூறு தொழிலாளர் நடத்திய ரோபரி தோட்ட வேலை நிறுத்தத்தில் பட்சபாதமற்ற அரசாங்க விசாரணைக் கமிஷனர் அளித்த தீர்ப்பை ரோபரி தோட்ட ஐரோப்பிய முதலாளி நிராகரித்ததுதான் புதிய வேலை நிறுத்தங்களுக்கு மூலகாரணம்.




**சசிதேவி**

இரவு பத்து மணி இருக்கும். ஆரோக்கியத்தின் வீட்டின் முன்பு ஏகக் கூட்டம் கூடியிருந்தது. அகால வேளையில் இவ்வளவு கூட்டத்தை அந்தத் தெரு ஜனங்கள் அது வரையில் கண்டதே யில்லை. அந்தத் தெருவில் தூங்கிக் கொண்டிருந்த நாய்களுக்குச் சூரியாஸ்தமனத்துக்கு மேல் அதிகம் ஆள் நடமாட்டமே இல்லாத தங்களுடைய ராஜ்யத்தில் அன்று ஒரே கலாட்டாவாக இருந்தது கோபத்தை உண்டாக்கி விட்டது. ஆகவே அவை தாறுமாறாகக் குலைக்கத் தொடங்கி விட்டன.

கூட்டத்தின் மத்தியில் இரண்டு போலீஸ்காரர்களின் தலைகள் தெரிந்தன. இருவருக்கும் நடுவில் ஆரோக்கியம் குடி வெறியில் காணப்பட்டான். அவனை இழுத்துக் கொண்டு வந்த போலீஸாருக்கு வழிவிட்டு எல்லோரும் விலகிக் கொண்டார்கள். நல்ல போதையில் இருந்த ஆரோக்கியம் வாயில் வந்ததைப் பிதற்றிக் கொண்டிருந்தான். அவன் மனைவி பாக்கியம் அழுது புலம்பிக் கொண்டே வாசலில் வந்து கதறத் தொடங்கி விட்டாள். குழந்தைகளின் அலறல் காதைத் துளைத்தது.

"ஐயா! தாணுக்கார ஐயா! அவரை விட்டுடுங்கோ, அவரு ஒரு பாவத்தையும் அறிய மாட்டாரு! ஏதோ தெரியாமே உளறிப்பிட்டேனுங்க! சாமி! அவரு வேறே கெடுவான் பேச்சைக் கேட்டு இன்னைக்கித் தான் பாழும் குடியைக் குடிச்சிருக்காரு! எசமானே, அவரு இது மட்டும் ஒரு தப்பு வழிக்கும் போனதில்லே! சும்மா பயங் காட்டி விட்டுடுங்கோ! உங்களுக்குப் புண்ணியம், ஐயா!" என்று அழுது புலம்பிக் கொண்டே தொடர்ந்து வந்தாள் பாக்கியம்.

அவளைப் பார்த்துப் போலீஸ்காரர்களில் ஒருவன், "ஏன் அம்மா, சும்மா கத்தறே? இன்ஸ்பெக்டர் ஐயா வந்தால் எது நிஜம் என்று தானே தெரிகிறது! எங்களிடம் வந்து சொல்லி அழைத்து வந்துவிட்டு, அப்புறம் தலைகீழா மாத்திட்டியே! ரொம்ப ஒழுங்குதான் போ!" என்று அதட்டினான்.

அப்பொழுது வாசலில் ஒரு வண்டி வந்து நின்றது. அதிலிருந்து இன்ஸ்பெக்டர் ஒருவரும், இரண்டு போலீஸ் சேவகர்களும் இறங்கி வந்தார்கள். ஆரோக்கியத்தைப் பார்த்து, "என்ன பிரதர்! தண்ணியிலே மெதக்காப்போலே இருக்கு!" என்று கேலி செய்து விட்டு "என்ன 144, கேஸ் என்ன? ஏதாவது சரக்கு அகப்பட்டதோ?" என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

அதற்கு 144 என்னும் ஜவான் "நானும் 155-ம் இன்று இரவு வால்டாக்ஸ் ரோடும் பழைய ஜெயில் ரோடும் சந்திக்கும் இடத்

# சட்ட நிபுணர்களின் சஞ்சலம்

ரஜனி

கொழும்பு, டிச. 23

தமிழர் இலங்கையின் தந்தையான ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் தினம் இலங்கையின் பல பாகங்களிலும் வெகு சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. கொழும்பு விவேகானந்த சபையில் உதவிக் கல்வி மந்திரி ஸ்ரீ. கே. கனகரத்தினம் தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்துக்குத் தமிழர்கள் திரண்டு வந்திருந்தனர். "தை பிறந்தால் வழி பிறக்கும் என்பார்கள். அது போல வருகிற தை மாதம் நமது தாய் நாடாகிய இந்தியாவிலே பரிபூரண சுதந்திரக் குடியரசுத் திட்டம் அமுலுக்கு வரப் போகின்றது. அதே சமயம் தீண்டாமையும் பாரதநாடு முழுவதிலும் ஒழிந்து விடும். அதே புனித தினத்தில் இலங்கையிலும் இந்து ஆலய நிர்வாகச் சட்டம் அமுலுக்கு வர வேண்டுமென்று விரும்புகிறேன்" என ஸ்ரீ கனகரத்தினம் சொன்னார்.

சைவமும் தமிழும் தழைக்க நாவலர் பெருமான் செய்த அரும் பெரும் சேவைகளைப் பலர் பாராட்டிப் பேசியதுடன், 'தமிழ்ச் சமூகம் கடைத்தேற அன்று நாவலர் வகுத்துக் கொடுத்த திட்டத்தை இன்று நிறைவேற்றுவோம்' என்று பிரதிக்ஞை செய்து கொண்டார்கள்.

## தலைவரின் மறைவு

சிங்களருடைய அபிமானத்துக்கும் மரியாதைக்கும் பாத்திரமாயிருந்தவரும், இந்தியர் காங்கிரசுக்கு ஆணிவேராக விளங்கியவருமான ஸ்ரீ ஜியார்ஜ் ஆர். மோத்தா மாரடைப்பினால் திடீரென்று காலமாகியது எட்டு லட்சம் இந்தியர்களுக்கும் அதிர்ச்சியை உண்டு பண்ணியிருக்கிறது. இலங்கையின் தொழிற் சட்டங்களில் நிபுணத்துவம் வாய்ந்த ஸ்ரீ மோத்தாவின் மறைவு தொழிலாளிகளுக்குப் பெரும் நஷ்டமாகும் என்று இந்திய ஹை கமிஷனர் ஸ்ரீ வி. வி. கிரி குறிப்பிட்டார். ஸ்ரீ மோத்தாவின் பிரேத அடக்கச் சடங்குக்குச் சகல வகுப்புத் தலைவர்களும் வந்திருந்தார்கள். பிரேதப் பெட்டியை பிரதம மந்திரி ஸ்ரீ சேனநாயகாவும் சேர்ந்து தூக்கியதிலிருந்து, ஸ்ரீ மோத்தாவிடம் இலங்கையர்களுக்குள்ள அபாரமான மதிப்பைத் தெரிந்து கொள்ளலாம்.

## விசித்திர நிலைமை

இங்குள்ள இந்தியத் தோட்டத் தொழிலாளரின் விசித்திரமான நிலைமை இப்பொழுது வெளியாகி யிருக்கிறது. இந்தியர்—பாகிஸ்தானிகள் சட்டத்தின்படி, பிரிவினை செய்யப்படாத இந்தியாவிலிருந்து இலங்கையில் குடியேறி குறிப்பிட்ட சில வருட காலம் இங்கு வசித்தவர்கள் இலங்கைப் பிரஜைகளாகலாம். இதன்படி பத்துப் பதினைந்து வருடங்களுக்கு முன்பு வந்த இந்தியர்களெல்லாம் பிரஜைகளாகத் தடையில்லாதிருக்கும் பொழுது, இலங்கையில் பிறந்து இங்கேயே வளர்ந்து இந்தியாவை எட்டியும் பாராத இந்தியர்களுக்குப் பிரஜா உரிமை மறுக்கப்படுகிறது! இவர்கள் செய்த ஒரே குற்றம் இலங்கையில் பிறந்ததுதான்! இங்கு பிறந்தவர்கள் இந்தியாவிலிருந்து வந்த இந்தியர்கள் அல்லவாம். ஆகையினால் பிரஜா உரிமைச் சட்டத்தில் குறிப்பிட்ட காலம் இலங்கையில் வசித்திருந்தால் மட்டும் இவர்களுக்குப் பிரஜா உரிமை கிடைத்து விடாதாம். இங்கு பிறந்தவர்களுடைய தாய்தகப்பன்மார் இலங்கையின் நிரந்தர வாசிகள் என்பதை ருசுப் படுத்தினால்தான் இவர்களுக்குப் பிரஜா உரிமை கொடுக்க முடியும் என்கிறார்கள்.

சில தொழிலாளரின் பெற்றோர்கள் இறந்திருக்கலாம். வேறு சிலர் இந்தியாவுக்குத் திரும்பியிருக்கலாம். இலங்கையிலேயே பிறந்தவர்களுக்குப் பிரஜா உரிமை அளிக்க மறுத்து, சமீப காலத்தில் இலங்கையிலே குடியேறியவர்களுக்குப் பிரஜா உரிமை யளிப்பது எப்படி நேர்மையாகும்? இந்த விபரீதத்துக்குப் பரிகாரம் தேடச் சட்ட நிபுணர்கள் இப்பொழுது யோசனையில் ஆழ்ந்திருப்பதாகத் தெரிகிறது.

## தென்னந் தொழில்

இலங்கையின் தென்னந் தொழிலுக்கு எதிர்பாராத விதமாக நல்ல காலம் ஏற்பட்டிருக்கிறது. பிரிட்டனுக்கும் இலங்கைக்கும் நடந்த 'கொப்பரா ஒப்பந்தப் பேச்சு'கள்

# உங்கள் (தேக) ஆரோக்கியத்தை
# பருகுங்கள்




விளையாட்டுக்காரருக்கும் சரி, பலஹீனருக்கும் சரி, போர்ன்-வீடா அதிக வன்மையும் அதிக புஷ்டியும் அளிக்கும் அதனால் அதிக சக்தியும் பெறுகின்றனர். குழந்தைகள் அதன் சாக்லேட் வாசனையை விரும்புகின்றனர். காலையிலும் மாலையிலும் ஒரு கிளாஸ் சூடான அல்லது குளிர்ந்த பாலில் இரண்டு தேக் கரண்டி யளவு கலந்து பருகவும்.




-ஆரோக்கிய விருக்ஷம்-



சூடான
அல்லது
குளிர்ந்த



CFY-1 TAM

## காட்பரீஸ்
## போர்ன்-வீடா

கால்ஷியமும், ஏ & டி விடமின்களும் நிறைந்தது

**காட்பரி-ப்ரை (இந்தியா) லிமிடெட்**

(தபால் பெட்டி நெ. 1417 பம்பாய் தபால் பெட்டி நெ 231 கல்கத்தா தபால் பெட்டி நெ. 1723 சென்னை)

நாட்கள் ஓடிக்கொண்டேயிருந்தன. பானு தான் தவறாமல் தன்னை மன்னித்து ஏற்றுக்கொள்ளும்படி சேகருக்குக் கடிதம் எழுதினாள். ஆனால் ஒவ்வொரு கடிதமும் 'பெற்றுக் கொள்ள மறுக்கப்பட்டது' என்று குறிப்புடன் அவளுக்கே திரும்பி வந்து சேர்ந்தது. பானு மனமுடைந்து விட்டாள். அவள் கவலையைக் கண்டு உள்ளம் உருகினார் சாம்பசிவம். கடைசியில் அவர் மிகவும் சிரமப்பட்டு நானூறு ரூபாய் கடனாக வாங்கிப் புதிதாக ஓர் தங்கச் சங்கிலியைச் செய்து பானுவுக்கு அணிவித்து அவள் புக்ககத்திற்கு அழைத்துக் கொண்டு போனார். ஆனால் சேகரின் தாயார் அவர்கள் வந்ததைக் கண்டு வீட்டு வாசற் கதவைக் கூடத் திறக்கவில்லை. சேகர் ஜன்னல் வழியாக, "இங்கு ஒருவரும் வரவேண்டிய அவசியமில்லை. பொய்யும் புனை சுருட்டும் உருவா யிருப்பவர்களுடன் எங்களுக்கு உறவு தேவையில்லை. நீங்கள் யாரோ! நான் யாரோ!" என்றான்.

விரக்தியடைந்த பானு தகப்பனாருடன் மறு ரயிலிலேயே ஊருக்குத் திரும்பினாள். அவள் மனம் கல்லாகி விட்டது.

சாம்பசிவத்தின் பழைய நண்பர், எங்கோ வடக்கே உத்தியோகத்திலிருந்தவர் சாம்பசிவத்தை ஒரு சமயம் பார்க்க வந்திருந்தார். அப்போதுதான் அவருக்குப் பானுவின் துர்ப்பாக்கிய நிலை தெரியவந்தது. அவர் மிகவும் இளகிய நெஞ்சமுடையவர். "அம்மா பானு! நீ மனம் தளராதே! உன்னை இன்றைக்கே எனக்குத் தெரிந்த நண்பர்களால் பரிபாலிக்கப்படும் ஸ்திரீகள் கல்லூரி ஒன்றில் இலவசமான மேற் படிப்பிற்கு ஏற்பாடு செய்கிறேன். ஐந்தாறு வருஷங்களில் உபாத்தியாயினி பட்டம் பெற்று விட்டால், நீ வளரும் சமூகத்திற்குத் தாயாக இருந்து மகத்தான சேவை செய்யலாம். என்றைக்காவது உன் அருமை தெரிந்து உன்னை ஏற்றுக் கொள்ள அவன் முன் வந்தால் அவன் வேண்டுகோளைத் தட்டாதே!" என்றார். பானுவுக்கு அந்த யோசனை மிகவும் பிடித்திருந்தது. சந்தர்ப்பத்தை யொட்டிச் சாம்பசிவமும் அதற்குச் சம்மதித்தார்.

ஆகவே, அவள் வடக்கேயிருந்த ஒரு கல்லூரியில் சேர்ந்து படித்தாள். ஆறு வருஷங்களுக்குப் பிறகு, அதே ஊரிலிருந்த சரஸ்வதி வித்தியாசாலையில் ஓர் உபாத்தியாயினியாக வேலைக்கு அமர்ந்தாள்.

இவ்விதம் ஒரு நிம்மதியான வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தாள் பானு. எனினும் அவள் என்றைக்காவது சேகர் தன்னிடம் திடீரென்று வருவான் என்று கனவு கண்டு கொண்டிருந்தாள். ஆனால் அந்த நம்பிக்கையைச் சிதைத்து விட்டது அன்று அந்தப் பத்திரிகையில் வெளிவந்த புகைப்படம். அவள் கனவைப் பொய்யாக்கி விட்டது அந்தப் படத்தின் கீழிருந்த குறிப்பு.

4

அவள் இவ்விதம் சரஸ்வதி வித்தியாசாலை ஹாஸ்டல் அறையில் சாய்மான நாற்காலியில் அமர்ந்து சிந்தனையில் மூழ்கியிருந்தபோது "பானு! வெளியே உலாவப் போக வரவில்லையா?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே வந்தாள் அவள் சக உபாத்தியாயினி பிரேமா. அவள் பானுவின் முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்டு அப்படியே நின்றுவிட்டாள். "பானு! எதற்காக இப்படிக் கண் சிவக்கும்படி அழுதிருக்கிறாய்? என்ன காரணம்? என்னிடம் சொல்லக்கூடாதா?" என்று கெஞ்சும் குரலில் கேட்டுக் கொண்டே அருகில் அமர்ந்தாள்.

"என் விதியை நினைத்து அழுகிறேன் பிரேமா! வேறொன்றுமில்லை!......இதோ புதுமணக் கோலத்தில் நிற்பவர்தான் என் கணவர்! என் வாழ்க்கையைத்தான் பாழ்படுத்தினார்! இப்போது மணந்திருக்கும் பெண்ணையாவது சந்தோஷமாக வைத்துக் கொள்ளட்டும். அவளையும் அபலை யாக்காமல் இருக்கட்டும்" என்றாள் பானு.



காரியதரிசி:—பாகவதர்வாள்! ஏன் கோபித்துக் கொள்ளுகிறீர்கள்?

பாகவதர்:—நோட்டீஸிலே 'கோடையிடி கோபால பாகவதர் பாட்டு ஆறு மணிக்கு' என்று போட்டு விட்டு, அதற்குக் கீழே 'பாட்டு முடிந்த பிறகு சபா அத்தியாவசியமான ரிப்பேருக்காக மூடப்படும்' என்று போட்டிருக்கிறீர்களே?

---

வாங்கிக் கொண்டு வாருங்கள்! நான்தானே போட்டுக் கொள்ளப் போகிறேன்? அதை அவர்கள் உரைத்து மாற்றுப் பார்க்கவா போகிறார்கள்? உங்களுக்கு மறுபடியும் பணம் கிடைக்கும்போது நல்ல சங்கிலியாக வாங்கி ரகசியமாக என்னிடம் கொடுத்து விடுங்கள்" என்றாள்.

சாம்பசிவம் அசலையும் தோற்கடிக்கக் கூடியதாக ஒரு நகல் சங்கிலியைக் கொண்டு வந்தார். அதைப் பானு அன்று பூரண திருப்தியுடன் அணிந்து கொண்டாள். அடுத்த வாரமே யாதொரு குறையுமில்லாமல் விவாகம் நடந்தது. சாம்பசிவம் சந்தோஷத்தில் பூரித்துப் போனார்.

அதே கில்ட் சங்கிலிதான் அவள் இப்பொழுதும் அணிந்து கொண்டிருந்தாள்.

• • •

அன்று இரவு தனியாக இருந்தபோது சேகர் மிகுந்த சங்கோசத்துடன் தன் யோசனையைப் பானுவிடம் சொன்னான். அவள் நகைகளை இந்தச் சந்தர்ப்பத்தில் விற்க வேண்டியிருப்பது பற்றி மிகவும் மனம் வருந்துவதாகவும் சொன்னான். பானுவிற்குச் சேகரின் முகத்தைப் பார்க்கத் தைரியமில்லை. தலை குனிந்தவாறே "உங்களுக்குச் சமயத்தில் உதவ அவை பாக்கியம் செய்திருக்க வேண்டும்" என்றாள். அவள் குரலில் ஒலித்த நடுக்கத்தை நல்ல வேளையாகச் சேகர் கவனிக்கவில்லை. அவன் உற்சாகம் அளவிட முடியாதபடி இருந்தது. அன்று இரவு முழுதும் அவன் தன்னுடைய புது உத்தியோகத்தைப் பற்றிக் கனவு கண்டு கொண்டிருந்தான். ஆனால் பாவம்! பானுவோ கண் மூடவேயில்லை. அவள் இதய வேதனை வர்ணனைக்கு அடங்காதபடியிருந்தது. உண்மையைச் சொல்லத் தைரியமில்லை, சொல்லாமலிருக்கவும் அஞ்சினாள்.

காலையில் இரண்டு சங்கிலிகளையும் வாங்கிக் கொண்டு போன சேகர் சிறிது நேரத்திற்கெல்லாம் ரௌத்திராகாரமான கோபத்துடன் உள்ளே நுழைந்தான். அவனைப் பார்த்த பானு நடுங்கிப் போய் விட்டாள். "அடி கள்ளி! இவ்வளவு நாளாக இந்த 'கில்ட்' சங்கிலியைப் போட்டுக் கொண்டா எங்களை ஏமாற்றினாய்? சீ! தரித்திரப் பிணமே! நாலு ரூபாய் பெறாத பித்தளைச் சங்கிலியைத் தங்கச் சங்கிலி என்று தூக்கிக் கொடுக்கும் சாகசத்தை எங்கேயடி கற்றுக் கொண்டாய்? இனி ஒரு கணம் கூட ! இந்த வீட்டில் இருக்கக் கூடாது! உன் தரித்திர வாடை இங்கு வீசக்கூடாது! உனக்கும் எனக்கும் இனி உறவு இல்லை. சொன்ன சொல் தவறி எங்களை ஏமாற்றிய உன் அப்பனிடமே போ" என்று ஆக்ரோஷத்துடன் சீறினான்.

பானுவின் சாமான்களையெல்லாம் அவன் பெட்டியில் திணித்து வாசலில் தூக்கி எறிந்தான். பானுவுக்கு இந்தப் பூமி பிளந்து தன்னை விழுங்கிவிடாதா வென்றிருந்தது. அவள் வாயைத் திறக்கவில்லை. அவள் என்ன சொன்னாலும் அவன் மனம் சமாதான மடையாது என்று உணர்ந்தாள். அவன் மாமியும் தன் பிள்ளையுடன் சேர்ந்து பானுவின் தகப்பனாரைத் திட்டினாள். பானுவை வாழா வெட்டியாக வைத்து விட்டுத் தன் பிள்ளைக்கு ஒரு பணக்காரப் பெண்ணைப் பார்த்து மறுவிவாகம் செய்து விடுவதாகச் சபதம் கூறினாள்.

பானு இனிமேல் வாயை மூடிக் கொண்டிருந்தால் விபரீதமாய்ப் போய்விடு மென்று எண்ணி, தன் மாமியின் காலில் விழுந்து அவள் பாதங்களைத் தன் கண்ணீரால் நனைத்து கில்ட் சங்கிலியைப் பற்றிய விஷயத்தைச் சொன்னாள். ஆனால் அவர்கள் அவளையும் அவள் தகப்பனாரையும் மன்னிக்கத் தயாராயில்லை. "இதை ஏன் முதலிலேயே சொல்லவில்லை?" என்று அவர்கள் கோபம் அதிகரித்தது. கடைசியில் தன்னந் தனியாகப் பானு, அன்று மாலையிலேயே பலவந்தமாகப் பிறந்தகத்திற்கு அனுப்பப்பட்டாள்.




குழந்தை:—அம்மா! என்னைக் கூட்டத்தில் கெட்டுப்போகாதே என்று சொன்னாயே? நீ எனக்கு அந்தப் பலூன் வாங்கித் தந்தால் கூட்டத்தில் கெட்டுப்போகாமல் இருப்பேன்!

களிலும் நம்பிக்கை யுள்ளவர். உபாத்தியாயினி ஆக பானு விரும்பியதைக் கூட அவர் அங்கீகரிக்கவில்லை.

சாம்பசிவம் எப்படியோ சிரமப்பட்டு சந்திரசேகரன் பி. ஏ. யின் ஜாதகத்தை வாங்கி வந்தார். அவன் பெற்றோர்கள் வரதட்சிணையாகக் கேட்ட தொகையைக் கப்பம் கட்டவும் இசைந்தார். இருபத்தைந்தே வயதான வரனை, அதுவும் ஓர் உத்தியோகத்திலிருக்கும் வரனை எந்த விலை கொடுத்தும் வாங்கித் தீருவதென்று முடிவு செய்தார். அதற்காகத் தம் பூர்வீக வீட்டையும் விற்று, கொஞ்சம் கடனையும்கூட வாங்கிப் பானுவின் மணத்தை நடத்திவிட்டால், பிறகு தான் எப்படியும் சமாளித்துக் கொள்ளலாம் என்று நிச்சயித்தார். சாம்பசிவத்தின் தீர்மானம் பானுவிற்கு ஒருபுறம் வருத்தமளித்த போதிலும் மறுபுறம் தன் கல்யாணத்தால் அவருக்கு மகத்தான நிம்மதி ஏற்படும் என்ற ஆனந்தத்தையும் அளித்தது.

பெண்ணுக்கு இன்னின்ன நகைநட்டுகள், சீர் வரிசைகள் செய்யவேண்டுமென்றெல்லாம் பிள்ளை வீட்டார்கள் திட்டமிட்டுச் சாம்பசிவத்திடம் சொல்லிவிட்டார்கள். கல்யாணம், இரு சாரார் சௌகர்யத்தையும் உத்தேசித்துத் திருப்பரங்குன்றம் கோவிலிலே நடத்துவதாக நிச்சயிக்கப்பட்டது. சாம்பசிவமும் மனம் தளராமல் தம்முடைய யோசனைப்படி வீட்டை விற்று விவாகச் சாமான்களைச் சேகரித்தார்.

கல்யாணத்திற்கு இன்னும் ஒரு வாரம்தானிருந்தது. பானு வெகு உற்சாகமாக இருந்தாள். சாம்பசிவம் தாற்காலிகமாகத் தன் கவலைகளை மறந்திருந்தார். ஆனால் அவர் துரதிருஷ்டம் கவலைகளை அவரிடம் மறுபடியும் இழுத்து வந்தது.

முன்பு ஒரு சமயம் அவருக்கு இருநூறு ரூபாய் கடன் கொடுத்திருந்த நபர் இந்தச் சமயம் பார்த்து நியாய ஸ்தலத்தில் வழக்குத் தொடர்ந்து அவனுக்குச் சாதகமாகத் தீர்ப்பு வாங்கியிருந்தான். சாம்பசிவம் உடனே வட்டியும் முதலுமாகச் சேர்த்து இருநூற்றைம்பது ரூபாய் கொடுக்காவிட்டால் அவரை அப்பொழுதே கைதுசெய்ய ஏற்பாடு செய்யப்போவதாக நெருக்க ஆரம்பித்தான். சாம்பசிவத்திற்கு என்ன செய்வதென்று புரியவில்லை. அப்போது அவரிடம் கல்யாணச் செலவிற்கு வேண்டிய ரூபாய் தான் இருந்ததே தவிர அதிகப்படியாக ஐந்து ரூபாய்கூட இல்லை. அவர் மனம் கலங்கிவிட்டார்.

"அப்பா! எதற்காக யோசிக்கிறீர்கள்? என் கழுத்திலிருக்கும் நான்கு பவுன் சங்கிலியைக் கழற்றித் தருகிறேன். அதை அப்படியே கொடுத்து இந்தக் கடனுக்கு ஈடு செய்துவிடுங்கள்" என்றாள் பானு. தன் தகப்பனாரின் நிலையைக் கண்டு அவள் உள்ளம் உடைந்துவிட்டது. சாம்பசிவம் யோசித்தார். "அம்மா பானு! அந்தச் சங்கிலி உன் கழுத்தில் இருந்தால்தான் அத்துடன் தாலியும் ஏறும்! பிள்ளை வீட்டார் திட்டப்படி அந்தச் சங்கிலி உனக்கு நான் போடவேண்டிய முக்கிய ஆபரணம். ஆகையால் அதை இப்போது உபயோகப் படுத்திவிட்டால் அப்புறம் இந்தக் கல்யாணம் நடக்காது" என்றார். அவர் குரலில் ஒலித்த சோகத்திற்கு அளவே யில்லை. பானுவும் சிறிது கலக்கமடைந்தாள். இருந்தாலும் மனதைத் திடப்படுத்திக்கொண்டு அவள் சாம்பசிவத்தின் காதோடு சொன்ன வார்த்தைகள் அவர் முகத்தில் கொஞ்சம் தெளிவையும் பிரகாசத்தையும் உண்டாக்கின.

3

பானுவுக்குக் கல்யாணமாகி வாழ்க்கை புத்தகத்தில் இன்பகரமாக ஆரம்பித்தது. அவள் கணவன் சேகருக்கு ஒரு பாங்கியில் வேலை. அவன் கூட அவள்

பெற்றோர்களும் இருந்தனர். அவர்களுக்குப் பானு கொண்டு வந்த சீர் வரிசைகள் போதாதென்று கொஞ்சம் மனக்குறை வேறு இருந்தது. சேகருக்கும் தனக்கு ஒரு பணக்கார மனைவி வரவில்லையே என்ற மனத்தாங்கல் உண்டு. ஏழ்மையில் பிறந்து வளர்ந்த அவனுக்குத் தன் மனைவி மூலமாவது பங்களா வாசமோ, கார் சவாரியோ கிடைக்காமல் போனது பற்றி உள்ளத்தின் அடியிலே கொஞ்சம் தாபம் இருந்தது. ஆனாலும் பானுவின் அரவிந்தம் போன்ற முகத்தைக் கண்டவுடன் அவன் தாபம் எல்லாம் மறைந்து விடும். பானுவும் சீக்கிரமே தன் கணவன் வீட்டாரின் பிரியத்தைச் சம்பாதித்துக் கொண்டாள்.

மண வாழ்க்கை ஆரம்பித்த சில மாதங்களுக்குள்ளேயே முற்றிலும் எதிர்பாராத விதமாக அவன் வாழ்க்கைச் சோலையில் புயல் வீசத் தொடங்கியது.

பாங்கியில் உத்தியோகம் பார்த்த சேகருக்கு அந்த உத்தியோகம் அவ்வளவாகத் திருப்தி யளிக்கவில்லை. சம்பளமும் குடித்தனம் நடத்தப் பற்றாமல் இருந்தது. வேறு உத்தியோகம் கிடைக்காதா என்று ஏங்கிக் கொண்டிருந்த அவனுக்கு, அவனுடைய நண்பன் மாதவன் ஒரு நல்ல சமாசாரம் கொண்டு வந்தான். தான் வேலை பார்க்கும் வியாபாரக் கம்பெனியில் நூற்றிருபது ரூபாய் சம்பளத்தில் ஓர் உத்தியோகம் காலி யிருப்பதாகவும், அதற்கு உடனேயே அறுநூறு ரூபாய் ஜாமீன் கட்டினால் வேலை கிடைத்துவிடுமென்றும் தெரிவித்திருந்தான்.

சேகருக்கு அளவில்லா ஆனந்தம் ஏற்பட்டது. ஆனால் அடுத்த விநாடியிலேயே மகத்தான கவலையும் எழுந்தது. அந்தச் சமயத்தில் அவன் கையில் முழுசாக ஒரு ரூபாய்கூட இல்லை. அறுநூறு ரூபாய்க்கு அவன் எங்கே போவான்? அவன் ஆசை நிராசையாகப் போகும்போ லிருந்தது. தன் உள்ளக் கிளர்ச்சியை வார்த்தைகள் ரூபமாக வெளியிட்டாவது தன் மனப் பாரத்தை கொஞ்சம் குறைத்துக் கொள்ள எண்ணினான். ஆகவே அன்று இரவு சாப்பாட்டுக்குப் பிறகு தன் தாயாரிடம் மாதவன் கொண்டு வந்த சமாசாரத்தைப் பற்றிச் சொன்னான். அவர்கள் சம்பாஷணையைப் பானுவும் கேட்டுக் கொண்டிருந்தாள்.

சேகரின் தாயார் சிறிதுநேரம் யோசித்து விட்டு, "சமயம் என்று வந்தால் அதை விட்டு விடுவதா? என் கழுத்திலோ கால் பவுன் நகை கூடக் கிடையாது. இருந்தால் அதை விற்றாவது கொடுப்பேன். பானுவும் உன் சுக துக்கங்களைப் பகிர்ந்து கொள்ள வந்தவள் தானே! அவளுடைய இரண்டு சங்கிலிகளையும் வாங்கி விற்றுப் பணத்தைக் கட்டு! நாளைக்கே நீ நிறைய சம்பாதிக்கும் போது அவளுக்கு நாலு சங்கிலியாக வாங்கிப் போடலாம்! அவளும் நம் கஷ்டம் தெரிந்த பெண்தான். ஆட்சேபம் சொல்ல மாட்டாள்" என்றாள். சேகரின் முகத்தில் சந்தோஷ ரேகை படர்ந்தது. அதைப் பானு நன்றாய்க் கவனித்தாள்.

* * *

ஆனால் அந்தப் பேச்சு பானுவின் காதில் அக்கினியைக் கொட்டியது போன்ற உணர்ச்சியை ஏற்படுத்தியது. அவள் உள்ளமும் உடலும் அப்படியே நடுங்கி விட்டன. கூடவே, அவளுக்குத் தன் தகப்பனாரிடம் கல்யாணத்துக்கு முன் ரகசியமாகக் கூறிய விஷயம் நினைவுக்கு வந்தது. பானு சாம்பசிவத்தின் காதில் சொன்னதெல்லாம் இது தான்: "அப்பா! அவர்களுக்கு வேண்டியது சங்கிலிதானே! பேசாமல் இதைப் போலவே, ஒரு 'கில்ட்' சங்கிலிக்கு நல்ல தங்க முலாம் கொடுத்துப் பத்து ரூபாயில்

## கோபத்தின் பலன்!



முதல் அம்மாமி:— நேற்று எங்கள் ஆத்துக்காரர் மேலே எனக்கு ரொம்பக் கோபம், மாமி!

இரண்டாவது அம்மாமி:—அது தான் பாத்திரங்களெல்லாம் ரொம்ப வெளுப்பாயிருக்கு!

# சிதைந்த உள்ளம்

கோமதி ஸ்வாமிநாதன்

'பாரத மாதா மில்ஸ் தொழிற்சாலை மானேஜர் சேகரும் அவர் மனைவி ஹேமாவும் தங்கள் திருமணத்தின்போது வாழ்த்துச் செய்தி அனுப்பியவர்களுக்குத் தங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறார்கள்' என்று அன்றைய பத்திரிகையில் வந்திருந்த குறிப்பு அவள் இதயத்தைச் சம்மட்டி கொண்டு தாக்குவது போலிருந்தது. இரண்டொரு நிமிஷங்கள் அப்படியே சிலைபோல் உட்கார்ந்திருந்தாள். அவள் கண்களிலே திரண்டு நின்ற நீர்த்துளிகள் கனம் தாங்காது உருண்டு ஓடி அவள் முன்னிருந்த பத்திரிகையின் மீது விழுந்து தெறித்தன. அந்தக் கண்ணீர்த் துளிகளின் சிதறலுடன் அவள் இதயத்தில் எஞ்சி நின்ற எள்ளளவு நம்பிக்கையும் சிதறிவிட்டது.

சரஸ்வதி வித்யாசாலையில் சரித்திர உபாத்தியாயினியாக உத்தியோகம் பார்க்கும் பானுமதி பி.ஏ. எல்.டி.க்கு மனம் நிம்மதியற்றிருக்கும் போதெல்லாம் ஹாஸ்டல் மாடியில் அவள் அறைக்கு அடுத்தாற் போலுள்ள வராண்டாதான் ஆறுதல் அளிப்பது வழக்கம். ஆனால் இன்று என்னவோ அந்த மனச்சாந்தி அவளை அண்டவேயில்லை. வெதும்பிய உள்ளத்துடன் வெளியே பார்த்துக் கொண்டிருந்த பானுமதிக்கு எந்தப் பக்கம் பார்த்தாலும் தான் சிறிது நேரத்திற்கு முன்னால் கண்ட புகைப்படத் தம்பதிகள் அங்கு நின்று அவளைக் கண்டு கையாடுவது போல் பிரமை ஏற்பட்டது. பொங்கியெழுந்த உணர்ச்சியை வெகு சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு மறுபடியும் உள்ளே போய்ச் சாய்வு நாற்காலியில் படுத்து விட்டாள். அவள் மனக் குரங்கு சிந்தனைக் கயிற்றை வெகு பலமாகப் பின்னோக்கி இழுத்துச் சென்றது. அவள் புறக் கண்கள் மூடியிருந்த போதிலும் அகக் கண்கள் மலர்ந்திருந்தன.



2

"அம்மா பானு! இந்த வரனாவது நிச்சயமாக வேண்டும்! எல்லாம் உன் அதிருஷ்டத்தைப் பொறுத்துத்தான் இருக்கிறது. என்னால் முடிந்ததெல்லாம் செய்து விட்டேன்" என்றார் சாம்பசிவம். அவர் குரல் தழதழத்தது. சிறு வயதிலேயே தாயை இழந்த பானுமதி நடுத்தர குடும்பத்தைச் சேர்ந்த சாம்பசிவத்தின் ஒரே பெண். வருவாய்க்கும் செலவுக்கும் தன் குறைந்த சம்பளத்தைக் கொண்டு ஈடு கட்ட முடியாமல் தவித்த சாம்பசிவம் எப்படியோ தன் பெண்ணை எஸ். எஸ். எல். ஸி. வரை படிக்க வைத்தார். ஆனால், கல்யாண வயதை யடைந்துவிட்ட பானுவுக்குச் சரியான வரனைப் பொறுக்க முடியாமல் தவித்தார். அவர் தேர்ந்தெடுத்த வரன்களுக்கு அவருடைய ஏழ்மையும் வரதட்சிணை கொடுக்க இயலாத நிலையும் பிடிக்கவில்லை. வரதட்சிணை வேண்டாத வரன்கள், அவர் வயதைவிட அதிக வயதுடையவர்களாக இருந்ததால் அவருக்குத் திருப்தி யளிக்கவில்லை. கால சக்கரம் சுழன்று கொண்டிருந்ததே தவிர சாம்பசிவத்தின் கவலை தீராமலே யிருந்தது. பானுவைப் பொறுத்தவரை அவள் நித்திய கன்னிகையாகவே இருக்கவும் தயாராகத்தானிருந்தாள். தன் தந்தையின் நிலைமை உத்தேசித்து தன் ஆசையையும் சுகத்தையும் தியாகம் செய்ய முன் வந்தாள். ஆனால் அவர் சம்பிரதாயங்களிலும் சமூகக் கட்டுப்பாடு

லைக் காணோம்" என்று அவனது மைத்துனர் வேலாயுதம் கூறியபோது, காச்சியப்பன் 'திருதிரு'வென்று விழித்தான்.

"அது கிடக்கிறது, போ! பொங்கல் தினத்திலே ஆலைக்காகக் கரும்பு வெட்டப் போகிறாயல்லவா? அப்போவாவது ஞாபகமாக் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வா!" என்று கிழவன் தன் பேச்சைத் தொடர்ந்து முடித்தான்.

## 3

விடிந்தால் பொங்கல் பண்டிகை. ஆனந்தமான நிலவு காய்ந்து கொண்டிருந்தது. தெருப் பக்கத்தில் கட்டிலை எடுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தான் வேலாயுதம். அப்பொழுதுதான் தைலியுடன் எல்லா வீடுகளுக்கும் சென்று பானைகள் வைத்து விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தான் கிழட்டுச் சீனன். வேலாயுதத்துடன் வெகு நேரம் பேசிய பிறகு, "அப்போ, ரொம்ப நேரமாயிடுச்சி, நான் போய் வரட்டுமா?" என்றான் சீனன்.

"ஆமாங்கிறேன்; இது விசயமா இன்னைக்குப் பேசுவானேன்? விடியறதுமட்டும் இது பீடை புடிச்ச மாசந்தானே? நாளை ஒரு பொழுது போகட்டும். இதுக்கு ரெண்டுக்கும் முடிபோட்டு வழியைப் பார்ப்போம்" என்றான் வேலாயுதம்.

இந்தச் சமயத்தில்தான் வேலாயுதத்தின் வீட்டின் கொல்லைப்புறத்தில் சுவாரஸ்யமான கட்டம் நிகழ்ந்து கொண்டிருந்தது.



வக்கீல்:—என்னங்க! உங்கள் கேஸைப் படித்துப் பார்த்தேன். அதிலே நியாயம் இருக்கிறதாகவே தெரியவில்லையே!

கட்சிக்காரர்:—அதனாலேதானுங்க உங்களிடம் வந்தேன்!

"ஆமா, என்னை நொண்டி, நொண்டி என்று பரிகாசம் பண்ணிப்புட்டு இப்போ நொண்டியைத்தானே கட்டிக்கப் போறேங்கிறே? இதுவும் மனம் போலவேதானா?"

இது ஆர்வம் நிறைந்த காச்சியப்பனின் குரல்.

"ஆமாம் போங்க! உங்களுக்கு என்னை வம்புக்கிழுக்காமப் போனா திங்கற சோறு செரிக்காது!"

தைலியின் முகம் சிவந்தது. அவள் லச்சையுடன் இரண்டு அடி எடுத்து வைத்தாள்.

"அப்புறம் நிரந்தரமாகவே கருப்பன் கொல்லையிலே மாட்டை விட்டு அடிக்கலாம்!" என்று கூறிக்கொண்டே அந்தத் திருடன் இலேசாக நகைத்தான். அடுத்த கணம் — இறந்த தந்தையின் உரத்த கூப்பாடு அந்தச் சுவாரஸ்யமான கட்டத்துக்கு முற்றுப் புள்ளி வைத்து விட்டது.

அடுத்த நிமிஷம் தலைக்கொரு கழியுடன் எல்லோரும் எதிர் சாரிலிருந்த கரும்புத் தோட்டத்திற்குள் நுழைந்தனர்.

என்ன அக்கிரமம்! மறுதினம் வெட்டுவதற்காகத் திட்டமிட்டிருந்த அவ்வளவு கழிகளையும் அந்த நிலவொளியில் யாரோ வெட்டிச் சாய்த்திருந்தார்கள். இன்னும் சில கழிகள் ஆற்றுப் படுகையில் மிதந்து கொண்டிருந்தன.

காச்சியப்பனின் உள்ளம் உடைந்து விட்டது. அதே சமயத்தில் ஏதோ ஒரு மூலையில் நடந்துகொண்டிருந்த போராட்டத்தின் சத்தம் அவன் காதில் விழுந்தது.

ஆமாம், அங்கே பெரும் போராட்டம் தான் நடந்து கொண்டிருந்தது. பிறர் திருடுவதற்காக ஒரு பொறுமையுள்ள ஜந்து சத்தம் செய்யாமலிருக்க முடியுமா? அல்லது கணக்கு வழக்கில்லாமல் அடி வாங்குவதற்கு எந்த உயிருள்ள ஜீவன்தான் தயாராயிருக்கும்? தன் எதிரியைப் பள்ளத்தில் தள்ளி அவன் உடல் முழுமையையும் சிவப்பு அபிஷேகம் செய்த பின்னரும் 'வெள்ளி'க்குத் திருப்தி ஏற்படவில்லை. முன்னங் கால்களை அவன் மார்பின் மீது வைத்து அது தன் மனம் போல அவனை வேட்டையாடிக் கொண்டிருந்தது!

தைலியின் கூப்பாட்டுக்குப் பின்னர் ஆவேசங் கொண்ட வெள்ளி சற்று நகர்ந்தது. அதே இரத்த வெள்ளத்தில் அரிவாளுடன் விழுந்து கிடந்தவன் தன் மனம் போலவே செய்ய நினைத்த கணபதி என்பதை காச்சியப்பன் கண்டான்!

அது அவளைப் பின்பற்றுவதைக் கண்டு காசியப்பன் ஆச்சரியமடைந்தான்.

2

பொங்கலுக்கு இன்னும் மூன்று தினங்களே இருந்தன. காசியப்பனுக்கு அன்று பிடித்த பிரமை இன்னும் நீங்கின பாடில்லை. அவனுக்குத் திடீரென்று ஒரு எண்ணம் உதித்தது. கும்பகோணத்துச் சந்தைக்குக் கொண்டு போவதற்காக அப்பொழுதுதான் கருப்பங் கழிகளை நூறு நூறாகக் கட்டி வைத்துக் கொண்டிருந்தான். அதில் நன்றாகத் தேறியிருந்த கழிகளில் ஐந்தை உருவிக்கொண்டு தெருக்கோடியை நோக்கி நடந்தான். ஊரில் யாரும் உபயோகப்படுத்துவதற்கு முன்னால் அவளிடம் அதைக் கொண்டுபோய்க் கொடுக்க வேண்டுமென்று அவன் உள்ளம் திட்டமிட்டுக் கொண்டிருந்தது. ஆனால், அவளது வீட்டை நெருங்கும்போது அவன் காதில் விழுந்த இரைச்சல் அவனைச் சற்றுத் திகைக்க வைத்துவிட்டது.

“அந்த நொண்டிப் பயல் இனிமே இந்த ஊரில் இருந்து விடுவானா?”

இந்தக் கடுமையான குரல் காசியப்பனுக்குப் புதிதானதல்ல. தைலிக்கு முறைமைக் காரனாகச் சொல்லிக் கொள்ளும் கணபதியினுடையதுதான் என்பது அவனுக்கு வெகு சீக்கிரத்திலேயே புரிந்துவிட்டது.

“தம்பி, நீ எது வேண்டுமானாலும் நினைச்சுக்க; என் மகளுடைய மனசுக்கு விரோதமா நான் எதையும் செய்ய மாட்டேன். அவளைப் பார்த்துக் குருடனுக்குக் கட்டச் சொன்னாலும் அவள் மனம்போலத்தான் செய்வேன்.”

இந்த அழுத்தமான பதிலைக் கிழட்டுச் சீனனிடமிருந்து கேட்டபோது காசியப்பன் புளகாங்கித மடைந்தான். கணபதியின் கண்களிலோ கனல் பறந்தது!

“நீங்க அவள் மனம்போலவே செய்யுங்க; எனக்கு என் மனம்போலவே செய்ய வழி தெரியும்!”

இந்தப் பெரிய தொனியினால் காசியப்பனுக்கு ஒரு கணம் வியர்த்துவிட்டது. உள்ளே போவதற்கு அவன் மனம் இடம் தரவில்லை. அவன் திரும்பித் தன் வீட்டுக்குள் நுழையும்போது, இன்னொரு ஆச்சரியம் அவனுக்காகக் காத்திருந்தது!

“எலே தம்பி, நீ எங்கேடா போயிட்டே? அந்தக் குட்டி சீனன் மவ ரெண்டு புதுப் பானையும், புது நெல்லும் கொண்டு வந்து வெச்சிட்டுப் போச்சுது. நல்லதா நாலு கருப்பங் கழி அந்தப் பெண்ணிடம் கொடுக்கச் சொல்லலாம்னு கூப்பிட்டேன். உன்



# மனம் போலவே....!

துரோணன்

"தைலம்மா, உனக்கு எத்தனை தடவை சொன்னாலும் அறிவு வராது? எத்தனை காலைக்குத்தான் உன்னையும் உன் மாட்டையும் சும்மா விடுகிறது? இன்னைக்கி இதைக் கொண்டுபோய்ப் பட்டியிலே அடைக்காட்டிப்போனா என்பேரு காசியப்ப னில்லே!" என்று கூறிக்கொண்டே ஓடி வந்தான் காசியப்பன். அவனது வார்த்தை யிலும் முகத்திலும் கோபம் கொப்பளித் துக் கொண்டிருந்தது. அவன் தனது ஊனக் காலுடன் இரைக்க இரைக்க ஓடி வந்ததைப் பார்த்துத் தைலி 'கலகல' வென்று நகைத்தாள்.

"என்னது? நான் என்னமோ சொல் றேன்; நீ பரிகாசமா பண்றே? ஒங்க அப்பனைப்போல நானும் கிழவனுக்கு ஒரு பானை செஞ்சு காலணாவுக்கு வியாபாரம் செய்தால் எனக்கும் கஷ்டம் தெரியாது! நான் ஒண்ணுக்கு இருநூறு சால் தண்ணி உல்லா இறைச்சிருக்கிறேன்!" என்று மூச்சு விடாமல் கத்தினான் காசியப்பன்.

தைலியின் முகம் சற்றே கறுத்தது. "ஏன், பானையும் சட்டியும் செய்கிறது சல்லிசாத்தான் இருக்குதோ?" என்றாள்.

"ஆமாமா—குயவனைப்போல வேலை செய் வது ரொம்பக் கஷ்டம்தான். ஆறு மாசமா இந்தக் கரும்புக் கொல்லைக்காக நாங்க பட்டிருக்கிற பாட்டை நினைச்சால்......! இந்த எளவுலே எந்தப் பாவிப் பயலோ ராவுக்கு ராவே வந்து இருபது முப்பது கரும்பக் கழியை வேறே வெட்டிக்கிட்டுப் போயிட்டாங்களே என்று நான் வயத்தெரிச்ச லோடு இருக்கிறேன். நீ வேறே வந்து மாட்டை விட்டு அடிச்சு நாசம் பண்ணி விட்டுப் போறே! உனக்கு என்ன, நீ ரொம்ப தேவதையாட்டம் உன்னுடைய மனம் போலத் திரியறவதானே?"

அவனது குரல் உரத்தே இருந்தாலும் வேகம் சற்றுத் தணிந்திருந்தது. அதற்குக் காரணம் தைலியின் வட்ட வடிவமான நீல விழிகள் தான்!

"ஆமா, நான் மனம்போலத் திரியறவ தான்! என்னமோ — ஒங்க 'வெள்ளி'க்கு உங்கள் கொல்லைப் புல்லுன்னு ரொம்பப் பிடிக்கிறதேன்னு கொஞ்ச நேரம் ஓட்டி வந்தா 'ஓ'ன்னு கத்தறியே!"

"இப்படித் தயவு தாட்சண்யம் பார்த்துப் பார்த்துத்தான் என் நிலைக்கு ஆபத்து வரு கிறது! இரண்டு நாளுக்கு முன்னாடி முப்பது கழிபோல திருட்டுப் போய் விட்டது. இன் னும் ஒரு வாரத்திலே—பொங்கலுக்குள்ளா ரேயே கொல்லை காலியாயிடும்!"

"ரொம்ப நல்லாருக்குதே நியாயம்! நீங்க சொல்றதைப் பார்த்தால் என்னா லேயே எல்லாம் போயிடுறாப்பிலே இல்லே இருக்குது?"

"ஆமா, உன்னாலேதான்! நீ மாட்டை விட்டு வேலி யெல்லாம் போய் விட்டது. இன்னைக்கு உன் மாட்டைக் கொண்டுபோய் அடைத்து விட்டு வந்தால்தான் என் மனசு சமாதானமடையும். எங்கப்பன் கண்டு விட்டாரானால் உசிரையே விட்டுவிடுவாரு!" என்று அவன் கூறிக்கொண்டே வேஷ் டியை வரிந்து கட்டிக் கொண்டான். அவ னது முகத்தில் பழைய கோபம் திரும்பி விட்டது.

தைலி 'கலகல' வென்று நகைத்துக் கொண்டே, "எங்கே, நீங்க வெள்ளியைப் புடிச்சிடுவீங்களோ?" என்றாள்.

அவன் தன் ஊனக் காலை நினைத்து வெட்கினான். அடுத்த கணம் சம்பா ஷணையை மாற்றத் தோன்றிற்று அவ னுக்கு. "அதிருக்கட்டும் தைலி, இந்த வருசம் ஒனக்கும் கணபதிக்கும் முடி போட்டுடுவாங்களில்லே?" என்றான்.

இதைக் கேட்டபோது அவளது முகத் தில் குறும்புத்தனத்துடன் சோகமும் பிரதிபலித்தது.

தைலியின் பார்வை அவனை விழுங்கி விடுவது போலிருந்தது. அவள் சட்டெனத் திரும்பி உரத்த குரலுடன், "ஏ, வெள்ளி! வா, நம்ப வீட்டுக்குப் போகலாம்!" என்று கூவினாள்.

தைலியின் கூப்பாடு முடிவதற்குள் ளாகவே 'வெள்ளி' அவளைத் தொடர்ந்து விட்டது. வாயில் பாதிப் புல்லுடனேயே

"ஆ...மா......"

'ம்' வரவில்லை. அதற்குப் பதிலாக அழுகை வந்தது.

"உன்னை எந்தக் கையால் அடித்தேன்?" என்றான் ஜம்பு.

"இதோ இந்தக் கையால்!" என்று ஜம்புவின் வலது கையை இழுத்துக் காண்பித்தாள் அம்மு.

"அம்மு, உன்னை அடித்த கைக்கு என்ன தண்டனை கொடுக்கலாம் என்று உனக்குத் தோன்றுகிறதோ அதைக் கொடு...!" என்று சொல்லிக் கெஞ்சுகிற பாவனையில் சற்று நிறுத்தினான். அம்மு அவனையே பார்த்தாள்.

"ஆமாம், நீ பிறந்தகத்தில் இருக்கும் போது அன்பு ததும்பக் கடிதங்களாக எழுதிக் குவித்த அந்தக் கை எது? நான் தலை தீபாவளிக்கு அங்கு வந்திருந்த போது நீ கொடுத்த குஞ்சாலாடை எடுத்துத் தின்ன அந்தக் கை எது? அன்று ஒருநாள் நிலா பட்டப் பகல் போல் அடித்துக் கொண்டிருந்தபோது உங்கள் வீட்டு மொட்டை மாடியில் உன் கன்னத்தைச் செல்லமாகக் கிள்ளிய அந்தக் கை எது?" என்று மூச்சு விடாமல் கேட்டான் ஜம்பு.

அம்மு அயர்ந்து போய் நின்றாள். அவளுக்கு அழுகை வந்தது. அதற்குப் பிறகு ஏதோ ஒரு உணர்ச்சி பீறிட்டுக்கொண்டு கிளம்பிற்று.

'நான் எவ்வளவு அசடு! 'அவர்' என் மேல் கோபத்தில் என் கன்னத்தில் ஒரு தட்டுத் தட்டினார். அதற்காக ஆத்திரப் பட்டுக்கொண்டு அப்பாவிடம் சொல்ல, அது எவ்வளவு தூரத்திற்கு வந்து விட்டது? அடித்த கைதான் அணைக்கும் என்று அறியாமல் போனேனே!'

இப்படியெல்லாம் எண்ணிப் பெருமூச்சு விட்டாள் அம்மு. அதற்குப் பிறகு ஒரு கணம்கூட அங்கு நிற்கவில்லை. கண்ணைத் துடைத்துக் கொண்டு 'புது அம்மு'வாக மாறி அப்பாவிடம் ஓடினாள்.

"அப்பா! தெரியாத்தனமாக உளறிவிட்டேன். 'அவர்' உன்னும் தெரியாமல் நடந்து கொண்டு விட்டேன். நான் வரப் போவது இல்லை. என்னை மன்னித்து அந்த வண்டியைப் போகச் சொல்லுங்கள்!" என்று மண்டியிட்டுக் கெஞ்சினாள்.

சாம்பசிவம் பிரமித்துப் போனார்.

வண்டி போயிற்று; மேளக்காரன் வந்தான். ஜாம் ஜாம் என்று ஸ்ரீமந்தம் நடந்தது. பிரசவத்திற்குக்கூட அம்மு பிறந்தகம் போகவில்லை!

---

# சரியாய்ப் போய்விடும்!




நோயாளி:—ஸார்! நடந்தால் எனக்கு ரொம்பவும் காலை வலிக்கிறது.......

டாக்டர்:—நடக்காதீர்கள் ஸார், நடக்காதீர்கள்! சரியாய்ப் போய்விடும்.........

நோயாளி:—அதிகம் பேசினால்கூட மார்பை......

டாக்டர்: —ரொம்ப வலிக்கிறதாக்கும்!... அதிகமாய்ப் பேசாதீர்கள். உடனே சரியாய்ப் போய் விடும்......

நோயாளி:—மூச்சு விட்டால்கூட மார்பை வலிக்கிறது டாக்டர்......!

டாக்டர்: மூச்சே விடாதீர்கள்: சரியாய்ப் போகாவிட்டால் என்னைக் கேளுங்கள்!




ஜம்புநாதனுக்குப் பயமாகப் போய் விட்டது. மாமனாருடைய முரட்டுச் சுபாவம் அவனுக்குத் தெரியும். தான் இந்தச் சமயத்தில் நேரில் போய் ஏதாவது சொன்னால் பெண்ணைக் கையைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துக்கொண்டு கிளப்பினாலும் கிளப்பி விடுவார் என்று நினைத்து, கொல்லை வழியாக ஓடி, அக்கம் பக்கத்தில் இருக்கும் இரண்டு மூன்று பெரிய மனிதர்களிடம் விஷயத்தைச் சொல்லி அவர்களை மத்யஸ்தத்திற்கு அழைத்துக்கொண்டு வந்துவிட்டான்.

★

**வா**சலிலே குதிரை வண்டி வந்து நின்றது. ஆவான்கள் பெட்டி படுக்கைகளை 'ஜமா'வைக் கட்டிக்கொண்டு எடுத்து வைக்கத் தயாரானார்கள். அதே சமயம் ரேழி ஹாலில் 'மூவர் கமிட்டி' ஒன்று கூடியது.

அவர்கள் மூன்று பேரும் சாம்பசிவத்திடம் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள். 'பொழுது விடிந்தால் ஸ்ரீமந்தக் கல்யாணம்; இப்படிக் கோபித்துக் கொண்டு கிளப்புவது சரியில்லை'' என்றார்கள். ''என்னமோ அவன் சிறிசு; தெரியாத்தனமாக ஒரு தட்டுத் தட்டி விட்டான்; அதற்காக இவ்வளவு கோபமா?'' என்று கேட்டார்கள்.

சாம்பசிவம் ஒரே அடியாக மறுத்து விட்டார். யார் பேச்சையும் கவனிக்கவில்லை. தாம் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தர் என்பதை நிலைநாட்டி விட்டார்.

'மூவர் கமிட்டி'யில் இருந்த பெரியவர் ஒருவர் சற்று விஷயம் தெரிந்தவர். கடைசியாக அவர் ஒரு யுக்தியைக் கையாளத் திட்டம் போட்டார்.

''அம்மு! உன் தீர்மானம் என்ன? நீ உன் அப்பாவுடன் போகத்தான் போகிறாயா?'' என்று கேட்டார் அவர்.

''ஆமாம்'' என்றாள் அந்த அசட்டு அம்மு.

''அப்படியானால் சரி; உன் அகமுடையானிடம் 'போய்விட்டு வருகிறேன்!' என்று ஒரு வார்த்தை சொல்லி விட்டுப் போ!'' என்றார் அவர்.

பிறகு அந்தப் பெரியவர் இன்ஸ்பெக்டர் சாம்பசிவத்தைப் பார்த்து, ''ஸார், உங்கள் பெண் தன் புருஷனிடம் சொல்லிக் கொண்டு புறப்படுவதில் உங்களுக்கு ஒன்றும் ஆட்சேபம் இல்லையே?'' என்று நயமாகக் கேட்டார்.

கோபாவேசத்துடன் இருந்த சாம்பசிவமும் அதற்குச் சம்மதித்தார். அம்மு மெதுவாக உள்ளே திரும்பிப் போனாள்.

ஜம்புநாதன் கூடத்திலே இவ்வளவையும் ஒட்டுக் கேட்டுக் கொண்டு ஒரு நாற்காலியில் 'உம்' மென்று உட்கார்ந்து கொண்டிருந்தான். அம்மு அவன் அருகே வந்து அசையாமல் நின்றாள். ஜம்புவும் விறைப்பாக அவளைக் கவனியாதவன் போல் இருந்தான்.

அம்மு ''நான்...போ...ய்...வி...ட்டு...'' என்று திக்கினாள்.

''நீ போவதாக முடிவு செய்து விட்டாயா?'' என்று ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு கேட்டான் ஜம்பு.

# அடித்த கை

**கிண்கிணி**

மீனு வாசற்படிக்கு மாக்கோலம் போட்டுக்கொண்டு இருந்தாள். குதிரை வண்டி ஒன்று குலுங்கிக் கொண்டு வந்து நின்றது. நிமிர்ந்து பார்த்தாள் மீனு. அவள் நினைத்தது சரி.

அவளுடைய தம்பி அகமுடையாள் அம்மு. வளைகாப்பு அடுக்கிக்கொண்ட வளையல்கள் கூச்சலிட, வண்டியிலிருந்து முதலில் திணறிக்கொண்டு இறங்கினாள். அப்புறம் அம்முவின் அப்பா போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் சாம்பசிவம் மிடுக்குடன் தாவி இறங்கினார். இன்னும் இரண்டு போலீஸ் ஜவான்கள்—'ஐயா'வுடன் வந்திருக்கிறார்கள்போல் இருக்கிறது—அவர்களும் 'மப்டி' உடையில் பய பக்தியுடன் வண்டியை விட்டுக் கீழே குதித்தார்கள்.

அம்முவைப் பார்த்துவிட்டு மீனு, "வாடியம்மா வா! இப்பவாவது மனசு வந்ததா?" என்று வரவேற்றாள். அவள் அப்பாவை "வாருங்கோ!" என்று சம்பந்தி முறையில் அழைத்தாள். அம்மு உதட்டைப் பிதுக்கி, நாத்தனார் வரவேற்பை உதறி எறிந்துவிட்டு விறுவிறுவென்று உள்ளே நுழைந்தாள். அதில் தான் ஒரு சர்க்கிள் இன்ஸ்பெக்டருடைய பெண் என்ற பெருமை பிரதிபலித்தது.

பொழுது விடிந்தால் ஸ்ரீமந்தக் கல்யாணம். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை ஜரூராகச் செய்துகொண்டு மனைவியையும், மாமனாரையும் ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தான் ஜம்புநாதன்.

"ஜம்பு! அவர்கள் வந்துவிட்டார்கள்!" என்று மீனுவின் குரல் கூடத்திலே கேட்டது. சட்டென்று ஜம்பு ஒரு விசிறி மடிப்பு ஜரிகை அங்கவஸ்திரத்தை விசிறித் தோளில் போட்டுக்கொண்டு இரண்டு இரண்டு படிகளாகத் தாண்டி மாடி அறையிலிருந்து கீழே வந்து சேர்ந்தான்.

*

அம்மு நல்ல அழகி. அத்துடன் பெரிய இடத்துப் பெண். தாய் அற்றவள். போதும் போதாததற்கு அவள் அப்பா சர்க்கிள் இன்ஸ்பெக்டர். கேட்க வேண்டுமா? எல்லாமாகச் சேர்ந்து அம்முவை அகங்காரி ஆக்கி இருந்தது.

தான் 'காம்ப்' போயிருக்கிற நேரத்தில் பெரிய பங்களாவில் அம்மு தன்னந்தனியாக அடைபட்டுக் கிடக்க வேண்டியிருக்கிறதே என்பதற்காகத்தான் சாம்பசிவம் அவளை ஜம்புநாதனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்தார்.

வாழ்க்கைப்பட்டு வருஷம் ஒன்றாகியும் அம்மு ஜம்புநாதன் வீட்டுக்குப் போகவில்லை. சாம்பசிவம் 'போ' என்று சொல்லவும் இல்லை. அவள், "நான் போக வேண்டாமா?" என்று பொறுப்பு அறிந்து கேட்கவும் இல்லை. கல்யாணம் ஆவதற்கு முன்னால் எப்படி இருந்தாளோ, அப்படியே போலீஸ் கான்ஸ்டபிள்களை விரட்டி வேலை வாங்கிக் கொண்டும் அப்பாவுக்கு அடிக்கடி 'விளையாட்டுக் கோசரம்' டெலிபோன் செய்து கொண்டும் இருந்து வந்தாள்.

ஜம்புநாதன் மட்டும் தான் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் மாப்பிள்ளை என்ற மதிப்பைக் கெடுத்துக் கொள்ளாமல் அடிக்கடி அவளைப் பார்க்க வந்து போய்க் கொண்டிருப்பான். இவ்வளவு தூரம் ஜம்பு பத்து தினங்களுக்கு ஒரு தடவை வந்து போகிறானே என்று சாம்பசிவத்திற்கு ஒரு நாள் திடீரென்று இரக்கம் பிறந்தது. அரசியல் கைதியைப் 'பரோலில்' விடுதலை செய்வது போல அம்முவை ஒரு மாதத்திற்கு அவனுடன் அனுப்பி வைக்க இஷ்டப் பட்டார்.

அம்மு புக்ககம் வந்து ஒரு வாரம் ஆயிற்று. அவளுக்குக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போலிருந்தது. தனக்கு அதிகாரம் செய்ய அந்த வீட்டில் ஒருவர் கூட இல்லை என்று உணர்ந்தது மட்டும் அல்லாமல், தன்னை அதிகாரம் செய்ய ஏற்கெனவே அங்கு நாத்தனார் முத்திரை குத்திக் கொண்டு மீனு என்று ஒருத்தி 'ஸர்வீஸில்' இருக்கிறாள் என்றும் அம்முவுக்குப் புரிந்தது.

மீனுதான் அந்த வீட்டில் சர்வாதிகாரி. ஜம்பு வெறும் பெட்டிப் பாம்பு. அக்காவை அமுல் பண்ண விட்டுவிட்டு அப்பாவியாக இருக்கிறான் என்று அம்மு அறிந்து கொண்டதும்தான் ஒரு சர்க்கிள் இன்ஸ்பெக்டர் பெண் என்ற சொரூபத்தைக் காட்டி விடத் துடித்தாள். அத்துடன் மீனு தன் கணவருக்குச் சொந்த அக்கா இல்லை. மூத்த தாரத்துப் பெண் அவள் என்ற இரகசியம் வெளிப் படவே

அவளது துடிதுடிப்பு மேலும் படபடப்புக் கொண்டது.

நல்ல வேளையாக அம்முவுக்கு அப்படிப்பட்ட அரிய சந்தர்ப்பம் அப்போது நேரவில்லை. அம்மு இரண்டு மாதமாக ஸ்நானம் பண்ணவில்லை என்று சாம்பசிவம் கேள்விப்பட்டுப் பறந்துவந்து பெண்ணைக் கூப்பிட்டுக் கொண்டுபோய் விட்டார். அவர் வந்த சமயத்தில் ஜம்பு வீட்டில் இல்லை என்பதைக்கூட லட்சியம் செய்யாமல், "நான் வந்து அழைத்துக் கொண்டு போனதாகச் சொல்லுங்கள்" என்று மீனாவிடம் இரண்டு வார்த்தை சொல்லி விட்டு ஒரு 'விஸிட்டிங் கார்'டை அடையாளத்திற்காகக் கொடுத்து விட்டுக் கிளம்பிவிட்டார் சாம்பசிவம்.

சாம்பசிவத்திற்கு உத்தியோகம், வீடு, வாசல் எல்லாம் ஒன்றுதான். எதிலும் கண்டிப்பும், கறார்தான்!

அந்தச் சம்பவத்திற்குப் பிறகு, இப்போதுதான் ஸ்ரீமந்தத்திற்கு அப்பாவும், பெண்ணும் வருகிறார்கள்!

★

**சா**ம்பசிவம் முன் பக்கத்து அறையில் வந்த பிரயாண அலுப்பைத் தீரக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார். அவரது குறட்டைக்குப் பங்கம் வந்துவிடாமல் இரண்டு போலீஸ் ஜவான்களும் பாராவில் இருந்தார்கள்.

பகல் இரண்டு மணி இருக்கும். சமையற்கட்டு அருகே உள்ள சிறிய கூடத்தில் ஜம்பு, மீனா, அம்மு எல்லோரும் பேசிக் கொண்டு இருந்தார்கள். முதலில் சுமுகமாக ஆரம்பமான பேச்சு சற்றுச் சூடு ஏற ஆரம்பித்தது. "இனி பிரசவத்திற்கு உன் அகமுடையான் போய்விட்டு எப்போது வரப்போகிறானோ!" என்றாள் மீனா.

அம்முவுக்குச் சுருக்கென்றது. "என் இஷ்டம்! நான் எப்பவாவது வருவேன். நீ யார் என்னைக் கேட்பதற்கு?" என்று படபடவென்று ஆரம்பித்தாள்.

அவ்வளவுதான்; அதற்குப் பிறகு அந்தச் சிறு பிரதேசத்தில் இடி இடித்துப் பெருமழை பெய்தது. ஜம்புநாதன் மின்னல் போலப் பாய்ந்து அம்முவின் கன்னத்தில் பளாரென்று ஒன்று வைத்தான்.



அதற்குப் பிறகு அந்த வீட்டில் பெரிய அமளி தலைதூக்கியது.

அம்மு அழுதுகொண்டே அப்பாவிடம் ஓடினாள். "அப்பா! இனி நான் ஒரு நிமிஷம் இந்த வீட்டில் தங்கமாட்டேன். அவனும் அக்காவும் சேர்ந்து கொண்டு என்னைப் படாத பாடு படுத்துகிறார்கள். 'அவர்' என்னைப் போட்டுக் கொல்லுகிறார்!" என்று 'ஹோ' வென்று அழுதாள்.

சாம்பசிவம் துள்ளிக்கொண்டு எழுந்தார். கண்களைத் துடைத்து விட்டபடி கையையும் காலையும் உதறிவிட்டு 'டிரில்' வாங்கினார். தான் ஒரு சர்க்கிள் இன்ஸ்பெக்டர், பத்து வருஷ காலமாகப் போலீஸ் இலாகாவில் அட்டகாசம் செய்யும் படே போலீஸ் புலி என்பதை நினைவு படுத்திக் கொண்டவர் போல நிமிர்ந்து உட்கார்ந்தார்.

"அவன் உன்னை அடித்தானா? எங்கே அடித்தான்?" என்று உறுமினார் சாம்பசிவம்.

அம்மு அசட்டுப் பெண். அவள் தன் கன்னத்தைக் காட்டினாள். அது சிவந்து இருந்தது.

சாம்பசிவம் எழுந்து நின்று தமது வார்ப் பெல்டைக் கழற்றி இன்னொரு பக்கம் போட்டுக் கொண்டார். அவருடைய உதடுகள் துடித்தன.

"வாட். நான்ஸென்ஸ்! தெரியாமல் என் பெண்ணை ஒரு போக்கிரிக்குக் கொடுத்துவிட்டேன்! ஏ.. பெண்ணைத் தொட்டு அடிக்க அவனுக்கு எவ்வளவு தைரியம்!" என்று கர்ஜித்தார்.

"...அம்மு! கிளம்பு! ஸ்ரீமந்தமும் வேண்டாம், மண்ணாங்கட்டியும் வேண்டாம். ஆமாம், இது கண்டிப்பு. நான் சொன்னால் சொன்னதுதான்! டேய் 464! டேய் 636!! போய் ஒரு வண்டி கொண்டு வாங்கடா! ரயிலுக்குப் போக வேண்டும்; ஊம்!" என்று ஆக்ஞாபித்தார் சர்க்கிள்—இன்ஸ்பெக்டர். அந்த ஜவான்கள் 'பட்'டென்று சலாம் செய்துவிட்டுப் பறந்து ஓடினார்கள்.

உள்ளே சென்று காப்பி கொண்டு வந்தாள். அதைப் பத்து மிடறுகளுக்கு ஒரு தனியாகக் குடித்து முடித்தான் சுந்தரவதனம். தாயார், "யாரோ சுகந்தா என்று சொன்னாயே, அவளைப் போய்ப் பார்த்துவிட்டு வரலாமா?" என்று ஆரம்பித்தாள்.

'குபக்' என்று அழுகை பொத்துக் கொண்டு வந்தது சுந்தரவதனத்துக்கு.

"என்னடா, என்ன? ஏன் அழுகிறாய்?" என்று பதறினாள் தாயார்.

"வேண்டாம், அம்மா! எனக்கு வேண்டவே வேண்டாம், அம்மா!" என்று கதறினான் சுந்தரவதனம்.

"என்ன வேண்டாம்? சுகந்தாதானே வேண்டாம் என்கிறாய்?—விட்டுத் தள்ளு; வேறு பெண்ணைப் பார்த்தால் போகிறது!"

"ஐயய்யோ! இந்தப் பெண்களே எனக்கு வேண்டாம், அம்மா!"

"நல்லா யிருக்குடா, நீ சொல்வது! நானும் பெண்தானே? என்னைக்கூட வேண்டாம் என்பாயோ?" என்றாள் தாயார்.

"அப்புறம் அதைப்பற்றி யெல்லாம் பேசிக் கொள்ளலாம். இப்பொழுது என்னைக் கொஞ்ச நேரம் நிம்மதியாக இருக்க விட மாட்டாயா, அம்மா!" என்று கெஞ்சினான் சுந்தரவதனம்.

'என்னமோ ஏதோ' என்று தாயார் போய் விட்டாள்.

தலையில் வைத்த கை வைத்தபடி யோசித்தான் சுந்தரவதனம். என்னவெல்லாமோ எண்ணி எண்ணி அலை பாய்ந்தது அவன் வெள்ளை உள்ளம்.

சிறிது நேரத்துக்குப் பிறகு அவன் என்ன நினைத்தானோ என்னமோ, ஒரு துண்டுக் கடிதத்தை எடுத்து அதில் 'படபட' வென்று இரண்டு வரிகளை எழுதினான். பிறகு, அதை மடித்துத் தன் சட்டைப் பையில் வைத்துக் கொண்டான். தாயார், "எங்கேடா போகிறாய், எங்கேடா போகிறாய்?" என்று கேட்டுக் கொண்டிருக்கும் போதே, அவன் இரண்டே அடியில் வீட்டை விட்டு வெளியேறி விட்டான்.

சுகந்தாவின் வீட்டுக்கு அந்தச் சமயம் ஏரோப்ளேன் போவதாயிருந்தால், அதில் தான் போயிருப்பான் சுந்தரவதனம். இல்லாத குறையை முன்னிட்டு அவளுடைய வீட்டுக்கு அவன் அன்று பஸ்ஸில் போனான். அவன் சுகந்தாவின் வீட்டை அடையும்போது மணி இரவு ஒன்பதுக்கு மேல் இருக்கும். அவள் மேஜைக்கு அருகில் உட்கார்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தாள். வீட்டில் அவளைத் தவிர வேறு யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. இருந்திருந்தால்தான் என்ன? அவன் இம்முறை தயங்கவுமில்லை; தாமதிக்கவுமில்லை. நேரே அவளிடம் சென்றான்; தன் சட்டைப் பையிலிருந்த கடிதத்தை எடுத்தான்; அவளுக்கு நேரே அதை வீசி எறிந்தான்; திரும்பினான்.

அதே சமயத்தில் 'டுமீர்' என்ற சத்தம் எங்கிருந்தோ ஒலித்தது.

சுகந்தா கையில் பிடித்த கடிதத்துடன் திரும்பிப் பார்த்தாள். சுந்தரவதனத்தின் உயிரற்ற உடல் கீழே விழுந்து கிடந்தது. எதிர்த்தாற் போல் சிவந்த கண்களுடனும் கையில் ரிவால்வருடனும் பூபேந்திரநாத் வந்து கொண்டிருந்தான்.

சுகந்தா நடுங்கினாள்!

அவளுடைய கன்னத்தில் 'பளீ'ரென்று ஓர் அறை கொடுத்துவிட்டுக் கையிலிருந்த கடிதத்தைப் பிடுங்கி வாசித்துப் பார்த்தான் பூபேந்திரநாத்.

"சுகந்தா,

என்னுடைய கடைசி வேண்டுகோள் இது தான்—என்னைக் கை விட்டது போல் என் சகோதரனைப் போன்ற பூபேந்திரநாத்தையும் கை விட்டு விடாதே! —சுந்தரவதனம்."

அவ்வளவுதான்; அவன் கையிலிருந்த ரிவால்வர் நழுவிக் கீழே விழுந்தது. தன் கண்களில் துளித்த நீரைக் கூடத் துடைக்காமல் அவன் சுந்தரவதனத்தின் உயிரற்ற உடலைத் தூக்கித் தோளின் மேல் போட்டுக்கொண்டு போலீஸ் ஸ்டேஷனை நோக்கி ஓடினான்.

* * *

மறுநாள் காலை வெளியான பத்திரிகைகளில் பின்வரும் தலைப்புகள் கொட்டை எழுத்துக்களில் பிரசுரிக்கப்பட்டிருந்தன:

காதல் நாடகத்தில்
கோரக் கொலை

சுந்தரவதனம் என்னும் இளைஞர்
சுட்டுக் கொல்லப்பட்டார்

சுட்டுக் கொன்ற பூபேந்திரநாத் போலீஸ்
இன்ஸ்பெக்டரிடம் சரணாகதி யடைந்தார்!

"நம்முடைய கல்யாணத்தைப் பற்றி என்று சொல்லாதீர்கள்; உங்களுடைய கல்யாணத்தைப் பற்றி என்று சொல்லுங்கள்......"

"ஏன், நீ என்னைக் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லையா?"

"கல்யாணம் என்ற பெயரால் என்னைத் தங்கள் அடிமையாகச் சொல்கிறீர்களா?"

"அடிமை! — காதலில் யாருக்கு யார் அடிமை?"

"உஸ்......"

அதே சமயத்தில் அதே கார் வந்து நின்றது. 'டக்' என்ற சத்தம்; கதவு திறந்தது. சுந்தரவதனத்தை நோக்கி, 'தாங்க் யூ!' என்று சொல்லிக் கொண்டே சுகந்தா காரில் ஏறினாள். மீண்டும் 'டக்' என்ற சத்தம்; கதவு மூடிக் கொண்டது. கார் பறந்தது.

பூபேந்திரநாத் கையில் புகைந்து கொண்டிருந்த சிகரெட் துண்டைக் கடைசி கடைசியாக ஓர் இழுப்பு இழுத்துக் கீழே போட்டான். 'பூட்' அணிந்த காலால் அந்தச் சிகரெட் துண்டை மிதி மிதி என்று மிதித்துத் துவைத்தான். பிறகு, மிடுக்குடன் சுகந்தாவின் பக்கம் திரும்பி, "யார் அவன்? சிநேகிதன் என்கிறாய்; காதல், கீதல் என்று என்னவெல்லாமோ உளறுகிறானே!" என்றான்.

"அது ஒரு பைத்தியம்; அதற்குத் தன் மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ளத் தெரியவில்லை!" என்றாள் சுகந்தா வெறுப்புடன்.

"அவன் அடிக்கடி உனக்குத் தொந்தரவு கொடுக்கிறானா, என்ன? அப்படி ஏதாவது இருந்தால் சொல்—ஒரு நிமிஷத்தில் நான் அவனைத் தொலைத்துவிடுகிறேன்!" என்றான் பூபேந்திரநாத்.

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை!" என்றாள் சுகந்தா.

பூபேந்திரநாத் ஒரு காரணமும் இல்லாமல் சிரித்துக் கொண்டே அவளுடைய முகவாய்க் கட்டையை லேசாகக் கிள்ளப் போனான்; அந்த இரும்புக் கரத்தை எதிர்கொண்டு விரதபங்கம் அடைந்திருந்த தன் பூங்கரத்தால் பற்றி, அவனுடைய கன்னத்தில் ஒரு செல்லத் தட்டுத் தட்டிவிட்டுச் சிரித்தாள் சுகந்தா.

5

மறுநாள் என்றுமில்லாத நிருதாளாய் மானேஜருடைய வசவுகளுக்கிடையே தன்னுடைய வேலைகளை ஒருவாறு செய்து முடித்துவிட்டு வீட்டுக்கு வந்தான் சுந்தரவதனம். அதற்கடுத்த நாள் அவனுக்குச் சுகந்தாவிடமிருந்து ஒரு கடிதம் வந்திருந்தது.

"பூபேந்திரநாத்தின் விருப்பப்படி நேற்றுடன் நான் கலாசாலையை விட்டுவிட்டேன்; என்னை மறந்துவிடுங்கள். எனக்கு நீங்கள் கடிதம் எழுதவும் வேண்டாம்; பார்க்க வரவும் வேண்டாம்.
— சுகந்தா."

இந்தக் கடிதத்தைப் படித்த பிறகு அவனால் வேலை செய்யவே முடியவில்லை. மானேஜரிடம் தலையை வலிக்கிறதென்று சொல்லி லீவு பெற்றுக் கொண்டு வீடு வந்து சேர்ந்தான். வேளையற்ற வேளையில் வீட்டுக்கு வந்த தன் மகனைக் கண்டதும் தாயார் பரபரப்புடன் ஓடி வந்து, "என்னடா, என்ன விஷயம்?" என்று விசாரித்தாள்.

"தலைவலி, அம்மா!" என்றான் சுந்தரவதனம் நெற்றியை இரு புறத்திலும் அழுத்திப் பிடித்துக் கொண்டே.

"சூடாகக் காப்பி கொண்டு வரட்டுமா?"

"கொண்டு வாயேன்!"

"என்டா இப்படி எரிந்து விழுகிறாய்?" என்று அலுத்துக் கொண்டே தாயார்



இடது பக்கத்தில் இருக்கும் ஸ்திரீ:— மாப்பிள்ளை ஸார்! ஹாரத்திக்குப் போடும் ரூபாயை மெள்ளப் போடும். அதோ, இன்கம்டாக்ஸ் ஆபீஸர் உட்கார்ந்து பார்த்துக் கொண்டு இருக்கிறார். அப்புறம் அந்த வரும்படியை ஏன் கணக்கில் காட்டவில்லை என்று அவர் கோபித்துக் கொள்வார்!

‘இந்தச் செய்தியை அவள் அறிந்தால் எவ்வளவு சந்தோஷப்படுவாள்!’ என்று ஒரு கணம் நினைத்துப் பார்த்தான். அவள் முகம் மலர்வதற்குப் பதிலாக இவன் முகம் மலர்ந்தது!

திடீரென்று ஒரு யோசனை தோன்றிற்று அவனுக்கு. அதன்படி மாலை நேரங்களில் அவளுடைய வீட்டைச் சுற்றி வலம் வருவதென்றும், அவள் வாசலுக்கோ மாடிக்கோ வந்தால் சற்றுத் தூரத்தில் இருந்தபடி சைகை காட்டி அவளை அழைப்பதென்றும், அப்புறம் அவளிடம் விஷயத்தைச் சொல்லி விட்டு ஒரே ஓட்டமாய் வீட்டுக்கு ஓடி வந்து விடுவதென்றும் அவன் தீர்மானித்தான்.

அவனுடைய தீர்மானம் அமுலுக்கு வருவதற்குச் சட்டசபையின் அங்கீகாரமோ, கவர்னர் - ஜெனரலின் கையெழுத்தோ வேண்டியதில்லையல்லவா? ஆகவே, அன்று மாலையே அவன் தீர்மானம் அமுலுக்கு வந்தது. அதாவது, அன்றையதினமே அவன் ஆபீஸிலிருந்து கிளம்பியதும் நேரே சுகந்தாவின் வீட்டுக்கு எதிர்த்தாற் போல் வந்து நின்று விட்டான்!

ஒரே இடத்தில் நின்று கொண்டிருந்தால் பிறருடைய சந்தேகத்துக்கு இடம் கொடுப்பதாகுமல்லவா? ஆகவே, அவன் அப்படியும் இப்படியுமாக நடை போட்டுக் கொண்டிருந்தான்.

மணி ஆறு, ஏழு, எட்டு என்று ஓடிக்கொண்டே இருந்தது. அவள் வாசலுக்கும் வரவில்லை, மாடிக்கும் வரவில்லை.

இப்படி ஒருநாள், இரண்டு நாட்கள் அல்ல; பல நாட்கள் அவன் அவளைப் பார்க்கச் சென்று ஏமாற்றத்துடன் வீடு திரும்பினான்.

அப்பொழுதும் அவனுடைய ஆசை நிராசையாகி விடவில்லை. எப்படியும் அவளைப் பார்த்துவிடலாம் என்ற நம்பிக்கையுடன் காலை மாலை வேளைகளில் ‘கன்னிமாரா லைப்ரரி’க்குப் போனான்; சினிமா தியேட்டர்களில் நடக்கும் பகல் காட்சிகளுக்குச் சென்றான்; கார்னிவல், கண்காட்சி ஆகியவற்றுக்குச் சென்று சுற்றிச் சுற்றியலைந்தான். ஊஹூம்; அவளைப் பார்க்கவே முடியவில்லை.

அதற்குள் கோடை விடுமுறையும் எப்படியோ கழிந்துவிட்டது. கலாசாலைகளும் திறக்கப்பட்டு விட்டன. சுகந்தாவின் பேட்டிக்காக இவ்வளவு நாட்கள் காத்திருந்ததெல்லாம் போதாதா? இன்னும் கடிதம் வேறு எழுதிப் போட்டு விட்டுக் காத்திருக்க வேண்டுமா? — வேண்டாம், வேண்டவே வேண்டாம் என்று கலாசாலை திறந்த முதல் நாள் மாலையே அவன் நேரில் ஆஜராகி விட்டான்!

“ஹல்லோ! எங்கே இப்படி திடுதிப்பென்று வந்து விட்டீர்கள்?” என்று ஒரு தினுசாகக் கேட்டாள் சுகந்தா.

“வழக்கம் போலத்தான்!” என்றான் சுந்தரவதனம் சிரித்துக் கொண்டே.

“வழக்கம்போலவா! கடிதம் எழுதி விட்டுத்தானே நீங்கள் வருவது வழக்கம்?”

“ஆமாம், அதற்கு இப்பொழுது நேரமில்லை......”

“நேரமில்லையா! ரொம்ப அழகுதான்!” என்று சொல்லிவிட்டு எங்கேயோ பார்த்துக் கொண்டே சிரித்தாள் சுகந்தா.

அதே சமயத்தில் அங்கே ஒரு புத்தம் புதிய கார் வந்து நின்றது. அதிலிருந்து அழகாக உடை தரித்திருந்த ஓர் அழகான வாலிபன் இறங்கினான். அவன் இறங்கியதும் இறங்காததுமாக இருக்கும்போதே சுந்தரவதனத்தைச் சுட்டிக் காட்டி, “இவன்



யார்?" என்று முகத்தைச் சுளித்துக் கொண்டு கேட்டான்.

"என் சகோதரன்!" என்றாள் சுகந்தா.

சுந்தரவதனத்தின் தலை கிறுகிறுவென்று சுழன்றது. அந்த நிலையிலும் அவன் காரிலிருந்து இறங்கியவர் யார் என்று அறிய விரும்பி, "இவர் யார்?" என்று நாக் குழறக் கேட்டான்.

"கேள்விப் பட்டிருப்பீர்களே, பூபேந்திரநாத் என்று! அவர் இவரேதான்; 'ஜெய் ஹிந்த்பிக்சர்'ஸின் பங்குதாரர்களில் ஒருவர். கோடை விடுமுறையின்போது நான் சந்திமலைக்குப் போயிருந்தேன். அங்கே இவருடைய அபூர்வமான நட்பு எனக்குக் கிடைத்தது!" என்று சுகந்தா பெருமையடித்துக் கொண்டாள்.

அதற்குள் பூபேந்திரநாத் பொறுமை இழந்து, "சரி, போவோமே!" என்றான் சுகந்தாவின் கரத்தைப் பற்றி.

அடுத்த நிமிஷம் சுகந்தா அவனுடன் காரில் ஏறிக்கொண்டாள். சுந்தரவதனத்தின் முகத்தில் கரியைப் பூசுவதற்குப் பதிலாக மண்ணைப் பூசிவிட்டுக் கார் பறந்தது.

## 4

அன்றிரவு சுந்தரவதனத்துக்கு நல்ல ஜுரம். பேச்சு மூச்சே இல்லை. பெற்றோர் பயந்து போய் டாக்டருக்கு மேல் டாக்டராக வரவழைத்தனர். ஒரு வார காலம் வீடு ஒரே அமர்க்களமாயிருந்தது. அதற்குப் பிறகு சுந்தரவதனம் சுய நினைவை அடைந்தான்.

சுய நினைவு வந்ததும் பழைய நினைவுகளெல்லாம் அவனுடைய கவனத்துக்கு வந்தன. எல்லாம் வெறும் கனவுபோல அவனுக்குத் தோன்றிற்று. சட்டைப் பையில் செருகி வைத்திருந்த பார்க்கர் பேனாவை எடுத்தான். அதில் 'சுகந்தா' என்ற பெயர் பொன்னெழுத்துக்களில் பொறிக்கப்பட்டிருந்தது. அந்த எழுத்துக்கள் 'பழைய நினைவுகளெல்லாம் வெறும் கனவு அல்ல; நனவுதான்!' என்று சொல்வதுபோலிருந்தது. அவன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

ஒருவேளை சந்தர்ப்பத்தை யொட்டி, 'என் சகோதரன்' என்று அவள் சொல்லியிருக்கலாமல்லவா? அவள் விரும்பாமலே அவன் அவளைக் காதலித்திருக்கலாம். பெண்களுக்கு இயற்கையாயுள்ள இரக்க சுபாவத்தால் எடுத்ததும் அவன் மனதைப் புண்படுத்தவானேன் என்று அவள் அப்படிச் சொல்லியிருக்கலாம்......

அதற்காக அவள் அவனுடன் காரில் செல்வானேன்? — உன்னை ஒரு பிரபல நட்சத்திரமாக்கி விடுகிறேன் என்று அவன் ஒருவேளை ஆசை காட்டியிருப்பானோ......?

அவள் விரும்பாமல் அவன் காதலிப்பதாவது! 'சந்திமலையில் இவருடைய அபூர்வமான நட்பு எனக்குக் கிடைத்தது' என்று அன்று எவ்வளவு பெருமையுடன் அவள் சொன்னாள்......!

ஏன், அவனைப் பெருமைப்படுத்த வேண்டுமென்பதற்காக அவள் அப்படிச் சொல்லியிருக்கக் கூடாதா......?

அழகுதான்!—இவள் எதற்காக அவனைப் பெருமைப் படுத்துவதாம்?

சரி, எதற்கும் இன்னொரு முறை போய் அவளைப் பார்த்துத்தான் விடுவோமே!

அப்படியே அன்று மாலை அவன் அவளை மீண்டும் சந்திக்கச் சென்றான். சிரித்துக் கொண்டே கலாசாலையை விட்டு வெளியே வந்தாள் சுகந்தா.

"உன்னை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை......" என்று சற்றுக் கடுமையாகவே ஆரம்பித்தான் சுந்தரவதனம்.

"ரொம்ப சந்தோஷம்!" என்றாள் சுகந்தா.

"விளையாடுவதற்கு இது நேரமில்லை. நம்முடைய கல்யாணத்தைப் பற்றி......"



நோயாளி:—நான் நாலணாவை ஒரு வாரத்துக்கு முந்தி விழுங்கி விட்டேன். அதை எடுக்க வேணும்......
டாக்டர்:—அதற்கு இத்தனை நாள் கழித்து வந்திருக்கிறீரே! உடனே வருவதற்கு என்ன?
நோயாளி:—அந்த நாலணாவுக்கு இப்பொழுதுதான் தேவை ஏற்பட்டிருக்கிறது!



மனைவி:—இன்றைக்கு ‘எக்ஸிபிஷன்’ போகலாமல்லவா? அங்கே எனக்கு ஒரு ‘பிரிட்ஜ்’ வளையல், கொள்ளேகால் அரக்குப் புடவை, ஒரு நெக்லேஸ், அம்பிக்கு ஒரு சைக்கிள் வாங்க வேண்டும்......சரி, உங்களுக்கு என்ன வேண்டும்?

கணவன்:—எனக்கு மயக்கம் வராமலிருப்பதற்காக ஒரு மருந்து வாங்க வேண்டும்......!

---

இருவரும் ஒருவரையொருவர் ஆவேசத்துடன் நெருங்கி உட்கார்ந்தனர். கடல் அலைகளைப் போல் சீறி யெழும் இளமை உணர்ச்சியால் தங்கள் அறிவையும் ஓரளவு இழந்தனர். அவன் அவளுடைய கரத்தைப் பற்றினான். அவள் அவனுடைய கரத்தைப் பற்றினாள். அவ்வளவுதான்; அவர்களுடைய தோள்கள் இரும்பைக் கண்ட காந்தம்போல் இணைந்தன; இதழ்கள் நெருங்கின......

ச்...ச்.. ச்...ச்...ச்...!

“அப்பப்பா! என்ன சுகம்! என்ன சுகம்! இதற்காக வீட்டில் உள்ளவர்களிடம் எத்தனை பொய் சொல்லிவிட்டு இங்கே வரவேண்டியிருக்கிறது!” என்று சுகந்தா ஆழ்கடலிலிருந்து, அடிவானத்திலிருந்து சொல்வதுபோல் மிக மிக மெல்லிய குரலில் சொன்னாள்.

“ஆமாம், எப்பொழுதும் நாம் இப்படியே இருந்தால்...?” என்றான் சுந்தரவதனமும் அதே குரலில்.

“...வீட்டில் உள்ளவர்கள் ‘எங்கள் குழந்தைகளைக் காணோம்’ என்று போலீஸாரிடம் புகார் செய்ய வேண்டியதுதான்!” என்றாள் சுகந்தா.

அடுத்த நிமிஷம் இருவரும் ‘களுக்’ கென்று சிரித்தனர்; பேசுவதை நிறுத்தினர்; தங்களைத் தாங்களே மறந்தனர்.

இப்படி எத்தனையோ நாட்கள்!

அதற்குப் பிறகு அன்புக்கு அடையாளமாக ஏதாவது வேண்டாமா? அதற்காக அவன் ஒரு பார்க்கர் பேனாவை வாங்கி அவளுக்கு அனுப்பினான்; அவள் பதிலுக்கு ஒரு கைக்கடிகாரத்தை வாங்கி அவனுக்கு அனுப்பினாள்.

இப்படியாக அவர்களுடைய காதல் வளர்ந்தது. வருஷத்துக்கு ஒரு தடவை கோடை விடுமுறை வரும்போது மட்டும் அவர்களுடைய காதல் செய்கைகள் தாற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டன. அது கூட வேறு வழியின்றித்தான்!

ஆனால் கல்யாணமாவதற்கு முன்னால் தங்கள் காதலில் களங்கம் ஏற்படுவதற்கு மட்டும் சுந்தரவதனம் இடம் கொடுக்கவில்லை. ஏனெனில், அவன் உண்மையிலேயே நல்லவனாயிருந்தான்!

3

பி. ஏ. பரீட்சையில் தேறியவுடன் சுந்தரவதனம் உத்தியோக வாழ்க்கையில் ஈடுபட்டான். பெற்றோர் அவனுடைய கல்யாணத்தைப் பற்றிய பேச்சை ஆரம்பித்தார்கள். சுந்தரவதனம் அவர்களிடம் சுகந்தாவைப் பற்றித் துணிந்து கூறினான். மாறி வரும் சமுதாயத்தை எதிர்த்து நிற்க விரும்பாமல் அவனுடைய விருப்பத்துக்கு அவர்கள் சம்மதித்தனர். சுந்தரவதனம் தன்யனானான். தன்னுடைய பெற்றோர் சம்மதித்த அந்த நிமிஷத்திலேயே தனக்குச் சுகந்தா மாலையிட்டு விட்டதாக அவன் கருதினான்.

உடனே இந்தச் சுபச் செய்தியைச் சுகந்தாவிடம் தெரிவிக்க வேண்டாமா? அதற்காக அவன் அவளுடைய வீட்டை நோக்கி ஓட்டமாய் ஓடினான். வழியில்தான் கல்யாணமாவதற்கு முன்னால் அவளுடைய வீட்டுக்குத் தான் பலர் அறியப் பகிரங்கமாகச் செல்ல முடியாது என்னும் உண்மையை அவன் உணர்ந்தான். சரி, ஒரு கடிதமாவது உடனே எழுதிப் போட்டு விடுவோம் என்று அவசர அவசரமாக வீட்டுக்கு வந்தான். கடிதம் எழுதி உறையில் நுழைக்கும்போது அவளுடைய கலாசாலைக்கு அப்போது விடுமுறை என்னும் விஷயம் அவனுக்கு ஞாபகம் வந்தது. கடிதத்தைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்து எறிந்துவிட்டு யோசித்தான், யோசித்தான், யோசித்தான் — அப்படி யோசித்தான். ஒரு வழியும் புலப்படவில்லை.

# நல்லவன்

விந்தன்

"எங்கள் குழந்தை சுரேந்திரனின் பிறந்த நாள் விழாவுக்குத் தங்கள் வரவை ஆவலுடன் எதிர்பார்க்கிறோம்" என்று நண்பன் லக்ஷ்மி - நரசிம்மனிடமிருந்து சுந்தரவதனத்துக்கு அழைப்பு வந்திருந்தது. அந்த அழைப்பை ஏற்றுக் கொண்டு மறு நாள் காலை அவன் கிளம்பினான். சுந்தரவதனம் நுங்கம்பாக்கம் பஸ் ஸ்டாண்டை அடைவதற்கும் பஸ் வந்து நிற்பதற்கும் சரியாயிருந்தது. பஸ்ஸில் பிரயாணிகள் யாரும் நின்று கொண்டிருக்கவில்லை. என்றுமில்லாத இந்த அதிசயத்தைப் பார்த்ததும் உட்காருவதற்கு இடம் கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் சுந்தரவதனம் பஸ்ஸில் ஏறினான். அவனுடைய நம்பிக்கை வீணாகவில்லை; பஸ்ஸில் ஓரே ஒரு ஆசாமி உட்காருவதற்கு இடமிருந்தது. ஆனால் அந்த இடம் ஒரு நாரீமணிக்கு அடுத்தாற்போல் இருந்து தொலைந்தது!

'இது என்ன தர்மசங்கடம்!' என்று தயங்கியவனாய், அந்த இடத்துக்கு அருகே வந்து நின்றான் சுந்தரவதனம்.

வேறு எந்த நாகரிக யுவனுக்காவது இந்தக் கிடைத்தற்கரிய சந்தர்ப்பம் கிடைத்திருந்தால் அவன் விட்டிருக்கமாட்டான்; உடனே பயன்படுத்திக் கொண்டிருப்பான். சுந்தரவதனம் அவ்வாறு பயன்படுத்திக் கொள்ளவில்லை; ஏனெனில் அவன் நல்லவனாயிருந்தான்!

"சும்மா உட்காருங்க, ஸார்!" என்றான் கண்டக்டர்.

சுந்தரவதனம் ஓர் அசட்டுப் புன்னகை புரிந்து விட்டுப் பேசாமலிருந்தான்.

அந்தப் பெண் அப்பொழுதுதான் அடுப்பங்கரைக்குச் சென்று சாம்பரில் புரண்டு விட்டு வந்த பூனை மாதிரி முகத்தில் பவுடரை வேண்டிய மட்டும் அப்பிக்கொண்டு வந்திருந்தாள். தலையைச் சுற்றி வான வில்லைப்போல் மல்லிகைப் பூச்சரம் வேறு கட்டியிருந்தாள். இரண்டின் மணமும் கலந்து வீசி, அந்தப் பஸ்ஸில் பிரயாணம் செய்து கொண்டிருந்தவர்களின் உள்ளத்தில் என்னென்னவோ நினைவுகளையெல்லாம் எழுப்பிக் கொண்டிருந்தன. அவள் உடுத்தியிருந்த 'டிஷ்யூ' சேலை வேறு அவர்களுடைய கவனத்தை வெகுவாகக் கவர்ந்திருந்தது. இவற்றுக்கெல்லாம் காரணமான அந்த அப்ஸரஸோ ஒன்றும் அறியாதவள் போல் 'உம்' என்று 'மூஞ்'சை வைத்துக்கொண்டிருந்தாள். நல்லவனான சுந்தரவதனம்கூட அவளைப் பார்க்காதவன் போல் பார்க்க வேண்டியதாயிற்று என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

டிக்கெட்டுக்காக அவளை நெருங்கிய கண்டக்டர், "உட்காருங்க, ஸார்!" என்றான் மீண்டும்.

அந்தப் பெண் தலை நிமிர்ந்தாள்; தன் மை தீட்டிய விழிகளால் சுந்தரவதனத்தை ஒரு முறை நோக்கினாள். பிறகு, சில பத்தாம் பசலிப் பெண்களைப் போல அவள் தலையைக் கீழே தாழ்த்திக் கொள்ளவில்லை; வெண் பற்கள் பளிச்சிடத் தன் செவ்விதழ்களைத் திறந்தாள். 'கிச்சுக் கிச்'சென்னும் கிளியினும் இனிய குரலில், "பரவாயில்லை; உட்காருங்கள்!" என்றாள்.

சுந்தரவதனமும் 'பரவாயில்லை' என்று நினைத்தானோ என்னமோ — உட்கார்ந்து விட்டான்!

அடுத்த நிமிஷம் அவன் கண்டக்டரிடம் ஒரு ரூபாயைக் கொடுத்து, "மாம்பலம்...!" என்றான்.

கண்டக்டர் இடைமறித்து, "இரண்டு டிக்கெட்டா!" என்றான் குறும்புடன்.

அந்த வனிதாமணி அவனை விழுங்கிவிடுபவள் போல் பார்த்தாள்.

"இல்லை; ஒரு டிக்கெட்!" என்றான் சுந்தரவதனம்.

அவனிடம் ஒரு டிக்கெட்டைக் கிழித்துக் கொடுத்து விட்டுக் கண்டக்டர் மேலே சென்றான். அந்த மாதரசி ஏற்கனவே டிக்கெட் வாங்கியிருந்தாள்!

பஸ் மாம்பலத்தை யடைந்ததும் சுந்தரவதனம் இறங்கினான். அவனுடன் எதிர்பாராத விதமாக அந்த எழிலரசியும் இறங்கினாள். அவளைக் கவனிக்காதவன் போல் சுந்தரவதனம் தன்னுடைய நண்பன் வீட்டை நோக்கி நடந்தான். காரணம், அவன் நல்லவனாயிருந்ததுதான்!

வீட்டு வாசலில் நின்றபடி நரசிம்மன் விழாவுக்கு வருபவர்களையெல்லாம் வரவேற்று உபசரித்துக் கொண்டிருந்தான்

அவன் சந்திரவதனத்தைக் கண்டதும் ஒரு குதி குதித்து, "வாடா, வா! எப்பொழுது உனக்குக் கல்யாணமாயிற்று? எனக்குக் கூடச் சொல்லவில்லையே!" என்றான்.

இதைக் கேட்டதும் சந்திரவதனத்துக்குத் தன்னை யாரோ தூக்கி வாரிப் போடுவது போலிருந்தது. அவன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். டஸ்ஸில் கண்ட அந்த அப்ஸரஸ் கன்னங் குழியிடச் சிரித்த வண்ணம் நின்று கொண்டிருந்தாள்!

சந்திரவதனம் அவனை வெறித்துப் பார்த்தான். அவனை முந்திக் கொண்டு அவள் உள்ளே சென்றாள். அங்கே லக்ஷ்மி அவளுக்கு 'ராஜ-உபசாரம்' செய்தாள். அது மட்டுமல்ல; அவளுடைய கரத்தைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துக் கொண்டு வெளியே வந்து, "உங்களிடம் என்னுடைய சிநேகிதி சுகந்தாவைப் பற்றி அடிக்கடி சொல்வேனே, அவள்தான் இவள்!" என்று வேறு நரசிம்மனுக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள்.

"மன்னிக்கணும்; நான் தவறாக நினைத்து விட்டேன்!" என்றான் நரசிம்மன்.

"பரவாயில்லை!" என்றாள் சுகந்தா.

"யாரைப் பரவாயில்லை என்கிறீர்கள்? இதோ நிற்கிறானே, இந்தச் சந்திரவதனத்தையடா!" என்றான் நரசிம்மன் சிரித்துக் கொண்டே.

சுகந்தாவும் பதிலுக்குக் கலகல வென்று நகைத்துக் கொண்டே லக்ஷ்மியுடன் உள்ளே சென்றுவிட்டாள்.

கதாசிரியர்களின் பாஷையில் அன்றுதான் சந்திரவதனத்துக்கும் சுகந்தாவுக்குமிடையே 'காதல்' மூண்டு விட்டது!



2

எந்த விதமான யோக்கியதையும் இல்லாத ஒருவனுக்குத் திடீரென்று பணமோ, பதவியோ கிடைத்து விழுந்ததென்று வைத்துக் கொள்ளுங்கள் — அவன் என்ன நினைப்பான்? அதற்குக் காரணம் தன்னுடைய அதிர்ஷ்டம் என்று நினைப்பான்; அல்லது கடவுள் என்று நினைப்பான். அதேமாதிரி தான் சந்திரவதனமும் நினைத்தான். அதாவது, தன்மேல் சுகந்தா காதல் கொண்டதற்குக் காரணம் தான் அல்ல; தன்னுடைய அழகும் அல்ல; சந்தர்ப்ப விசேஷமும் அல்ல; இளம்பிராயத்தில் ஏதேச்சையாக ஏற்படும் கோளாறும் அல்ல; அதிர்ஷ்டமும் கடவுளும்தான் காரணம் என்று அவன் நம்பினான். 'தெய்வீகக் காதல்' என்று உலகத்திலேயே இல்லாத ஏதோ ஒன்றைச் சொல்கிறார்களே, அது உண்மையில் இதுவாகத்தான் இருக்க வேண்டுமென்றும் அவன் கருதினான்.

அப்புறம் கேட்கவேண்டுமா? காதலுக்கு முதற்படியான கடிதப் போக்குவரத்து ஆரம்பமாயிற்று. வீட்டில் 'பெற்றோர்' என்னும் பெயருடன் உள்ள 'முட்டாள்'களுக்குப் பயந்து அந்த 'மேதாவி'கள் தங்கள் தங்கள் கலாசாலைகளின் விலாசத்துக்குக் கடிதம் எழுதிக் கொண்டனர். 'உன்னை நினைக்கும்போதெல்லாம் பவுடரின் மணமும் மல்லிகைப் பூவின் மணமும் கலந்து வந்து என் மூக்கைத் துளைக்கிறது' என்று அவன் எழுதினான்; 'உங்களை நினைக்கும்போதெல்லாம் அன்று நீங்கள் பஸ்ஸில் புரிந்த அந்த அசட்டுப் புன்னகை என்னுடைய நினைவுக்கு வருகிறது' என்று அவள் எழுதினாள்.

வெறும் கடிதத்தோடு திருப்தியடைந்து விட முடியுமா?—காதலுக்கு நிலைக்களனான கடற்கரையில் இருவரும் அடிக்கடி சந்தித்தனர். வெளிச்சம் இருக்கும் வரை போனால் போகிறதென்று தங்களுக்கிடையே சிறிது இடைவெளி விட்டு உட்கார்ந்து பேசினர். 'சுகந்தா! — ஆஹா! எவ்வளவு பொருத்தமான பெயர்!' என்றான் அவன். 'சந்திரவதனம்! — ஆஹா! எவ்வளவு அழகான பெயர்!' என்றாள் அவள். கடற்கரையில் வெளிச்சம் மறைந்து, ஜனக்கூட்டமும் ஓரளவு கலைந்து சென்ற பிறகு




## ஜீவனாம்சம்!

கோர்ட்டில் ஒரு ஸ்திரீ புருஷன்மீது ஜீவனாம்ச வழக்கு தொடர்ந்தாள். நீதிபதி ஸ்திரீயின் பக்கம் தீர்ப்புக் கூறும்போது முடிவாகப் புருஷனைப் பார்த்து, "மாதம் இருபத்தைந்து ரூபாய் ஜீவனாம்சம் கொடுப்பது என்று தீர்மானித்திருக்கிறேன்......" என்றார்.

புருஷன்:—தங்களுடைய உதவிக்கு ரொம்ப வந்தனம்! நானும் என்னால் ஆனது இந்த, பத்து முடிந்த போது கொடுத்து வருகிறேன்!

★

## பார்க்க முடியாது!

வேலைக்காரன் (நோய் வாய்ப்பட்டுப் படுத்திருக்கும் எஜமானனிடம்):—எஜமான், உங்களைப் பார்க்க டாக்டர் வந்திருக்கிறார்!

எஜமான் (ஞாபக மறதியாக):—நான் ஒருவரையும் பார்க்க முடியாது. எனக்கு உடம்பு சரியில்லை யென்று சொல்லிப் போகச் சொல்லு!

★

## அதிகாரம்

வந்தவர் (மளிகைக் கடைக்காரரிடம்):—ஒரு வீசை காப்பிக் கொட்டை வேண்டும். ஒரு சுமையைத்திக் கட்டிக்கொடு, பார்க்கலாம்!

கடைக்காரர்:—அடே, என்ன ஐயா, அதிகாரம் பிரமாதப்படுகிறது!

வந்தவர்:—ஆமாம், இன்றைக்கு நான் கணக்குப் புஸ்தகம் கொண்டுவரவில்லை, தெரியுமா? கையில் காசே கொண்டு வந்திருக்கிறேன்!

★

## ஆறுதல்!

சாப்பிடுபவர்:—என்ன ஐயா, இந்தக் காப்பி கருகின வாசனை அடிக்கிறதே!

ஹோட்டல்காரர்:—அப்படியா? ரொம்பப் பேர் நம்ம ஹோட்டல் காப்பியில் வாசனையே கிடையாது என்றல்லவா சொல்லிக் கொண்டிருந்தார்கள்!

## சரியாய்ப் போயிற்று!

கணவன்:—இப்பொழுது என்னத்துக்காக அழுகிறாய்? நீ பேச ஆரம்பித்ததிலிருந்து நான்தான் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லையே!

மனைவி (அழுது கொண்டே):—நான் சொல்லுவது உங்களுக்கு அவ்வளவு அலட்சியமாகத்தானே இருக்கிறது?

★

## ஏன் சொல்லவில்லை?

ஒருவன் ஐந்து மாதத்துக்கு முன் ஒரு திருட்டில் சம்பந்தப்பட்டதாகக் கைது செய்யப்பட்டான். கேஸ் நாலைந்து நாட்கள் நடந்தது. கடைசியில் மேற்படி திருட்டு நடந்தபோது அந்த ஆசாமி சிறையில் இருந்ததாக ருசுவாகி விடுதலையடைந்தான். அவன் வெளியேறும்போது, "நீ ஏன் முன்னாலேயே அந்த விஷயத்தைச் சொல்லவில்லை?" என்று நீதிபதி கேட்டார்.

"எஜமான், நான் அதை முன்னாலேயே சொல்லியிருந்தால் நீங்கள் என்னைப் பற்றி என்ன நினைத்திருப்பீர்கள்? என்னைப் பெரிய கே. டி. என்று நினைத்து மறுபடியும் ஒரு வருஷம் ஜெயிலில் போட்டு விட்டிருப்பீர்களல்லவா?" என்றான் திருடன்.



"அப்பா! 'எக்ஸிபிஷன்' வந்து விட்டதல்லவா?"
"ஏன் அப்படிக் கேட்கிறாய்?"
"வாத்தியார் உன் மூளையைக் கொண்டு போய் 'எக்ஸிபிஷன்'லே தான் வைக்கவேண்டும் என்றார்...!"



"என்ன நடிகர் ஸார்! ஸெண்ட் வாசனை ஒரே அடியாகத் தூக்கி அடிக்கிறதே! என்ன விசேஷம்?"

"'தூக்குத் தூக்கி' என்னும் ஒரு டிராமா போடுகிறோம். இன்றைக்கு அதில் நான் நடிக்கிறேன்."

---

அப்போதுதான் வீட்டுக்குள் நுழைந்த கருப்பண்ணன் இதைக் கேட்டு, "எங்களுக்கு இருக்கிறது நீ ஒரே குழந்தை. தூரம் தொலைவிலே போய் அங்கே உனக்கு காலைத் தலையை வலிச்சால் எங்கள் மனசு தாங்காது" என்றான்.

"பம்பாயிலே வேலை கிடைச்சு, குடியிருக்க வீடும் கிடைச்சா எல்லாருமே அங்கே ஒரேயடியாய்ப் போய் இருந்துவிடலாம்" என்றான் தங்கராஜு.

அஞ்சலையின் வற்புறுத்தலின் பேரில் கருப்பண்ணன் முதலியாரைப் பேட்டி கண்டு, அவரிடமிருந்து பம்பாயிலிருக்கும் அவர் மகன் சிவகுமாருக்குத் தங்கராஜுவை அறிமுகப்படுத்தி வைக்கும் ஒரு கடிதத்தை வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தான்.

* * *

கருப்பண்ணன் கொண்டு வந்த கடிதத்தை வாங்கிக் கொண்டு அடுத்த வாரம் பம்பாயை நோக்கிப் பிரயாணமானான் தங்கராஜு. போகும் வழியெல்லாம் தனக்காகக் காத்திருந்த உத்தியோகத்தை ஏற்றுக் கொண்டு அடையப்போகும் சந்தோஷத்தை நினைத்து அவன் மனம் இன்பலோகத்தில் சஞ்சரித்த வண்ணமாயிருந்தது. இரண்டு நாள் பிரயாணத்திற்குப் பிறகு பம்பாயை அடைந்ததும், அவனுக்குக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போலிருந்தது. ஜனக் கும்பல்களின் ஓயாத ஆரவாரமும் போக்குவரத்து சாதனங்களின் பேரிரைச்சலும் பிரமாண்டமான கட்டிடங்களின் தோற்றமும் அவனுக்கு ஒரு புது அனுபவமாயிருந்தது.

திக்கு முக்காடிக் கடைசியாக பம்பாய்க் கோட்டைப் பகுதியிலிருக்கும் சிவகுமார் இருக்கும் விலாசத்தை அடைந்தான். அந்த நான்கு அடுக்கு மாடிக் கட்டிடத்தின் வாசலில் தொங்கிக்கொண்டிருந்த போர்டைப் பார்த்ததும் தங்கராஜுவுக்கு மூச்சே நின்றுவிடும் போலிருந்தது. சிவகுமார் லாண்டரி என்று எழுதப்பட்டிருந்தது அதில். அதிர்ச்சியை ஒருவாறு சமாளித்துக் கொண்டு கட்டிடத்திற்குள் நுழைந்தான் தங்கராஜு. அங்கு விசாரித்ததில் சிவகுமார் அந்த லாண்டரியின் கிளை ஒன்றைப் புனாவில் திறப்பதற்கான ஏற்பாடுகளைக் கவனிக்கப் புனாவுக்குப் போயிருப்பதாகவும் அடுத்த நாள் திரும்பி வந்துவிடுவாரென்றும் அறிந்து கொண்டான். வந்த மட்டுக்கும் அந்தக் கட்டிடத்தை ஒருதரம் சுற்றிப் பார்த்தான். அழுக்குத் துணிகளைச் சலவை செய்ய மின்சார சக்தியால் இயங்கும் பல இயந்திரங்களையும், அவைகளைக் கவனிக்கப் பட்டம்பெற்ற பலர் அங்கே வேலைக்கு அமர்ந்திருப்பதையும், கட்டிடத்தின் ஒரு பகுதியில் வந்து குவியும் அழுக்குத் துணிகள் மற்றொரு பகுதியில் தூய்மையாகச் சலவை செய்யப்பட்டு அடுக்கி வைக்கப்பட்டிருப்பதையும் பார்த்தான்.

தங்கராஜு எதிர்பார்த்தபடி சிவகுமார் ஏதாவது பெரிய கம்பெனியிலோ அல்லது சர்க்கார் காரியாலயத்திலோ வேலைக்கு அமராமலிருந்தது அவனுக்கு ஏமாற்றம் அளிக்கவில்லை. ஆனால் அவனும் அவன் தாயார் அஞ்சலையும் துச்சமெனக் கருதிய சலவைத் தொழிலை, கண்ணியமான முதலியார் குடும்பத்தில் பிறந்து எம். ஏ., யும் பாஸ் செய்திருந்த சிவகுமார் நடத்த முற்பட்டது அவனுக்குச் சொல்லவொண்ணாத ஆச்சரியத்தை அளித்தது. எந்தத் தொழிலிலும் கௌரவமோ அகௌரவமோ இல்லையென்றும் அதற்கு அத்தகைய குணத்தைக் கற்பிப்பது நோக்குபவரின் மனப்பான்மையையே பொறுத்தது என்ற உண்மை அவன் மனதில் பளிச்சென்று தோன்றியது.

இரண்டு நாள் தங்கிப் பம்பாயைச் சுற்றிப் பார்த்துவிட்டு, சிவகுமாரையும் கண்டு தொழில் நுட்பங்களில் சிலவற்றை அறிந்து கொண்டு சென்னைக்குத் திரும்பினான் தங்கராஜு.

* * *

நாணயத்திற்கும் வேலைத் திறமைக்கும் பிரசித்தி பெற்ற சென்னையிலுள்ள ஒரு சில 'லாண்டரி'களில் தங்கராஜுவின் லாண்டரியும் ஒன்றாக விளங்குவதில் ஆச்சரியமில்லை அல்லவா?

# கண் திறந்தது

**வ. சு.**

சலவை செய்த துணிகளைக் கொண்டு போய்க் கொடுக்க வேண்டிய வீடுகளில் கொடுத்து விட்டு, அவைகளைச் சலவை செய்ததற்குரிய கூலியை வாங்கிக் கொண்டு வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தான் கருப்பண்ணன். வீட்டில் அவனுக்காக ஒரு சந்தோஷச் செய்தி காத்துக் கொண்டிருந்தது. அவன் மனைவி அஞ்சலை அவனுடைய வரவை ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டு வாசலிலேயே நின்று கொண்டிருந்தாள். அவன் வீட்டில் நுழைந்ததும் நுழையாததுமாக, "விசயம் தெரியுமா? நம்ம தங்கராசு பரீச்சை கொடுத்திருந்தது அல்லவா? அதிலே பாசாகிவிட்டதுன்னு பேப்பரிலே வந்திருக்காம். அதை என்கிட்டே வந்து சொல்லிப்புட்டு இப்பத்தான் வெளியே போயிருக்கு" என்றாள்.

அந்தச் செய்தியைக் கேட்டவுடன் கருப்பண்ணனுக்கு ஏதோ புதையல் கிடைத்த மாதிரி இருந்தது. படிப்பு வாசனையே இல்லாமல் பரம்பரையாகச் சலவைத் தொழிலையே செய்து கொண்டிருந்த அவர்கள் குடும்பத்தில் முதல் முதலாக அவன் மகன் தங்கராஜு மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறியது அவன் பெருமை கொள்ளத்தக்க விஷயம் தானே? கொஞ்ச நேரத்திற்கெல்லாம் தங்கராஜு பரீட்சையில் வெற்றி பெற்ற செய்தி அந்த வட்டாரம் முழுவதும் பரவிற்று. உற்றார் உறவினர்கள் கருப்பண்ணன் வீட்டில் கூடி தங்களுடைய சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொண்டு, அன்று இரவு கருப்பண்ணன் கொடுக்கப் போகும் விருந்தில் கலந்து கொள்ளுவதற்காகத் தங்கினார்கள். இதற்குள் தங்கராஜு தன் தாய்வழிப் பாட்டன் கடலைமுத்துவை அழைத்துக் கொண்டு வந்து சேர்ந்தான். வந்திருந்த பெரியவர்கள் தங்கராஜுவுக்கு ஆசி கூறிவிட்டு விருந்தையும் உண்டுவிட்டு ஒவ்வொருவராக விடை பெற்றுக் கொண்டு வெளியேறினர். கடைசியாகக் கருப்பண்ணன் வீட்டில் எஞ்சியவர்கள் கருப்பண்ணன், அவன் மனைவி அஞ்சலை, மகன் தங்கராஜு, அஞ்சலையின் தகப்பன் கடலைமுத்து—இவர்கள் நால்வர்தான்.

கிழவன் கடலைமுத்து மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தான். கருப்பண்ணனைப் பார்த்து, "ஆமாம், இப்போது தங்கராஜு பரீட்சை கொடுத்து படிப்பை முடித்து விட்டானே, இனிமேல் என்ன செய்வதாக யோசனை?" என்றான்.

அதற்குக் கருப்பண்ணன் "இதுவரை வாயை வயித்தைக் கட்டி ஏதோ பத்துக் கிளாசு வரைக்கும் அவனைப் படிக்க வைச்சாச்சு. இனிமேல் அவனாக எங்கேயாவது போய் ஒரு வேலை செய்தோ, ஒரு தொழில் நடத்தியோ நாலு காசு சம்பாதித்து வயிற்றைக் கழுவ வேண்டியதுதான்" என்றான்.

உடனே கடலைமுத்து, "இவனை விடப் பெரிய பெரிய படிப்பெல்லாம் படிச்சவங்களே சரியான வேலை கிடைக்காமல் அலையுறாங்களே, இவனுக்கு எங்கே வேலை கிடைக்கப் போகிறது? எதுக்கும் எனக்கு ஒரு யோசனை தோணுது. நம்ம பரம்பரைத் தொழில் இருக்கவே இருக்குது. ஏதோ ஒரு 'லாண்டரி'ன்னு ஒண்ணு வைச்சு அதுக்கு நம்ம தங்கராசுவை மேல் பார்வைக்குப் போட்டால் அவன் நிழலிலேயே குந்திக்கிட்டு அவன் வயித்துப் பாட்டைக் கவனிச்சுக் கொள்வான். நாம் வீடு வீடாய்ப் போய் அலைய வேண்டாம். லாண்டரிக்கு வருகிற துணியை சலவை பண்ணிக்கிட்டிருந்தால் போதும். தங்கராஜு நாலு எழுத்து படிச்சிருக்கான் அல்லவா? அதனாலே கடைக்கு வரவங்களும் அவன் கிட்டே மரியாதையாக நடந்து கொள்ளுவாங்க" என்றான்.

இதுவரை மௌனமாயிருந்த அஞ்சலை, "அப்பா, நீ என்ன சொல்லப் போறியோ என்று நான் காத்துக்கிட்டு இருந்தேன். உனக்குப் புத்தி இப்படியா போவணும்? ஊரிலே உள்ளவங்க அழுக்குத் துணியையெல்லாம் மூட்டை கட்டித் தினந்தோறும் மாரடிக்கிற தலையெழுத்தும் அவமானமும் எங்கள் காலத்தோடு போகட்டும். இவ்வளவு படிப்புப் படிச்சிட்டு என் மகன் அந்தத் தொழிலிலே இறங்க வேண்டாம். நாலு பெரிய மனுசங்க மாதிரி அவனும் எங்கேயாவது ஒரு உத்தியோகம் பண்ணி நாலு காசு சம்பாதிக்கட்டும்" என்றாள் ஆத்திரமடைந்தவளாய்.

அஞ்சலையின் வார்த்தைகள் கடலைமுத்துவின் நெஞ்சில் சுருக்கென்று தைத்தன. ஆனால் அவன் நிதானத்தை இழக்காமல் தழுதழுத்த குரலில், "நீ பெத்து

வளர்த்த குழந்தை தங்கராஜு. அதனோடே அருமை பெருமை யெல்லாம் உனக்குத்தான் தெரியும். உன் யோசனைப் படியே செய். ஆனால் ஒன்று மாத்திரம் மறந்துவிடாதே. நாலு எழுத்துப் படித்துவிட்டுப் பரம்பரைத் தொழிலைச் செய்வது தொழிலுக்கும் கௌரவம்; அதைச் செய்பவர்களுக்கும் கௌரவம். நீ உலகம் அறியாதவன்" என்று சொல்லி விட்டு மெதுவாக வெளியேறினான்.

கருப்பண்ணன் கடலைமுத்துவை வழியனுப்பிவிட்டு வந்தான். அவனுக்குச் கடலைமுத்துவின் யோசனை சரியாவது என்று தோன்றினாலும், அதைத் தைரியமாக எடுத்துச் சொல்லி அஞ்சலையின் கோபத்திற்குள்ளாக இஷ்டப்படவில்லை.

தங்கராஜுவுக்கு அவன் தாயார் அஞ்சலை சொல்வதுதான் சரியென்று பட்டது.

## 2

**ப**ரீட்சையில் தேறின சந்தோஷத்தினால் ஏற்பட்ட உள்ளக் கிளர்ச்சி அடங்குவதற்கும், பரீட்சை தேறியதற் குரிய அத்தாட்சிப்பத்திரம் வந்து சேருவதற்கும் சரியா யிருந்தது தங்கராஜு சம்பந்தப் பட்டமட்டில். தான் படித்த பள்ளிக்கூடத் தலைமை உபாத்தியாயரிட மிருந்து ஒரு நற்சாட்சிப் பத்திரமும் வாங்கிக் கொண்டு வந்தான் சீக்கிரத்தில். அதற்கடுத்த வாரம் முதல் தங்கராஜுவின் வாழ்க்கையில் வேலை தேடும் படலம் ஆரம்பமாயிற்று. முதலில் ஏதாவது சர்க்கார் உத்தியோகத்திற்குத்தான் போக வேண்டுமென்று ஒவ்வொரு சர்க்கார் காரியாலயமாக ஏறி இறங்கினான். அவன் போன இடமெல்லாம் ஒன்று, வேலை காலியாக இல்லை; அல்லது வேலை காலியிருந்தால் அதற்கு வேண்டிய யோக்கியதாம்சங்கள் அவனிடம் இல்லை. கடைசியாகத் தன் குலத்தின் பெயரைச் சொல்லி அதன் மூலமாவது ஒரு உத்தியோகம் சம்பாதித்துக் கொள்ளலாம் என்று தோன்றியது அவனுக்கு. அடுத்த தடவை ஒரு பெரிய உத்தியோகஸ்தரைப் பேட்டி கண்டபோது, தான் சலவைத் தொழிலாளர் குலத்திலிருந்து மெட்ரிகுலேஷன் பாஸ் செய்து வந்திருப்பதால் தனக்கு ஏதாவது உத்தியோகம் போட்டுத் தரவேண்டுமென்று கேட்டுக் கொண்டான். அதற்கு அந்த உத்தியோகஸ்தர், "நீ சொல்வது நியாயம்தான். ஆனால் உன் குலத்தவரிலேயே சிலர் உன்னைவிட அதிகப் படிப்புப் படித்துவிட்டு இந்த ஆபீஸில் உத்தியோகத்திற்காக மனுச் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களைப் புறக்கணித்து விட்டு உன்னை எப்படித் தேர்ந்தெடுக்க முடியும்?" என்று கேட்ட கேள்வி தங்கராஜுவைத் திகைக்க வைத்தது. சர்க்கார் உத்தியோகத்தை நாடி அலைவதில் பயனில்லை என்று தெரியவே பிரைவேட் கம்பெனிகளில் உத்தியோகம் தேட ஆரம்பித்தான். ஆனால் அங்கும் நிலைமை அப்படியே இருந்தது.

தினந்தோறும் காலையில் 'டீக்'காக உடை உடுத்திக்கொண்டு கைச் செலவுக்கு ஒன்றோ அரையோ அஞ்சலையிடமிருந்து வாங்கிக்கொண்டு நாள் முழுவதும் அலைந்து விளக்கு வைத்ததும் சோர்ந்த முகத்துடன் வீடுவந்து சேர்வதும் வழக்கமாகி விட்டது. இவ்விதம் ஒரு வருஷம் கழிந்தது. பிள்ளை படும் துயரம் அஞ்சலைக்கே சகிக்கவில்லை.

ஒருநாள் மாலை தன் தாய் அஞ்சலையிடம் மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தான் தங்கராஜு. "இந்த ஊரிலே இருந்தால் சரியான வேலை எதுவும் கிடைக்காதுன்னு தோணுது. மாடிவீட்டு மாணிக்க முதலியாருடைய மகன் சிவகுமார் பம்பாயிலே ஏதோ கம்பெனி வைத்துக்கொண்டு இருக்காராம். அவருக்கு முதலியாரிடமிருந்து ஒரு கடிதாசி வாங்கித் தரச் சொல்லு அப்பாவை. அதை எடுத்துக் கொண்டு நான் பம்பாய்க்குப் போய் அவரைக் கண்டு ஒரு வேலை பார்த்துக் கொள்கிறேன்" என்றான்.



சபா காரியதரிசி:—என்ன செட்டியார்வாள்! நீங்கள் கூட ஸபாவுக்குக் கச்சேரி கேட்க வந்து விட்டீர்களே! தயவு செய்து நீங்கள் திரும்பிப் போய் விடுங்கள்!

செட்டியார்:— ஏன்? என்ன விசேஷம்?

சபா காரியதரிசி:—நீங்கள் வந்தால் பழைய பாக்கி வசூல் செய்ய வந்திருக்கிறீர்கள் என்று எண்ணிப் பாதிப் பேர் ஸபாவுக்குக் கச்சேரி கேட்கவே வரமாட்டார்கள்!

வேளை உன் உயிரை மாய்த்துக் கொண்டு விட்டாயோ என்று கலங்கினேன். நீ உயிருடன் வந்து என்னைக் காண்பாய் என நான் நினைக்கவில்லை. உன்னைக் கண்டவுடன் என் மனம் குளிர்ந்தது.''

தன் தந்தையின் அன்பு மொழிகளைக் கேட்டு அறுமக் பரவசமடைந்தான். தனது அம்பைத் தேடிச் சென்றது, அது எப்படி அவ்வளவு தூரம் சென்று விழுந்தது என்பதை அறிய அவன் ஆவல் கொண்டது, அப்படித் தேடிச் சென்ற தன் பயனுகத் தான் ஆனந்த வாழ்வடைந்தது முதலிய எல்லாவற்றையும் அறுமக் விளக்கமாகவும் தெளிவாகவும் தன் தந்தைக்குக் கூறினான்.

''களிமைக் கலியாணம் செய்து கொள்ள முடியாததால் ஏற்பட்ட



பையன்:—அம்மா! நம்ம தையற்காரன் என் டிராயருக்கு ஒரு கால் அதிகமாக வைத்துவிட்டான், பாரு!

ஏமாற்றத்தை மறக்கும்படி எனக்கு என்ன சுக வாழ்வு ஏற்பட்டது என்பதை மட்டும் கேட்காதீர்கள். அது ஒரு ரகசியம். அதை இப்பொழுது சொல்ல முடியாது. நான் சௌக்கியமாகவும் சந்தோஷமாகவும் இருக்கிறேன் என்பதை அறிந்து திருப்தியடையுங்கள். நான் எங்கே இருக்கிறேன், எவ்வாறு சந்தோஷமாயிருக்கிறேன் என்பதை அறிய நீங்கள் ஆசை கொள்ளக் கூடாது. ஆனால் நான் விரும்பும் போது உங்களைப் பார்த்துவிட்டுப் போக எனக்கு அனுமதியளிக்க வேண்டும்'' என்றான்.

தன் மகன் கேட்டபடியே சுல்தான் அனுமதி அளித்தான். அறுமக் மூன்று நாட்கள் அங்கேயிருந்துவிட்டு நாலாம்நாள் புறப்பட்டான். (தொடரும்)

# பேசும் இயந்திரம்

கிராமபோனைக் கண்டு பிடித்தவர் பிரபல அமெரிக்க விஞ்ஞானியான தாமஸ் ஆல்வா எடிஸன்.

ஒரு முறை அவருடைய நண்பர்கள் அவரைப் பாராட்டி அவருக்கு ஒரு விருந்து அளித்தார்கள். எடிஸனுக்கு அன்றைய தினம் சீக்கிரம் வீட்டிற்குத் திரும்ப வேண்டிய முக்கியமான ஒரு அலுவல் இருந்தது. விருந்துக்கு முன் எடிஸனின் மேதையைப் புகழ்ந்து பலர் பேசினார்கள். கடைசியாகப் பேசியவர் வெகு நேரம் பேசிக் கொண்டே இருந்தார். அவர் பேச்சை நிறுத்துவதற்கான அறிகுறியையே காணோம்.

நேரமாகிக் கொண்டே வந்தது. அந்தக் குறிப்பிட்ட நபரைக் கழுத்தைப்பிடித்து நிறுத்திவிடலாமா என்ற அளவுக்கு எடிஸனுக்கு ஆத்திரம் வந்தது.

கடைசியாக மழைபெய்து ஓய்ந்தது போல் அந்தப் பிரசங்கி தம் ஒன்றரை மணி நேரப் பிரசங்கத்தை ஒரு வகையாக முடித்துக் கொண்டார்.

பிரசங்கத்திற்குப் பதில் சொல்லும் கட்டம் வந்த பொழுது, எடிஸன் கூறியதாவது:

''அன்புமிக்க நண்பர்களே, பேசும் இயந்திரமாகிய கிராமபோனைக் கண்டு பிடித்ததற்காக என்னைப் பாராட்டினீர்கள். ஆனால் அந்தப் பாராட்டுக்கு உண்மையில் உரியவர் கடவுள்தான். எல்லாம் வல்ல இறைவன்தான் முதலில் பேசும் இயந்திரமாகிய மனிதனைக் கண்டு பிடித்தார். நான் கண்டு பிடித்ததெல்லாம் அதைவிட எத்தனையோ வகையில் குறைபாடுள்ள ஒரு இயந்திரம்தான். ஆனால் ஒரு முக்கிய வித்தியாசம்: என்னுடைய இயந்திரத்தை நாம் நினைத்த மாத்திரத்தில் நிறுத்தி விடலாம். ஆனால் மனித இயந்திரத்தை அப்படி ஒருபோதும் நிறுத்த முடியாது.''

—பாஜு.

புறப்பட்டான். ஆடம்பரமாக அலங்கரிக்கப்பட்ட குதிரை மீது ஏறிச் சென்றான். அவனுடன் மிகவும் ஆடம்பரமாக உடையணிந்த இருபது குதிரைப் படையினரும் சென்றனர்.



இளவரசன் அலிக்கும் நளீமுக்கும் கலியாணமான பிறகு சுல்தான் அஹமதைக் காணவே இல்லை. இது பற்றி அவன் மிகுந்த கவலை கொண்டான். ஹூசேன் பக்கிரியாகப் போய்விட்டான் என்பதை அறிந்து அவனைப் பற்றிக் கவலை கொள்வதை விட்டு விட்டான். ஆனால் அஹமதுக்காக அவன் மிகவும் கவலைப்பட்டான்.

அஹமத் மீது சுல்தானுக்கு எப்போதுமே தனியான ஆசை உண்டு. அவ்வளவு ஆசை வைத்த மகனைக் காணோமென சுல்தான் துயரத்தில் ஆழ்ந்தான். துயரம் அதிகரித்து அதனால் இறந்து விடுவானோ என்று அரச சபையினர் கவலையடைந்தனர். இவ்வாறு கவலையினால் நொந்திருக்கையில் சுல்தானின் பிரதம மந்திரி அவனுக்கு ஒரு யோசனை கூறினான். தனக்குத் தெரிந்த ஒரு மந்திரவாதிக் கிழவி இருப்பதாகவும், அவளைக் கேட்டால் இளவரசன் அஹமத் இருக்கிறானா, இறந்துவிட்டானா, இருந்தால் எங்கிருக்கிறான்— என்பதைச் சொல்லுவாள் எனக் கூறினான். சுல்தான் உடனே அந்தக் கிழவியை அழைத்துவரச் சொன்னான். அவள் வந்தவுடன் அஹமத் உயிருடன் இருக்கிறானா, அப்படியானால் எங்கிருக்கிறான் என்று தெரிந்து கூறும்படி கட்டளையிட்டான்.

அந்தக் கிழவி தன்னால் இயன்றதைச் செய்வதாகவும் மறுநாள் சுல்தானை வந்து பார்ப்பதாகவும் கூறிச் சென்றாள். மறுநாள் கிழவி அரண்மனைக்கு வந்தாள். தனது மந்திர சக்தியை உபயோகித்துப் பார்த்ததில் அஹமத் உயிருடனிருக்கிறான் என்பது தெரிகிறது என்றும் ஆனால் எங்கிருக்கிறான் என்று கண்டு பிடிக்க முடியவில்லை என்றும் கூறினாள்.

இந்தத் தகவலை அறிந்த சுல்தான் ஓரளவு ஆறுதல் அடைந்தான். தன் மகன் உயிருடன் இருக்கிறான் என்பதை நினைத்துச் சந்தோஷமடைந்தான். ஆனால் மகன் இருப்பிடம் தெரியாமலிருக்கும் வரையில் அவன் இறந்ததற்குச் சமானம்தானே என்பதை எண்ணுகையில் அவனுக்கு வருத்தம் அதிகரித்தது.

இவ்வாறு அவன் கவலைப்பட்டுக் கொண்டிருக்கையில்தான், அஹமத் பானுவின் அரண்மனையை விட்டுப் புறப்பட்டு சுல்தானுடைய நகருக்கு வந்து கொண்டிருந்தான். வெகு சீக்கிரத்தில் அவன் தன் தந்தையின் நாட்டிற்கு வந்து சேர்ந்தான். அந்நாட்டு மக்கள் அவனைக் கண்டவுடன் சந்தோஷ ஆரவாரம் செய்தனர்.

அஹமத் சீக்கிரத்தில் சுல்தான் முன் வந்து சேர்ந்தான். காணமற்போன தன் மகனைக் கண்டவுடன் சுல்தான் தனது சிம்மாசனத்திலிருந்து இறங்கி ஓடி வந்து அவனை அன்புடன் கட்டித் தழுவிக் கொண்டான்.

ஆனந்தப் பெருக்கிலிருந்து மீண்டவுடன் சுல்தான் தனது மகனைப் பார்த்துக் கூறியதாவது:

“அருமை மகனே! நீதான் என் கடைசிக் குமாரன். மற்ற இருவரையும் விட உன் மீதுதான் எனக்கு அதிக ஆசை என்பது உனக்குத் தெரியும். நளீமைக் கலியாணம் செய்து கொள்ள முடியவில்லை என்ற ஏமாற்றத்தினால், நீ ஒரு

---

ஒரு கூடை நிறையப் பழங்கள் இருக்கின்றன. அவற்றை இரண்டாகப் பிரித்தால் 1 மிஞ்சும். மூன்றாகப் பிரித்தாலும், நான்காகப் பிரித்தாலும், ஆறாகப் பிரித்தாலும் 1 தான் மிஞ்சும். ஏழாகப் பிரித்தால் மிஞ்சாது. அப்படியானால் அந்தக் கூடையில் உள்ள பழங்கள் எவ்வளவு?

விடை அடுத்த இதழில்

---

இருந்தது. அங்கே தங்கத் தட்டுகளில் சுவை நிறைந்த உண்டிகள் தயார் செய்து வழங்கப்பட்டன. இருவரும் அதைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் ஆடம்பர உடை அணிந்த பல பெண்மணிகள் குயிலினும் இனிய குரலில் பாடினார்கள்.

கலியாணத்திற்குப் பிறகுங்கூட ஒவ்வொரு நாளும் விருந்தும், ஆட்டமும் ஆனந்தமுமா யிருந்தது. இளவரசன் அஹமத் ஆனந்தக் கடலில் மூழ்கி யிருந்தான். வெளியே ஒரு உலகம் இருக்கிறது என்ற நினைவே அவனுக்கு இல்லை. இதே ஆனந்தத்திலும் கேளிக்கையிலும் காலத்தைக் கழித்து விட்டால் என்ன என்று கூட எண்ண ஆரம்பித்து விட்டான்.

ஆனால் ஆறு மாதகாலம் இவ்வாறு ஆனந்தத்தில் கழித்தபிறகு தன்னுடைய தந்தையைப்பார்க்க வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. அஹமதிற்கு என்றுமே தன் தந்தையிடம் அன்பும் மதிப்பும் உண்டு.



தந்தையைப் பார்க்க வேண்டுமென்ற தனது ஆசையை மெதுவாகத் தன் மனைவி பானுவிடம் தெரிவித்தான். இதைக் கேட்டவுடன் பானு வருத்த மடைந்தாள். எப்படியோ தன்னை விட்டுப் பிரிவதற்காகத்தான் தன் கணவன் தந்தையைப் பார்க்க வேண்டும் என்று பொய்க் காரணம் கூறுகிறான் என்று நினைத்தாள். தன் மனைவி தயங்குவதைக் கண்ட அஹமத் "அருமை பானு! உன்னை முன்னையும் விட அதிகமாக நேசிக்கிறேன். என் தந்தையை ஒரு முறை பார்த்து அவருக்கு என் மரியாதையையும் அன்பையும் தெரிவித்து விட்டுச் சீக்கிரம் வந்து விடுகிறேன். உனக்குக் கொஞ்சங்கூடச் சந்தேகம் வேண்டாம்" என்று தெரிவித்தான்.

இதைக் கேட்டவுடன் பானுவுக்குச் சந்தேகம் தெளிந்தது. சீக்கிரம் திரும்பி வந்துவிட வேண்டும் என்று கணவனிடம் உறுதி பெற்றுக்கொண்டு அவனுக்கு அனுமதி அளித்தாள்.

அஹமத் புறப்படு முன் அவனுக்கு ஒரு விஷயத்தைப் பற்றி பானு எச்சரிக்கை செய்தாள். "நமக்குக் கலியாணம் ஆனதைப் பற்றியோ, நமது இருப்பிடத்தைப் பற்றியோ உங்கள் தந்தைக்குத் தெரிவிக்கலாகாது. நீங்கள் சௌக்கியமாயும் சந்தோஷமாயும் இருப்பதைத் தெரிவிப்பதற்காக மட்டுமே வந்ததாக கூறுங்கள்" என்றாள்.

அவள் சொன்னபடியே செய்வதாக வாக்களித்து விட்டு இளவரசன் அஹமத் பானுவிடம் விடை பெற்றுக் கொண்டு தன் தாய்நாட்டை நோக்கிப்

# படித்துப் பார்!

## எது? யார்?

பசிபிக் சமுத்திரத்தின் ஆழம் எவ்வளவு? உலகத்திலேயே மிகப் பெரிய ஏரி எது? உலகத்திலேயே பெரிய ரயில் பாதை எது? எகிப்தின் ஜனத்தொகை எவ்வளவு? அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் எந்த வருஷம் பிறந்தார்? டாக்டர் அழகப்ப செட்டியார் எந்தக் காலேஜில் படித்தார்?—இந்த மாதிரியான திணற வைக்கக் கூடிய கேள்விகளுக்கெல்லாம் 'டக்' 'டக்' கென்று உட்கார்ந்த இடத்திலேயே பதில் சொல்லக் கூடிய முறையில் 'லோகமானி' பிரசுராலயத்தார் இந்தப் புத்தகத்தைத் தொகுத்து வெளியிட்டிருக்கிறார்கள். மிகவும் உபயோகமான புத்தகம். விலை ரூ. 3; ஆசிரியர்: கீரு ராமஸ்வாமி; பிரசுரம்: லோகமானி பப்ளிகேஷன்ஸ், 6 வீரபத்ரன் தெரு, மயிலாப்பூர், சென்னை — 4.

## இளந்தமிழா!

தமிழனை மிக்க உரிமை பாராட்டி ஒரு குத்து விட்டு எழுப்புவது போல் 'இளந் தமிழா எழுந்திருடா!' என்று கூவி எழுப்புகிறார் ஸ்ரீ பெ. தூரன். அவ்விதம் எழுந்தவனுக்குக் கவிதையாலும் வசன கவிதையாலும் காந்தியைப் பற்றியும் சாந்தியைப் பற்றியும் காதலைப் பற்றியும் சோதனையைப் பற்றியும் இன்னும் எத்தனையோ விஷயங்களைப் பற்றியும் சொல்லுகிறார். இந்நூலுக்கு திரு ரா. பி. சேதுப் பிள்ளை சிறப்பான முகவுரை கொடுத்திருக்கிறார். விலை 1—8—0; பிரசுரம்: தமிழ்ப்பண்ணை, தியாகராஜ நகர், சென்னை.

## கலிவரின் யாத்திரைகள்

டாக்டர் ஜோனதன் ஸ்விப்ட் என்னும் பிரபல ஆங்கில எழுத்தாளர் எழுதிய Gulliver's travels என்ற அருமையான ஆங்கிலப் புத்தகத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு இது. விலை ரூ. 3; மொழி பெயர்த்தவர்: எ. வி. நடேசய்யர்; பிரசுரம்: அகிலம் வெளியீடு, ஸ்ரீனிவாச நகர், திருவானைக்காவல், திருச்சி ஜில்லா.

## திவ்யப் பிரபந்தமும் திவ்யார்த்த தீபிகை உரையும்

ஆழ்வார்கள் பாடிய அருந் தமிழ்ப் பாடல்களை ஏட்டில் பிரதி செய்தவர்களாலும் உரைகாரர்களாலும் அப்பாடல்களில் பல பிழைகள் ஏற்பட்டுவிட்டன என்பதை விரிவான ஆராய்ச்சி செய்து விளக்குகிறார் இந்நூலாசிரியராகிய வே. மு. ஸ்ரீநிவாச முதலியார். விலாசம்: 1, எண்ணெய்க்காரத் தெரு, காஞ்சீபுரம். விலை ரூ. 4.

## கலியுகவரதன் ஸ்ரீ அய்யப்பன்

சேரள நாட்டில் பிரபல தெய்வமாக விளங்கிவரும் கலியுக வரதன் ஸ்ரீ அய்யப்பனின் அவதார மகிமையை அப்பெருமானின் பக்த கோடிகளில் ஒருவர் இந்தப் புத்தகத்தில் எழுதியிருக்கிறார். விலை ரூ. 1-8-0; எழுதியவர்: எஸ். எம். சுந்தரம் ஐயர்; பிரசுரம்: கே. பரமேஸ்வரம் பிள்ளை, ஜயச் சந்திரவிலாஸ் புக் டிப்போ, திருவனந்தபுரம்.

## ஹிந்து மத சம்பிரதாய பாக சாஸ்திரம்

அக்கார வடிசில் முதல் உருளைக் கிழங்கு ஹல்வா வரை இப்போது நாட்டில் பிரபலமாக விளங்கும் பட்சணங்கள், குழம்பு வகைகள், ஊறுகாய் தினுசுகள் எத்தனை எத்தனை உண்டோ அவற்றை யெல்லாம் எப்படிச் செய்வது என்பதை இந்நூல் தெளிவாகக் கூறுகிறது. சமையல் தெரியாத பெண்மணிகளுக்கும் சமைக்கத் தெரிந்த பெண்மணிகளுக்குங் கூட உபயோகமாக இருக்கக் கூடிய புத்தகம். விலை அணா 8. கிடைக்குமிடம்: ஸ்ரீ வாணி விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம்.

## Money's model letter-writer and business correspondence

கடிதம் எழுதுவது ஒரு கலை. அந்தக் கலையில் தேர்ச்சியடைவது எப்படி என்பதை இந்தப் புத்தகம் ஏராளமான உதாரணங்களுடன் விளக்குகிறது. விலை ரூ. 1—8—0. பிரசுரம்: A. S. Money & Co., Educational Publishers, 14. Sambaier St., Madras.




## 5. அஹமதின் கல்யாணம்

அஹமத் அந்தப் பெண் முன் மண்டியிட்டு, "அம்மணி! என் ஆயுள் முழுவதும் தங்களுக்கு அடிமையா யிருக்கத் தயாராக இருக்கிறேன்" என்றான்.

உடனே பானு சிரித்துக்கொண்டே, எனது அடிமையா யிருக்க வேண்டாம். என்னை மனைவியாக ஏற்றுக் கொண்டால் போதும்" என்றாள்.

இளவரசன் அஹமத் பூரித்துப் போனான். உடனே பானுவை அணுகி, "ஆயுள் உள்ள அளவும் உன்னைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் மனதில்கூட நினைக்க மாட்டேன்" என்று அவள் கையைத் தொட்டு சத்தியம் செய்து கொடுத்தான்.

இதைக் கேட்ட பானு அன்று இரவே தனக்கும் இளவரசன் அஹமதிற்கும் விவாகம் நடப்பதற்கான ஏற்பாடுகள் செய்யும்படித் தனது பணியாட்களுக்குக் கட்டளை யிட்டாள். கல்யாண விருந்து தயாராகிக் கொண்டிருக்கையில் பானு அஹமதின் கையைப் பிடித்து அரண்மனையைச் சுற்றிக் காட்டி வந்தாள்.




அவ்வளவு பெரிய மாளிகையையும், அவ்வளவு ஆடம்பரமான ஆடை ஆபரணங்களையும் ராஜ குடும்பத்தில் பிறந்த அஹமத் பார்த்ததே இல்லை. எந்தப் பக்கம் திரும்பினாலும் ஆயிரக்கணக்கில் வைரங்கள் கண்ணைப் பறித்தன. எங்கு நோக்கினும் முத்துக்களும் வைடூரியங்களும் பளிச்சென டால் வீசின. இவ்வளவு விலையுயர்ந்த மாணிக்க, வைர, வைடூரியங்களைக் கண்ட அஹமத் தன் காதலியைப் பார்த்து "அருமை பானு! உலகிலுள்ள விலையுயர்ந்த பொருள்களையெல்லாம் சேர்த்தாலும்கூட இந்த அரண்மனையிலுள்ள பொருள்களுக்கு ஈடாகாது போலிருக்கிறதே!" என்று கூறினான்.

இதற்கு தேவகன்னி பானு, "இளவரசே! இனி இந்த அரண்மனை, அதிலுள்ள பொருள், நான்-எல்லாம் உங்களுடைய உடைமையாகி விட்டோம்" என்றுகொஞ்சும்மொழியில் கூறினாள்.

பானுவும் இளவரசனும் சேர்ந்து பார்த்த கடைசி மண்டபத்தில்தான் அவர்களுடைய கல்யாண விருந்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த மண்டபம் முன்பு பார்த்த மண்டபங்களை விட எல்லா விதத்திலும் சிறப்பாக



கணவன்:—இதென்ன தொல்லை? ஆபீஸிலிருந்து வந்தவுடனே ஒரு கத்தை பில்லைக்கொடுக்கிறாயே! இனி இந்த வீட்டுக்கு நான் வரவில்லை. சைக்கிளை எடுத்துக் கொண்டு எங்கே யாவது தொலைகிறேன்.

மனைவி:—இப்பொழுதுதான் அந்த ஜவுளிக் கடைக்காரன் புடவை பாக்கிக்காகச் சைக்கிளையும் எடுத்துக் கொண்டு போய் விட்டான்!

---

கத்தினால் சிருஷ்டிக்கப்பட்டது. சாஸ்திரமானது ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள தொடர்பைப் புனிதமாக ஆக்கி, அதைச் சமூகம் ஒப்புக் கொள்ளுமாறு செய்கிறது. அவ்வளவுதான். பீஜகுப்தா! நீ சொல்வதில் பாதி உண்மை இருக்கிறது, பாதி...”

பீஜகுப்தன் இடைமறித்துக் கம்பீரமான குரலில், “யோகி ராஜ்! உண்மை எப்பொழுதுமே பாதியாக இருந்ததில்லை. அது எப்பொழுதும் பூரணமானதுதான். ஆனால் நாம் தர்க்கம் புரிந்து கொண்டிருப்பதற்கு இது நேரம் அல்ல. இங்கே இந்த இடத்தில் இப்பொழுது நான் இதற்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டிருப்பதும் உசிதம் ஆகாது” என்றான். பிறகு மிருத்யுஞ்ஜயர் பக்கம் திரும்பி “ஸ்வாமி! இன்னும் எனக்குச் சாஸ்திர ரீதியாக விவாகம் ஆகவில்லை என்று நான் சொன்னேன் அல்லவா? அதை இங்கே புரியும்படியாகத் தெளிவு படுத்திவிட வேண்டியது அவசியம் என்று எண்ணுகிறேன். உலகம் என்னை விவாகம் ஆகாதவன் என்று எண்ணுகிறது. ஆனால் உண்மையைக் கேட்கப்போனால் நான் விவாகம் ஆனவனேதான். சித்திரலேகாதான் என் மனைவி. நான் சித்திரலேகாவைச் சாஸ்திர ரீதியாகக் கை பிடிக்கவில்லை; பாணிக்கிரஹணம் செய்து கொள்ளவில்லை. சமூகத்தின் சட்ட திட்டங்களுக்கேற்ப நான் அவ்வாறு செய்து கொள்ளவும் முடியாது. ஆயினும் எனக்கும் சித்திரலேகாவுக்கும் உள்ள தொடர்பு கணவன் மனைவியைப் போன்றதுதான். நான் காதலில் அபார நம்பிக்கை பூண்டவன். ஆகவே, இம்மாதிரி நிலையில் நான் மணம் செய்து கொள்ளுவது என்பது நடக்கவே நடக்காத காரியம். ஏனெனில் இனி வேறு எந்தப் பெண்ணும் என் அன்புக்கோ காதலுக்கோ பாத்திரமாக முடியாது.”

இதைச் சொல்லும்பொழுது பீஜகுப்தனின் பார்வை கீழே கவிழ்ந்திருந்தது. அவன் தரையில் புதைந்த கண்களைத் தூக்கவே யில்லை. மிருத்யுஞ்ஜயர் அவனைப் பார்த்து, “பீஜகுப்தா! நீ சொல்லுவது உசிதமாக இருக்கலாம். ஆனால் உலகம் உன்னை மணம் ஆகாதவன் என்று சொல்லுமானால் நீ மணமாகாதவன்தான். கல்யாணம் செய்து கொள்ளுவதோ, கொள்ளாமலிருப்பதோ உன் இஷ்டம். அது ஒரு புறம் இருக்கட்டும். நீ எல்லாம் தெரிந்தவன். இருந்தாலும் உன்னை ஒன்று கேட்க விரும்புகிறேன். விவாகம் செய்து கொள்ள வேண்டும் என்று வான் முறை விதித்திருக்கிறார்களே, எதற்காக? தெரியுமா?” என்று கேட்டார்.

அந்தக் கேள்வியைக் கேட்டதும் பீஜகுப்தன் திகைத்துப் போனான். அதைக் கண்ணுற்ற மிருத்யுஞ்ஜயர், பிள்ளைப்பேற்றை உத்தேசித்துத்தான் அம்மாதிரி விவாகம் செய்து கொள்ளவேண்டும் என்று வான் முறை விதித்திருக்கிறார்கள். ஆகவே விவாகம் அத்தியாவசியமான காரியம் என்று நான் உனக்கு எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. சித்திரலேகாவுக்குப் பிறக்கும் குழந்தை பீஜகுப்தனின் குழந்தையாக ஆகாது. அந்தக் குழந்தை பீஜகுப்தனின் சொத்துக்கு வாரிசாக ஆகவும் முடியாது. இதைப்பற்றி நீ எப்பொழுதாவது சிந்தித்துப் பார்த்தது உண்டா?” என்று கேட்டார்.

உண்மையில் பீஜகுப்தன் அதைப் பற்றிக் கடுகளவும் சிந்தித்தது கிடையாது. ஆகவே அவன் அதற்கு ஒரு பதிலும் சொல்லவில்லை. அவனுக்கு அவர் சொன்னது முற்றிலும் புரியாத மாபெரும் புதிராகவே தோன்றியது. (தொடரும்)

ஆகவே சுவேதாங்கன் என்னை ஒரு பாவி என்று தீர்மானித்து விட்டால் உண்மையாகவே நான் பாவிதான். சந்தேகமில்லை!" என்றான்.

அதைக் கேட்ட யசோதாராவுக்கு உள்ளத்திலே வேல் கொண்டு குத்துவது போன்ற வேதனை எழுந்தது. எவனைக் காதலித்துக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும் என்று கற்பனை செய்த மாத்திரத்திலேயே அவளுடைய உள்ளம் புல்லரித்ததோ, உடல் புளகாங்கிதம் உற்றதோ அவனைப் பாவத்துக்கு இருப்பிடமாகவும் பாவத்தை அறிவதற்கு அவனை ஒரு சாதனமாகவும் மாபெரும் ஆச்சாரியார் ஒருவர் கருதினார் என்றால் அவளுடைய மனம் நோகாமல் எப்படி யிருக்கும்? அவள் சுவேதாங்கனைப் பார்த்தாள். ஆகா! எவ்வளவு அழகிய கள்ளங் கபடமற்ற பால்வடியும் முகம்! ஆமாம், பீஜகுப்தன் ......?

அப்பொழுது போஜனம் முடிந்து விட்டது. ஜனங்கள் எழுந்து கைகால்கள் அலம்பிக் கொண்டு மறுபடியும் மண்டபத்தில் கூடினர். பீஜகுப்தன் சுவேதாங்கனின் கையைப் பிடித்து மிருத்யுஞ்ஜயருக்கு அறிமுகம் செய்து வைத்தான். அதற்குப் பிறகு வந்திருந்த விருந்தினர்கள் அனைவரும் விடை பெற்றுக் கொண்டு தங்கள் தங்கள் வீட்டுக்குப் புறப்பட்டனர்.

## பதினான்காம் அத்தியாயம்

# கல்யாணப் பேச்சு

ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்துக் கொண்டிருந்த மிருத்யுஞ்ஜயரின் மாளிகையில் பிரகாசம் என்னவோ முன்போலவேதானிருந்தது. ஆனால் ஒரே கொண்டாட்டமும் கோலாகலமுமாக உயிர்க்களையுடன் காட்சியளித்த அந்த மாளிகை சோபையிழந்து வெறிச் சென்று ஆகிவிட்டது. அநாவசியமான அதிதிகள் அனைவரும் வெளியேறியதும் நாடகத்தின் பிரதான நடிகர்கள் மட்டுமே எஞ்சியிருந்தனர். யோகி குமாரகிரி, விசாலதேவன், சித்திரலேகா, பீஜகுப்தன், சுவேதாங்கன்—இந்த ஐவரை மட்டும் மிருத்யுஞ்ஜயர் தடுத்து நிறுத்தி வைத்திருந்தார். சிறிது நேரம் வரை அங்கே மௌனம் குடிகொண்டிருந்தது. மிருத்யுஞ்ஜயர் பீஜகுப்தனின் கைகளைப் பற்றிக் கொண்டு, நிறைந்த உள்ளத்துடன், "பீஜகுப்தா! அந்தரங்கமான ஒரு நோக்கத்துடன்தான் இந்தக் கொண்டாட்டம் கொண்டாடுவதற்கு ஏற்பாடு செய்தேன். அந்த நோக்கத்துக்கும் உனக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. தெரியுமா?..." என்றார். பிறகு பக்கத்திலிருந்த தன் குமாரி யசோதாராவைப் பொருள் புதைந்த பார்வையுடன் ஒரு முறை நோக்கினார். பீஜகுப்தனின் வதனம் வாடியது. சித்திரலேகாவின் வதனத்தில் புன்னகை பூத்தது.

"...வயது முதிர்ந்த கிழவரான இந்த மிருத்யுஞ்ஜயரின் வேண்டுகோள் வீண் போகாது என்று நம்புகிறேன்."

மிருத்யுஞ்ஜயரின் அந்தரங்க அபிப்பிராயத்தை அநேகமாக எல்லோருமே புரிந்து கொண்டு விட்டனர். ஆயினும் பீஜகுப்தன், "ஸ்வாமி! வேண்டுகோளை ஒப்புக்கொள்ளுவதும் ஒப்புக் கொள்ளாததும், அதன் தரத்தையும் தன்மையையும் பொறுத்திருக்கிறது. தங்கள் வேண்டுகோளுக்கு ஏற்றவாறு என் பதிலும் இருக்கும்" என்றான்.

மிருத்யுஞ்ஜயர் சற்றுத் தயங்கி யோசனையில் ஆழ்ந்தார். பிறகு "பீஜகுப்தா, உனக்கு இன்னும் விவாகம் ஆகவில்லையல்லவா?" என்று கேட்டார்.

அதைக் கேட்ட பீஜகுப்தன் பக்கத்திலிருந்த சித்திரலேகாவை ஒரு முறை நோக்கினான். என்ன பதில் சொல்வது என்று அவனால் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. மிருத்யுஞ்ஜயர் கேட்டது என்னவோ சரியான கேள்விதான். ஆனால் அந்த இடத்தில் அந்தக் கேள்வி எழவேண்டியது அநாவசியம்; எழுவது தவறுங்கூட என்று தோன்றியது, பீஜகுப்தனுக்கு. ஆகவே அவன், "ஆம், சாஸ்திரரீதியாக இன்னும் விவாகம் ஆகவில்லைதான்!" என்று அடக்கமாகப் பதில் சொன்னான்.

இதைக் கேட்ட குமாரகிரி கம்பீரமான குரலில், "பீஜகுப்தா! சாஸ்திரரீதியாகவும் விவாகம் நடப்பது உண்டா?" என்று கேட்டான்.

"ஆணுக்கும் பெண்ணுக்கும் ஏற்படும் நீடூழியான தொடர்பைத்தான் விவாகம் என்கிறோம்" என்றான் பீஜகுப்தன்.

அதைக் கேட்ட குமாரகிரி சிரித்தான். "ஆனால் விவாகம் என்னும் சொல் சமூ



ஊருக்குப் புதியவர் :—உங்கள் ஊர்க் கோவில் ரொம்பப் புராதனமானது என்று கேள்வி.

ஊர்க்காரர் :—அதெல்லாம் முன் காலத்திலே அப்படியிருந்தது; இப்போது ஒன்றும் இல்லை.

---

வது அவ்வளவு ஒன்றும் மகத்துவம் வாய்ந்த விஷயம் அல்லவே!" என்று மிகவும் அடக்கமாகச் சொன்னான்.

அவன் சொன்னதைக் கேட்ட சித்திரவேகா 'கலீர்' என்று சிரித்து விட்டாள். "அப்படிச் சொல்லாதே! இந்த அறிமுகம் முதிர்ந்து அக்கியோன்னிய அன்பாக மாற வேண்டும். அந்த அன்பு வளர்ந்து உங்களிருவரையும் புனித வாழ்க்கையில் பிணைக்க வேண்டும் என்று நான் எல்லாம் வல்ல இறைவனை வேண்டிக் கொள்கிறேன்" என்று சொல்லிப் பொருள் புதைந்த பார்வையுடன் யசோதராவை ஏற இறங்கப் பார்த்தாள்.

யசோதரா நன்றி ததும்பும் விழிகளால் சித்திரவேகாவைப் பார்த்தாள். பீஜகுப்தன் ஆவல் தவழ அவளை நோக்கினான். ஆனால் சுவேதாங்கன் கண் கொட்டாமல் யசோதராவை விழுங்கி விடுபவன் போலப் பார்த்துக் கொண்டிருந்தான். தற்செயலாக யசோதராவின் கண்கள் சுவேதாங்கனின் கண்களுடன் கலந்தன. அதுவரை யசோதரா சுவேதாங்கனைப் பார்த்ததேயில்லை. அன்று வந்திருந்த விருந்தினர்களில் அநேகமாக எல்லோரையுமே அவளுக்குத் தெரியும். சுவேதாங்கன் ஒருவன் மட்டும்தான் அவளுக்கு அறிமுகம் ஆகாதவனாயிருந்தான். "இந்த வாலிபன் யார்?" என்று பீஜகுப்தனைப் பார்த்து யசோதரா கேட்டாள்.

"இவன் என் ஊழியன். அது மட்டும் அல்ல; இவன் எனக்குத் தம்பியுங்கூட" என்றான் பீஜகுப்தன். அதைச் சொன்னதும் அவனுடைய முகத்திலே இளநகை தவழ்ந்தது.

"நீங்கள் சொல்லுவது எனக்குச் சரியாக விளங்கவில்லை. ஊழியன் என்று சொல்கிறீர்கள். அப்புறம் அவனையே தம்பி என்றும் சொல்லுகிறீர்களே! அது எப்படி?" என்று கேட்டாள்.

"எப்படி என்றுதானே கேட்கிறீர்கள்? இவன் பெயர் சுவேதாங்கன். இவனும் உயர்குலத்து உதித்த க்ஷத்திரியன்தான். ஆனால் இன்னும் பிரும்மசாரியாகத்தானிருக்கிறான். இவ்வளவு நாட்கள் இவன் தன்னுடைய குருவோடு கூடவே இருந்தான். பாவத்தை அறிந்து வரவேண்டும் என்று சொல்லி இவனுடைய குரு இவனை என்னிடம் அனுப்பி வைத்திருக்கிறார். என் மூலமாகத்தான் இந்த இளைஞன் சமூகத்தில் முதன் முதலாகப் பிரவேசிக்கிறான்" என்றான் பீஜகுப்தன்.

யசோதராவின் வியப்பு இன்னும் மேலிட்டது. "பாவத்தை அறிந்து வர வேண்டும் என்று சொல்லி இவருடைய குரு இவரை உங்களிடம் அனுப்பி வைத்திருக்கிறாரா? அப்படியானால் உண்மையாகவே நீங்கள் இருக்கும் இடமோ, அல்லது உங்களுடன் தொடர்பு பூண்டு வாழ்வதோ, பாவத்தை அறிந்து கொள்ளுவதற்குத் தகுந்த இடம் தானா?" என்று கேட்டாள்.

எவ்வளவு அசட்டுப் பெண்! இவளுக்குத் தான் என்ன என்ன சந்தேகங்கள்?— இதை நினைத்த பீஜகுப்தன் மனதுக்குள் தனக்குத்தானே சிரித்துக் கொண்டான். "ஒரு வேளை தகுந்த இடமாக இருந்தாலும் இருக்கலாம். தான் பாவி என்று தன்னைப் பற்றியே மகாபாதகம் செய்தவன் கூடச் சொல்லிக் கொள்ள மாட்டான். ஒவ்வொருவனும் 'தான் மிகவும் நல்லவன்; தன்னைப் போல் நல்லவன் உலகத்திலேயே கிடையாது' என்றுதான் எண்ணுவான். தன்னைத் தானே நன்கு புரிந்து கொள்ளுவது என்பது எவனுக்குமே சிரமமான காரியம்தான்.

யசோதராவையும் ஒப்பிட்டுப் பார்ப்பதில் லயித்துவிட்டது. இருவருமே இணையற்ற அழகிகள்தான். ஒருவருக்கொருவர் சளைத்தவர் இல்லை. ஆனால் ஒருத்தியிடத்தில் மயக்கும் தன்மை மேலோங்கியிருந்தது. மற்றொருத்தியிடத்தில் அமைதி குடிகொண்டிருந்தது. சித்திரலேகாவிடம் மேலோங்கியிருந்த மயக்கும் தன்மை பயங்கரமானது. வண்ணாத்திப் பூச்சி போலப் பல விதப் பட்டாடைகள் உடுத்தி அவள் அரங்கிலே ஆடும் நடனத் தோற்றங்கள் உயிர் பெற்றெழுந்து உணர்ச்சியைத் தட்டி எழுப்பின. மதியை மயக்கும் விஷயத்தில் இயற்கையாகவே அமைந்திருந்த அவளுடைய மயக்கும் தன்மைக்கு அவை பலவாறாகத் துணையும் புரிந்தன. ஆனால் யசோதராவிடம் குடி கொண்டிருந்த அமைதியோ அத்தகையதல்ல; அது ஆழங்காண இயலாத ஆழ்கடலைப் போன்றிருந்தது. அமைதியே உருவெடுத்த அவளுடைய அழகைப் பருக ஆரம்பித்து விட்டால் அப்புறம் மனிதன் தன் நிலைமையையே மறந்துவிட வேண்டியதுதான். சித்திரலேகா வாழ்க்கைப் புயலெனத் தோற்றமளித்தாள். யசோதரா மன அமைதியெனக் காட்சி அளித்தாள். சிறிது சிறிதாகத் தன் உள்ளம் உலகத்தின் மீது நாட்டம் கொள்ளத் தொடங்கிவிட்டது போலவும், அன்பு கிளர்ச்சி கொண்டெழுந்து சோம்பேறித் தனமே உருவெடுத்த வைராக்கியத்தை விரட்டியடித்து வெற்றி வாகை சூடிக்கொள்ள முயலுவது போலவும் குமாரஜீவிக்குத் தோன்றத் தொடங்கியது.

நடனம் முடிந்தது. மிருத்யுஞ்ஜயர் பணிப் பெண்ணைக் கூப்பிட்டு, "சமையல் ஆக இன்னும் எவ்வளவு நேரம் ஆகும்?" என்று கேட்டார்.

"சமையல் ஆகித் தயாராயிருக்கிறது. எஜமானர் உத்தரவு கொடுக்க வேண்டியதுதான் தாமதம்" என்று பணிவுடன் பதில் அளித்தாள் பணிப் பெண்.

விருந்தினர்கள் அனைவரும் போஜன சாலைக்குச் சென்று ஆசனங்களில் அமர்ந்தனர். பணிப் பெண்கள் உணவு பரிமாற ஆரம்பித்தனர். பீஜகுப்தனுக்கு அருகில் யசோதரா உட்கார்ந்திருந்தாள். யசோதராவுக்குப் பக்கத்தில் சித்திரலேகா உட்கார்ந்திருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் சுவேதாங்கன் உட்கார்ந்திருந்தான்.



போஜனம் ஆரம்பமாயிற்று. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் பக்கத்திலே உட்கார்ந்திருந்தவர்களுடன் லோகாபிராமமாக உரையாடவும் ஆரம்பித்தனர். யசோதரா அதுவரை பீஜகுப்தனுடன் பேசியதே இல்லை. பீஜகுப்தன் அவளைப் பார்த்து, "அம்மா! இன்றுதான் முதன் முதலாக நாம் இருவரும் அறிமுகம் செய்து கொள்ளும்படியான பாக்கியம் கிட்டியிருக்கிறது. அது குறித்து நான் அளவற்ற மகிழ்ச்சி அடைகிறேன்" என்றான்.

வாழ்க்கையில் இன்றுதான் முதல் தடவையாக யசோதராவின் அகன்ற நீண்ட மான் விழிகள் அந்நிய புருஷன் ஒருவனை ஏறிட்டுப் பார்த்தன. யசோதராவின் இதயம் 'பட பட' வென்று அடித்துக் கொண்டிருந்தது. அவள் மிகவும் மெதுவான குரலில், "என்னுடன் அறிமுகம் செய்து கொள்ளு

னும் அவமானப்படத் தயாராயில்லை" என்று மிகவும் வெடிப்பாகச் சொன்னாள்.

"அட, இதென்ன கூத்து! உனக்கு என்ன அவமானம் நேர்ந்து விட்டது? நீ சொல்வது ஒன்றும் விளங்கவில்லையே?"

"கலைக்கு மேலாக ஒன்றும் இல்லை. கலைக்குத்தான் மகோன்னத ஸ்தானம் அளிக்க வேண்டும் என்பது என் அழுத்தமான அபிப்பிராயம். கலையை அநுபவிக்க வழி தெரியாமல் அதை அவமதிக்கும் மனிதன் மனிதனே அல்ல. அவன் மிருகத்துக்கு ஒப்பானவன். குமாரகிரியை வரவேற்பதற்காக மிருத்யுஞ்ஜயர் என் நடனத்தை நிறுத்தியது என்னை அவமதித்ததாக ஆகாது என்றால் அது வேறு என்ன?" என்று கோபமாகக் கேட்டாள் சித்திரலேகா.

பீஜகுப்தன் இலேசாகச் சிரித்தான். "சரி, அப்புறம் உன் இஷ்டம். நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது?" என்றான்.

அதற்குள் குமாரகிரி ஆசனம் ஒன்றில் அமர்ந்து விட்டான். சித்திரலேகா யோகி குமாரகிரியின் அருகில் சென்று அவனை வணங்கினாள். பிறகு மிருத்யுஞ்ஜயரைப் பார்த்து, "நான் போய் வர உத்தரவு கொடுங்கள்" என்றாள்.

மிருத்யுஞ்ஜயர் வாய் திறந்து பதில் சொல்ல ஆரம்பிப்பதற்கு முன்பாகவே குமாரகிரி, "நடனராணி! போய் வர உத்தரவு வேண்டுவானேன்? நான் இங்கே வந்தது உனக்குப் பிடிக்கவில்லையா, என்ன? ...ஆமாம், உனக்குப் பிடிக்காமற் போவது சகஜம்தான்!" என்றான். குழந்தை போன்ற காதுக்கினிய மென்மையான குமாரகிரியின் சிரிப்பொலி இன்னிசையைப் போல அறை முழுவதும் எதிரொலித்தது.

சித்திரலேகா சிறிது நேரம் யோசித்து விட்டு, "இல்லை, யோகி! தாங்கள் வந்தது உலகத்தில் யாருக்குமே பிடிக்காமற் போகாது. நான் சொல்வதை நீங்கள் நிச்சயமாக நம்பலாம். நான் இங்கிருந்து போக விரும்புவதற்கு வேறு காரணம் இருக்கிறது" என்றாள்.

"இருக்கலாம். ஆனால் புறப்படுவதற்கு நீ தேர்ந்தெடுத்திருக்கும் இந்தத் தருணம் உசிதமானதாக எனக்குத் தோன்றவில்லையே!" என்றான் குமாரகிரி.

"மன்னிக்க வேண்டும். அப்படியானால் நான் இப்பொழுது போகவில்லை" என்றாள் சித்திரலேகா.

மிருத்யுஞ்ஜயர் மறுபடியும் வீணையைக் கையில் எடுத்துக் கொண்டார். ஆனால் சித்திரலேகா நடனம் ஆட முடியாது என்று தீர்மானமாக மறுதளித்து விட்டாள். அப்பொழுது யசோதரா அவள் அருகில் வந்து, "சித்திரலேகா! நீ சொன்னதை நான் தட்டவில்லை. இந்தத் தடவை நீ நடனமாடித்தான் ஆக வேண்டும் என்று நான் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன். நீ என் வார்த்தையைத் தட்டமாட்டாய் என்று மனப்பூர்வமாக நம்புகிறேன்" என்றாள்.

உண்மையிலேயே யசோதராவின் வேண்டுகோளைச் சித்திரலேகா நிராகரிக்கவில்லை. அவளுடைய வேண்டுகோளை ஏற்று அவள் நடனமாட ஆரம்பித்தாள்.

யோகி குமாரகிரி யசோதராவைப் பார்த்தான். சிறிது நேரம் வரை அவன் வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்தவாறு இருந்தான். அடுத்த கணம் யோகியின் மனம் சித்திரலேகாவையும்






## பதின்மூன்றாம் அத்தியாயம்

# யோகி விஜயம்

சபையோர்களிடையே யசோதரா எங்கே நன்றாகப் பாடப் போகிறாள் என்ற எண்ணம்தான் மேலோங்கியிருந்தது. ஆகவே அவர்கள் அவளுடைய பாட்டில் அதிகமாகக் கவனம் செலுத்தாமல் வெகு அசுவாரஸ்யமாக உட்கார்ந்திருந்தனர். போகப் போக யசோதராவின் பாட்டில் களை கட்டியது. சபையோருக்கும் சுவாரஸ்யம் தட்டியது. இந்தத் தடவை அவள் உண்மையாகவே மக்களின் மனதைப் பரவசப்படுத்தி விட்டாள். எல்லோரும் அவளையும் அவளுடைய பாட்டையும் மனமார வாயாரப் புகழ்ந்தனர். 'பலே! பலே! சபாஷ்! பேஷ்! ஆகா!' என்ற சொற்கள் மகிழ்ச்சியில் மூழ்கியிருந்த மக்களின் வாயிலிருந்து வெளி வந்தன. பாட்டு முடிந்தது. சித்திரலேகா யசோதராவைப் பார்த்து, "உனது காதுக்கினிய இந்த கானத்துக்காக நான் என் மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என்றாள்.

சித்திரலேகா அவ்வாறு வேண்டிக் கொண்டதன் கருத்து அப்பொழுதுதான் மிருத்யுஞ்ஜயருக்குத் தெளிவாக விளங்கியது. ஆகவே அவர், "சித்திரலேகா! நானும் உனக்கு யசோதராவின் சார்பில் என் மனப் பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என்றார்.

இந்தச் சம்பாஷணைகளையெல்லாம் பீஜகுப்தனும் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான். அவன் சிரித்தவாறே, "அது போகட்டும். நடனத்தின் மூலம் மக்களின் மனதைச் சிறிது நேரம் மகிழ்விக்க வேண்டும் என்று நான் சித்திரலேகாவைக் கேட்டுக் கொள்ளலாம் என்றிருக்கிறேன். அவள் என் வேண்டுகோளுக்குச் செவி சாய்ப்பாள் அல்லவா?" என்று கேட்டான்.

"பீஜகுப்தன் வேண்டிக் கொள்வதென்றால், அது எனக்கு உத்தரவுக்குச் சமானம் தான்!" என்று சிரித்துக் கொண்டே பதில் சொன்னாள் சித்திரலேகா.

மிருத்யுஞ்ஜயர் வீணையை எடுத்துக்கொண்டார். பீஜகுப்தன் மிருதங்கத்தை எடுத்துக் கொண்டான். சித்திரலேகா நாட்டியமாட ஆரம்பித்தாள். அங்கு கூடியிருந்தோர் அனைவரும் அவளைப் புகழ்ந்து பாராட்டிய வண்ணம் இருந்தனர். சித்திரலேகா நடனக் கலையில் தனக்கு உள்ள அபாரத் திறமையைப் பிரயோகித்து மக்களைப் பரவசப்படுத்துவதில் ஈடுபட்டாள். அதே சமயம் சிவபூஜை வேளையில் கரடிவிட்ட கதையாக வாயிற்காப்போன், "யோகி குமாரகிரி தமது சிஷ்யனுடன் விஜயம் செய்திருக்கிறார்!" என்று உரக்கச் சொன்னான்.

மிருத்யுஞ்ஜயர் உடனே வீணையைக் கீழே வைத்து விட்டு, குமாரகிரியை எதிர்கொண்டு அழைப்பதற்காக வெளியே சென்றார். மிருத்யுஞ்ஜயர் வீணையைக் கீழே வைத்து விடவே, சித்திரலேகாவின் நடனம் நின்றுவிட்டது.

மிருத்யுஞ்ஜயர் குமாரகிரியை உள்ளே அழைத்து வந்தார். குமாரகிரியுடன் விசாலதேவனும் வந்திருந்தான். குமாரகிரியைக் கண்டதும் எல்லோரும் எழுந்து நின்றனர். அப்பொழுது சித்திரலேகா பீஜகுப்தனைக் கூப்பிட்டு, "நான் வருகிறேன்; எனக்குக் கிடைத்த மரியாதை போதும். நான் இன்

கூட்டமாக வந்தனர். மண்டப முழுதும் மக்களால் நிரம்பியது. டாக்டர் இலட்சுமணசுவாமி முதலியார் தலைமை வகித்தார். பள்ளியின் தலைவர் ஸ்ரீ புருஷோத்தமதாஸ் கோகுலதாஸ் அனைவர்க்கும் அன்புடன் முகமன் கூறி வரவேற்பளித்தார். திரு வி. அரங்கராயலு செட்டியார் அவர்கள் ஸ்தாபகர் நினைவுச் சொற்பொழிவை நிகழ்த்தினர். பிறகு பள்ளியின் கௌரவச் செயலாளர் திரு என். சக்கரவர்த்தி அவர்களாலும் தலைமை ஆசிரியர் திரு எஸ். பாலகிருஷ்ண ஜோஷி அவர்களாலும் பள்ளியின் வருடாந்திர அறிக்கை வாசிக்கப்பட்டது. முன்னேற்றமும் விவரமாகக் கூறப்பட்டது. மேலும் பணியாற்றச் சிறந்த கட்டிடமும் நிதியும் வேண்டுமென்பதை அவர்கள் வற்புறுத்தினர். பிறகு பலவகைப் போட்டிகளிலும் வெற்றி பெற்ற மாணவர்கள் இரு நூறு பேர்களுக்கு விழாத் தலைவர் பரிசு வழங்கினர். திரு என். சக்கரவர்த்தி அவர்களின் வந்தனோபசாரத்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

மறு நாள் 20௳ இல் நிகழ்ச்சிகளை வெற்றிகரமாக நடத்த உதவிய அனைவர்க்கும் வந்தனோபசார விருந்தொன்று நடைபெற்றது.

அவ்வமயம் எல்லாவற்றிற்கும் சிகரமான ஒரு நிகழ்ச்சி நடந்தது. காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஸ்ரீ ஜகத்குரு சங்கராசாரிய ஸ்வாமிகள் அவர்கள் இந்தப் பள்ளி இந்த மதத்திற்கும் இந்த சமுதாயத்திற்கும் செய்த அரிய சேவையைப் பாராட்டி, வைரங்கள் பதித்த அறுகோணத் தங்கப் பதக்க மொன்றை அன்புகூர்ந்து பள்ளிக்கு அனுப்பி வைத்திருந்தார். வேதகோஷத்துடன் மங்கள ஆசிகளுடன் அது தலைவருக்கு வழங்கப்பட்டது.

ஸ்தாபகர் ஸ்ரீ பாண்டியாஜிக்குப் பிறகு இப்பள்ளியின் மேன்மைக்குப் பெரிதும் பாடுபட்டவர் திரு கே. அரங்கஸ்வாமி அய்யங்கார் அவர்கள். தம் ஓயா உழைப்பினாலும், தளரா ஊக்கத்தாலும் திறமையாலும் அவர் இப்பள்ளியை முன்னணிக்குக் கொண்டு வந்தார். அவருக்குப் பிறகு திரு எஸ். பாலகிருஷ்ண ஜோஷி அவர்கள் பள்ளியை முன்னிலும் பன்மடங்கு அதிகமாகப் பிரகாசிக்கச் செய்ய அரும்பாடுபட்டு வருகிறார்.

இந்து தியாலாஜிகல் உயர்நிலைப் பள்ளி இத்தகைய தொண்டை இன்னும் பல ஆண்டுகள் தொடர்ந்து செய்ய இறைவன் அருள்புரியட்டும்!

# குருகுலத்தின் வைர விழா

கல்வி புலவில் சென்னை சௌகார்பேட்டை இந்து தியாலாஜிகல் உயர்நிலைப் பள்ளியை அறியாதார் இல்லை என்றே சொல்லிவிடலாம். அறுபது ஆண்டுகளுக்கு முன் சச்சிதானந்த யோகி சிவசங்கர பாண்டியாஜி என்னும் பெரியார் இக் கலாசாலையை ஸ்தாபித்தார். இந்து மாணவர்களுக்குத் தம் மதத்தின் அடிப்படையான அரிய பெரிய தத்துவங்களை வகுப்புவாதக் கலப்பற்ற முறையில் போதிக்கவும், அன்னிய மதப் பிரசாரச் சூழலிலிருந்து நம் மாணவரைக் காக்கவுமே இப்பள்ளி நிறுவப்பட்டது. இதன் தனிப் பெருஞ் சிறப்பு என்னவென்றால், இங்கு லௌகீகக் கல்வி நவீன முறைகளில் வெகு நன்றாகப் போதிக்கப் படுவதோடு ஒழுங்கு, கட்டுப்பாடு, கைத்தொழில், தேச பக்தி, மதம், முதலியவை பிள்ளைகளின் உள்ளங்களில் பசுமரத்தாணிபோல் பதியுமாறு கற்பிக்கப்படுகின்றன. மாணவர்களைச் சுதந்திர இந்தியாவின் சிறந்த குடிமக்களாக்க இப் பள்ளி அரும்பாடுபட்டு வருகின்றது.

இத்தகைய ஒப்புயர்வற்ற தொண்டை ஆற்றிவரும் மேற்படி பள்ளிக்கூடத்தின் வைரவிழா சென்ற வாரம் மிகச் சிறப்பாக நடந்தேறியது. மாணவர்களுக்கு உவகையூட்டும் இரண்டு நாடகங்களுடன் விழா ஆரம்பமாயிற்று. தமிழில் துர்க்காதாஸ் என்னும் தேசபக்தி ததும்பும் நாடகமும், தெலுங்கில் இராமதாஸ் என்னும் பக்திச் சுவை நிரம்பிய நாடகமும் நடிக்கப்பட்டன. வேஷப் பொருத்தமும் காட்சி ஜோடனைகளும் வெகு நன்றாக அமைந்தன. நடிப்பு மிக்க உயர்தரமாக இருந்தது. முதல் நாள் தலைமை தாங்கிய கல்வி மந்திரியும் இரண்டாம் நாள் தலைமை வகித்த நீதிபதி பி. சத்திய நாராயண ராவ் அவர்களும் நாடகங்களை மிகவும் மெச்சி ரசித்து அனுபவித்து, நடிகர்களை மிகவும் பாராட்டிப் பேசி, பாடசாலைக்கு ஆசிகூறிச் சென்றனர்.

16உ வெள்ளிக்கிழமை காலை 7 மணிக்கு மிக அழகாக அலங்கரிக்கப்பட்ட பள்ளிப் பிரார்த்தனை மண்டபத்தில் கலைமகளுக்கெதிரில் வேத முறைப்படி வேள்வி வளர்க்கப்பட்டது. பிறகு வேத பாராயணமும் கலைமகள் பூஜையும் நடந்தன. இக் கண்கொள்ளாக் காட்சி பழைய குருகுலங்களை நினைப்பூட்டியது. பூஜை முடிந்ததும் திருப்புகழ் மணி அவர்கள் தமது இனிய கானாமிர்தத்தினால் அனைவரையும் பரவசப்படுத்தினார். அன்று மாலை மாணவர்கள் அனைவரும் அமைதியாயும் அழகாயும் ஒழுங்காயும் பாடசாலை விளையாட்டு மைதானத்தில் கூடினர். மந்திரி கனம் பி. பரமேச்வரன் அவர்கள் பள்ளியின் திருக்கொடியை ஏற்றுவித்தார். காந்திஜியின் போதனைகளைப் பின்பற்றுமாறும், தீண்டாமையை ஒழிக்குமாறும் அவர் பிள்ளைகளைக் கேட்டுக்கொண்டார். பிறகு எல்லாப் பிள்ளைகளுக்கும் இன்சுவைப் பட்சணங்கள் வழங்கப்பட்டன.

17உ காலை உடற் பயிற்சிப் போட்டிகள் நடைபெற்றன. அதில் பள்ளியின் தற்போதைய மாணவர்களும், பழைய மாணவர்களும், ஆசிரியர்களும் கலந்து கொண்டனர். அன்று மாலை மைசூரின் மாஜி பிரதம நீதிபதி ஸ்ரீ பி. வெங்கடரமண நாயுடு அவர்களின் தலைமையில் பள்ளியின் பழைய மாணவர் விழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. களக்காடு ராம நாராயணன் அனைவர்க்கும் ஆனந்தமான சங்கீத விருந்தளித்தார்.

18உ காலை கல்லூரு வீரபத்திர சாஸ்திருலு என்னும் பெரியாரால் துருவ சரித்திர காலட்சேபம் மிக அழகாக நடத்தப்பட்டது. அன்று மாலை பெற்றோர் விழா கொண்டாடப்பட்டது. அன்று தலைமை வகித்த நீதிபதி திரு பி. இராஜகோபாலன் இப் பள்ளி மாணவர்களிடம் காணப்படும் ஒழுக்கமும், ஒழுங்கு முறையும் எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் காணப்பட்டால் மாணவர்களால் எங்கும் தொல்லைகளே உண்டாகாதெனக் கூறினார். அன்று இரவு பள்ளியின் பழைய மாணவன் சிரஞ்சீவி டி. எஸ். சந்திரசேகரனால் குழலிசைக் கச்சேரி நடத்தப்பட்டது.

19உ திங்கட்கிழமை வைர விழா நாள். பள்ளி என்றுமில்லாப் பொலிவுடன் விளங்கியது. காலையில் பிரம்மஸ்ரீ சோமதேவ சர்மா அவர்கள் ஸ்ரீ ராமகாருண்யத்தைப் பற்றி அற்புதமாக உபன்யாசித்தார். மாலை 5 மணி கூட்டத்திற்கு 3-30 மணியிலிருந்தே மக்கள் திரள் திரளாக வர ஆரம்பித்தனர். கல்வி அபிமானிகளும், பேராசிரியர்களும், தலைமையாசிரியர்களும், பெற்றோர்களும், பள்ளியின் அன்பர்களும்

கொஞ்ச தூரம் போய்த் திரும்பிப் பார்த்தால் சுமார் ஐயாயிரம் ஜனங்கள் அமைதியாக உட்கார்ந்து கொண்டிருந்தனர். "இவர்கள் ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறார்கள்?" என்று கேட்டேன்.

"இதுதான் கலைநிகழ்ச்சிப் பகுதி. கண்காட்சியிலேயே முக்கியமான இடம். உட்காருங்கள்; நாமும் நாடகம் பார்க்கலாம்" என்று சொல்லி என் தோளைப் பிடித்து உட்காரவைத்தார்.

"என்ன ஸார், இவ்வளவு தூரத்தில் உட்கார்ந்தால் நாடகத்தில் பேசுகிறது காதில் விழுமா?" என்று கேட்டேன்.

"பேஷாக விழும்; உட்கார்ந்து கேட்டுப் பாரும். எல்லோருக்கும் கேட்க வேண்டுமே என்றுதான் ஒலி பெருக்கி ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள்" என்று அவர் சொல்லி முடிப்பதற்கும் நாடகம் ஆரம்பிப்பதற்கும் சரியாக இருந்தது.

நாடகத்தைக் கடைசி வரையில் நன்றாகவே பார்த்தோம். நாடகக் கொட்டகையில் உட்கார்ந்து பார்ப்பதைவிடச் சௌகரியமாக இருந்தது. நாடகத்தின் உயர்வைப் பற்றிச் சொல்ல வேண்டியதே இல்லை. எல்லோரும் அமைதியாக இருந்து பார்த்ததே அதற்குச் சாட்சி சொல்லும். ஒவ்வொரு நாளும் புதுப்புது நாடகம், நடனம், சங்கீதக் கச்சேரி, தேக வலிமைக் காட்சி முதலியவைகளை எல்லாம் நாம் வாங்கிய காலணா டிக்கட்டிலேயே பார்த்து விடலாம்.

நாடகத்தைப் பார்த்தவுடன் என்னைப் பிடித்து இழுத்துக் கொண்டு அசோகா தெருவுக்குப் போனார். சுத்தமாக சிமெண்டு ரோடு போட்டுப் பிளாட்பாரம் கட்டிச் சிறு கடைகளையே அமைத்திருக்கிறார்கள். அசோகா தெருவில் உள்ள பல ஸ்டால்களைச் சென்னை நகரசபை எடுத்துக் கொண்டிருக்கிறது. அதில் ஒரு ஸ்டாலில் சென்னை நகரில் ஒவ்வொரு வீட்டுக் குழாயிலும் ஜலம் வருகிறதே. அது எங்கிருந்து எப்படி வருகிறது என்பதைப் பிரமிக்கத் தக்க முறையில் அமைத்துக் கட்டியிருக்கிறார்கள். புழலேரியையும், சோழவரம் ஏரியையும், பூண்டித் தேக்கத்தையும் கண்ணெதிரே பார்ப்பது போல இருக்கிறது. "இவ்வளவு அபாரமான ஏற்பாடுகள் செய்திருந்தும் நம் வீட்டில் இருக்கும் குழாய்கள் மட்டும் ஒழுங்காக வேலை செய்ய மாட்டேன் என்கிறதே! அந்தக் குழாய்மீதுதான் கோபங்கொள்ள வேண்டும் போலிருக்கிறது!" என்று சொன்னார் என் நண்பர்.

எக்ஸிபிஷனில் இன்னும் என்னவெல்லாமோ இருக்கிறது. மத்திய சர்க்காரின் வேலை தேடித்தரும் ஸ்தாபனம், தொழில்—வியாபார ஸ்தாபனம், மாகாண ஒலி பரப்பு இலாகா முதலியவைகளை எல்லாம் பார்த்துவிட்டுப் பொது மக்களுக்குச் சேவை புரிந்து வரும் பல ஸ்தாபனங்கள் இருக்கும் பகுதிக்குச் சென்றோம். கோகுலம் ஹரிஜன் காலனி, தக்கர்பாபா வித்யாலயம், வாலாஜாபாத் இந்துமத பாடசாலை முதலியவைகள் தாங்கள் செய்து வரும் சேவையைக் காண்பிக்கின்றன. இந்தப் பகுதியில் நாச்சியப்பர் என்ற குருடர் நூல் நூற்றுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார். அவருடைய சரித்திரத்தைக் கேட்டபோது கண்ணில் ஜலம் வந்துவிட்டது. சேலத்தில் முதன் முதலில் மதுவிலக்கு அமுலுக்கு வந்த





பொழுது திருட்டுச் சாராயம் காய்ச்சிய பாவிகள் அவருடைய இரண்டு கண்களையும் அவித்து விட்டார்களாம். திருச்செங்கோடு ஆசிரமத்தார் அவரைக் கொண்டு வந்து அவருக்குச் சிகிச்சை செய்து நூல் நூற்கக் கற்றுக் கொடுத்திருக்கிறார்கள். அந்த அபாக்கிய சாலிக்கு உதவி புரிந்த திருச்செங்கோடு ஆசிரமத்தையும் அதன் தலைவரையும் நம்மையும் அறியாமல் வாயார வாழ்த்தி வணங்க வேண்டி யிருக்கிறது.

அங்கிருந்து புதை பொருள் காட்சிச் சாலைக்குப் போனோம். அங்கு சுமார் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முந்தைய விக்கிரகங்கள் நம் சிந்தையைக் கவருகின்றன. அதில் ஒரே கல்லினால் செய்த நாதஸ்வரம் ஒன்று இருக்கிறது. அதுசுமார் ஆயிரத்து ஐந்நூறு வருஷங்களுக்கு முன் செய்ததாகவும் அதைக் கொண்டு வாசிக்கவும் செய்யலாம் என்றும் தெரிந்த போது பழங்காலத் தமிழர்களின் கலைப் பண்பை நினைத்து என் நெஞ்சு நிமிர்ந்தது. இந்த அரிய கலைப் பொருளைக் கொண்டு வந்து வைத்திருக்கும் தருமபுரம் ஆதீனத்தாருக்கும் நன்றி செலுத்த வேண்டும்.

இன்னும் எக்ஸிபிஷனில் பல வேடிக்கைக் காட்சிகளையும் பார்த்தோம். சிறுவர்கள் குதூகலமாகப் பார்த்துக் களிக்கும் பல காட்சிகள் இருக்கின்றன. ஆனால் அதைப் பெரியவர்களும் பார்த்து அனுபவிக்கலாம். மின்சார ரயில் வண்டி ஒன்று சுற்றிக் கொண்டு வருகிறது. அதில் நாம் உட்கார்ந்து கொண்டே போகலாம். ஒரு இடத்தில் பொம்மை பேசுகிறது. நாம் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லுகிறது. ஆச்சரியமாக இல்லையா? மெழுகு பொம்மைக் காட்சியில் காந்திஜி நூல் நூற்பது போலவும் ஒரு ஹரிஜனச் சிறுவன் பஞ்சு பட்டை போடுவது போலவும் தத்ரூபமாகச் செய்திருக்கிறார்கள். பார்க்க வேண்டிய காட்சி. இவ்வளவும் போதாது என்றோ என்னவோ அங்கு ஒரு சினிமாக் கொட்டகை வேறு இருக்கிறது. அதில் தினம் ஒரு புதுப் படம் போடுகிறார்கள். மனதிற்கு உல்லாசத்தைக் கொடுக்க வேறு என்ன வேண்டும்?

இந்தச் சமயத்தில் அந்த வழியே வந்தவர் "மணி என்ன?" என்று கேட்டார். கடிகாரத்தைப் பார்த்தேன். உடம்பில் மின்சாரம் தாக்கியது போலிருந்தது எனக்கு. இரவு மணி ஒன்பதாகிவிட்டது. மத்தியானம் இரண்டு மணியிலிருந்து நேரம் போனதே தெரியாமல் சுற்றியிருக்கிறோமே வீட்டுக்குப் போக வேண்டியதுதான் என்று நினைத்து என்னுடன் வந்திருந்த நண்பரைப் பார்த்தேன். அவரைக் காணவில்லை. மணிபர்ஸ் அவரிடம் இருந்ததால் நான் ரொம்பவும் தவித்துப் போய்விட்டேன்.

அந்தச் சமயத்தில் "ஹலோ! மிஸ்டர் பகீரதன்! உங்கள் நண்பர் உங்களுக்காக மௌண்ட் ரோடு கேட்டில் காத்துக் கொண்டிருக்கிறார். உடனே போங்கள்" என்று ஒலி பெருக்கியிலிருந்து சத்தம் வந்தது. இதைக் கேட்டதும் எனக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது. அதைப் பற்றி அருகிலிருந்தவர்களை விசாரித்தேன். "யாராவது கூட்டத்தில் காணமற் போய் விட்டால் கவலைப் படவேண்டியதில்லை. இங்குள்ள சேவாதள ஆபீஸில் சொன்னால் போதும். அவர்கள் ஒலிபெருக்கி மூலம் கூப்பிட்டு விடுவார்கள்" என்று சொன்னார்கள். "எவ்வளவு அருமையான ஏற்பாடு செய்திருக்கிறார்கள் இந்த எக்ஸிபிஷன் கமிட்டியார்" என்று அவர்களை மனதார வாழ்த்திக் கொண்டே மௌண்ட் ரோடு கேட்டை நோக்கிச் சென்றேன்.

• • •

சுமார் பன்னிரண்டு ஏக்கர் சுற்றளவுள்ள இடத்தில் எக்ஸிபிஷன் அமைந்திருக்கிறது. எக்ஸிபிஷனுக்குள் 750 ஸ்டால்கள் இருக்கின்றன. அதில் 350 ஸ்டால்களைச் சர்க்காரே எடுத்துக் கொண்டிருக்கின்றனர் என்று தெரிந்து கொண்ட போது, என் மனது சுமார் பத்தொன்பது வருஷங்களுக்குப் பின்னால் சென்றது.

1931-ம் வருஷம் இந்த அகில இந்திய சுதேசிப் பொருட்காட்சியைத் தீரர் சத்திய மூர்த்தி அவர்கள் ஆரம்பித்து வைத்தார்கள். அது இன்று பெருகி வளர்ந்து இந்தியாவிலேயே சிறந்த பொருட்காட்சிகளில் ஒன்றாக விளங்குவதை அவர் இருந்து பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே என்று எண்ணி ஏங்கினேன்.

ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு ஞாபகச்சின்னம் அமைக்க வேண்டும் என்று சில அன்பர்கள் ஒரு முயற்சி தொடங்கினார்கள். அது இடையில் நின்று விட்டது. ஆண்டு தோறும் நடைபெறும் இந்த அரும் பெரும் சுதேசிப் பொருட் காட்சியைக் காட்டிலும் தீரர் சத்தியமூர்த்திக்குச் சிறந்த ஞாபகச் சின்னம் வேறு இருக்கமுடியாது என்ற எண்ணத்துடன் என் நண்பரிடம் விடைபெற்றுக் கொண்டு வீடு திரும்பினேன்.



கலா மண்டபத்தின்
சித்திரப் பகுதியில்
கவர்னர் தம்பதிகள்

ஆட்கள் நிற்பதுபோல வரிசையாக ஆண்களும் பெண்களும் குழந்தைகளுமாகக் 'க்யூ'வில் நின்று கொண்டிருந்தனர். "அவர்கள் ஏன் அப்படி நிற்கிறார்கள்?" என்று ஆவலுடன் கேட்டேன்.

"சர்க்காரின் மின்சார இலாகாவைப் பார்ப்பதற்குத்தான்" என்று சொல்லிவிட்டு என்னை அழைத்துக் கொண்டு அந்தக் 'க்யூ'வின் கடைசியைக் கண்டுபிடிக்க ஆரம்பித்தார் நண்பர். கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடித்தது போல நாங்கள் அந்த நீளமான 'க்யூ'வின் கடைசி பாகத்தைக் கண்டு பிடிச்சுக் கால் கடுக்க நின்று மின்சார இலாகாவின் உள்ளே நுழைந்தோம்.

'குளு குளு' வென்று காற்று வீசிக் கொண்டிருந்தது. "இது என்ன 'ஊட்டி' மாதிரி இருக்கிறதே!" என்றார் கூட்டத்தில் ஒருவர். "ஆமாம், இதுதான் உதகமண்டலம்" என்று சொல்லிப் பக்கத்தில் கையைக் காண்பித்தார். உதகமண்டலத்துக்குப் போய் நேரில் பார்ப்பது போலவே இருந்தது அந்தக் காட்சி. அங்கு பைக்காரா நீர் வீழ்ச்சியிலிருந்து எப்படி மின்சாரம் உற்பத்தியாகிறது என்பதை அப்படியே தத்ரூபமாக அமைத்து வைத்திருக்கிறார்கள். அதைத் தாண்டி அப்பால் சென்றால் மேட்டூர் அணை இருக்கிறது. அந்த அணையையும் கடந்து சென்றால் சென்னை நகருக்கு மின்சாரம் கொடுக்கும் 'எலக்ட்ரிக் பவர் ஸ்டேஷ'னின் பல பாகங்களையும் தனித் தனியாகக் காண்பிக்கிறார்கள். முன்பெல்லாம் இதைப் பெரிய மூடுமந்திரமாக மூடி மூடி வைத்திருப்பார்களாம். சுதந்திரம் பெற்ற நாட்டில் எல்லா விஷயங்களும் எல்லா மக்களுக்கும் தெரிய வேண்டும் என்பதற்காகவே இதையெல்லாம் காண்பிக்கிறார்கள். இந்தச் சமயத்தில் "அதோ மகாபலிபுரத்துக்கு ரயில் கிளம்பி விட்டது" என்று சத்தம் போட்டார் ஒருவர். திரும்பிப் பார்த்தேன்; நிஜமாகவே மகாபலிபுரத்தை நோக்கி ஒரு மின்சார ரயில் வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. அதைப் பார்த்து விட்டுத் திரும்பியவுடன், "இதுதான் உலகக் கடிகாரம்" என்றார். அது உலகத்தில் உள்ள எந்தப் பாகத்தில், எந்த ஊரில், இப்பொழுது என்ன மணி என்பதைக் காண்பிக்கிறது.

அடுத்தாற்போல் மராமத்து இலாகாவுக்குள் சென்றோம். அதைச் சுற்றிப் பார்த்து விட்டுத் திரும்பி வரும்போது நான் மிகவும் களைத்துப் போய்விட்டேன்.

"என்ன ஒருமாதிரி இருக்கிறீர்களே?" என்று கேட்டார் நண்பர்.

"எனக்கு வயிற்றைப் பசிக்கிறது. மேலே ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாது" என்று சொன்னேன்.

"கவலைப்படாதீர்கள்" என்று சொல்லி என் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு அருகில் உள்ள மத்திய சர்க்காரின் மேற்பார்வையில் நடக்கும் 'இந்திய மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டா'ரின் காப்பி ஹோட்டலுக்குச் சென்றார். அங்கு சுவையான டிபனும் முதல்தரமான காபியும் சாப்பிட்டோம். தாங்கமுடியாத ஜனக் கூட்டத்திலும் இவ்வளவு நன்றாகச் செய்திருக்கிறார்களே என்று வாழ்த்திவிட்டுக் கிளம்பினோம்.




# தேனாம்பேட்டைத் திருவிழா

பகீரதன்

"நானும் எத்தனையோ கண் காட்சிகளைப் பார்த்திருக்கிறேன். இதுபோல் பார்த்ததில்லை, சார்!" என்று சொல்லிக் கொண்டே வந்தார் என் நண்பர்.

"எதைச் சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டேன்.

"அதுதான் தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் திருவிழாவைப்போல் நடக்கிறதே, அகில இந்தியக் கதர் சுதேசிப் பொருட் காட்சி; அதைத்தான் சொல்லுகிறேன்" என்றார்.

"அதில் என்ன அப்படி அதிசயம்?"

"அவ்வளவு எளிதில் சொல்லிவிட முடியாது. நீங்கள் நேரில் வந்து பாருங்கள் தெரியும்" என்றார்.

"ஏதாவது 'பாஸ், கீஸ்' வைத்திருக்கிறீரா?" என்று கேட்டேன்.

"அதுமாதிரி 'ஓஸி' டிக்கட்டிலே போகக் கூடாது. 'எல்லாரும் காசு கொடுத்து டிக்கட் வாங்கிக் கொண்டுவந்து எக்ஸிபிஷனைப் பார்க்கவேணும்' என்று இந்தப் பொருட் காட்சியைத் திறந்துவைத்த நம் கவர்னர் ஜெனரல் ராஜாஜி அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். டிக்கட் ஒன்றும் அதிக விலை இல்லை. காலே அணாத்தான்" என்று சொல்லி என் கையைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துக்கொண்டு போனார்.

ராஜாஜி அவர்களின் வேண்டுகோளின்படி மேன்மை தங்கிய என் நண்பர் இரண்டு டிக்கட்டுகள் காசு கொடுத்து வாங்கினார். அதை வைத்துக்கொண்டு மௌண்ட்ரோடு கேட் வழியாக எக்ஸிபிஷனுக்குள் நுழைந்தோம். அங்கே பார்த்த காட்சி ஏதோ ஒரு புது உலகத்தில் இருப்பது போன்ற பிரமையை எனக்கு அளித்தது. சற்று நேரம் ஒன்றுமே தோன்றாமல் நின்று விட்டேன்.

"என்ன இப்படித் திகைத்து நின்று விட்டீர்களே?" என்றார் என் நண்பர்.

"இந்தக் குதூகலமான ஜனக் கும்பலைப் பார்த்து விட்டுத்தான்." என்றேன்.

"ராஜாஜியே கேட்டுக்கொண்ட பிறகு கூட்டத்துக்குக் குறைச்சலா இருக்க முடியும்? இன்னும் எக்ஸிபிஷனுக்குள் நுழைந்து பார்த்தால் உம்முடைய மூச்சே நின்று விடும்போலிருக்கிறதே!" என்று சொல்லி விட்டு "உம், நடவுங்கள்" என்றார். நானும் அந்த ஜனப் பிரளயத்தில் இறங்கி அவருடன் சேர்ந்து நீந்திச் சென்றேன்.

முதலில் கண்ணெதிரே கலா மண்டபம் எங்களை எதிர்கொண்டழைத்தது. அந்தக் கலா மண்டபத்தின் வெளி அமைப்பு ஒரு குன்றைக் குடைந்து கோவிலாக்கியது போலக் கலை அழகுடன் அமைந்திருக்கிறது. அந்தக் கலைக் கோவிலின் அற்புதத் தோற்றத்தில் மயங்கி இருந்தபோது "டிக்கட் வாங்கிவந்து விட்டேன். உள்ளே போகலாம்" என்று சொல்லி என்னைப் பிடித்துத் தள்ளிக் கொண்டே போனார் நண்பர்.

கலா மண்டபத்துக்குள்ளிருக்கும் சித்திரம், சிற்பம், புகைப்படம் முதலிய எழுநூற்றுக்கு மேற்பட்ட கலைச் செல்வங்களைப் பார்த்து அனுபவிப்பதற்கு என்னுடன் வந்த நண்பரைப் போன்றவர்களின் துணையோடு சென்றால் நடக்காது. சிறந்த கலா ரஸிகர்களுடன் சென்று நிதானமாகப் பார்த்து அனுபவித்து மகிழவேண்டும்.

கலா மண்டபத்தை விட்டுப் பிரிய மனமில்லாமல் வித்தியா நகருக்குள் நுழைந்தோம். அங்கு சென்னை நகருக்குள் இருக்கும் பள்ளிக்கூடங்களில் சில ஒருங்கு சேர்ந்து கல்வி சம்பந்தமான பல விஷயங்களை ஜனங்களுக்குச் சொல்லுவதற்காக அனேக 'ஸ்டால்'களை அமைத்திருக்கிறது. அதில் உள்ள ஒவ்வொரு பகுதியையும் பார்த்துக் கொண்டு வருவதற்குள், "இதை வந்து முதலில் பாருங்கள், ஸார்!" என்று சொல்லி என்னை ஒரு மூலைக்குத் தள்ளிக் கொண்டு போனார் என் நண்பர்.

அங்கு சில ஆண்களும் பெண்களும் பிரம்பினால் நாற்காலி, கூடை, விதம் விதமான தட்டுகள் போன்றவைகளைப் பின்னிக் கொண்டிருந்தனர். இன்னொரு புறத்தில் ஒரு பெண் நெசவு செய்து கொண்டிருந்தாள். இதில் என்ன ஆச்சரியம் என்று நினைக்கும்போதே எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. "பிரம்பைக் கொண்டு கூடை முடைவதும், நூலைக் கொண்டு தறியில் துணி செய்வதும் ஒரு வேடிக்கையா?" என்று கேட்டேன்.

"நன்றாகக் கேட்டீர்! இவர்கள் அத்தனை பேரும் கண்ணை இழந்த அபாக்கிய சாலிகள், குருடர்கள்" என்று பதில் கிடைத்தது.

அதைக் கேட்டவுடன் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. என்றாலும் நம்பவே முடியவில்லை. கண் உள்ளவர்கள் செய்வதைவிட அழகாகவும் சுத்தமாகவும் வேலைப்பாடுடனும் சுறுசுறுப்பாகச் செய்கிறார்கள். துணி நெய்யும்போது தறியில் எங்கேயாவது ஒரு நூல் அறுந்து விட்டால் கூட அதைக் கண்டு பிடித்து எடுத்துச் சரி செய்து கொள்கிறார்கள். பிறர் தயவு இல்லாமலேயே தங்கள் வேலைகளைக் கவனிக்கிறார்கள். இதைப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அங்கிருந்த அரங்க மேடையின் அருகில் என்னை அழைத்துப் போனார் நண்பர். அங்கு நான் பார்த்த காட்சி உண்மை தானா என்று தெரிந்து கொள்ளுவதற்கு என்னையே ஒரு தரம் கிள்ளிப் பார்த்துக் கொண்டேன்.

கண்களை இழந்த அந்த மாணவர்கள் கவியரசர் பாரதியின் வாழ்க்கையை நாடகமாக நடித்துக் கொண்டிருந்தார்கள். அதில் ஆண் பிள்ளைகளும் பெண் பிள்ளைகளும் சிறு குழந்தைகளும் கலந்து கொண்டு நடித்தனர். அற்புதம், போங்கள்! அந்த நாடகத்துக்குப் பின்னணி சங்கீதமாக வயலின், புல்லாங்குழல், ஹார்மோனியம், மிருதங்கம் முதலியவைகளையும் அந்தக் கண் இழந்தவர்களே பிரமாதமாக வாசித்தார்கள். இந்தக் குருடர்களின் வாழ்க்கையும் சந்தோஷமாக இருக்கும்படி செய்த புண்ணியவானை வாழ்த்தாமல் இருக்க முடியவில்லை.

வித்தியா நகரத்தை விட்டு வெளியே வந்து எக்ஸிபிஷனைச் சுற்றிப் பார்த்தோம். வரிசை வரிசையாக ஜகஜ்ஜோதியாகப் பிரகாசிக்கும்படி விளக்குகளைப் போட்டு அலங்கரித்திருந்த கடைகளைப் பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும். அந்தக் கடைகளில் பெண்மணிகளும் ஆண்மணிகளுமாக நின்று சாமான்களை வாங்குவதும் அடுத்த கடைக்குப் போய் வேடிக்கைப் பார்ப்பதும் கலகலவென்று சிரிப்பதும் ஒரு அற்புதமான காட்சியாக இருக்கிறது. அதைப் பார்த்து மகிழ்வதற்காகவே போகலாம் எக்ஸிபிஷனுக்கு.


பொதுக் காரியதரிசி
ஸ்ரீ எஸ். வெங்கட்ராமன்

இப்படிக் கடைகளை எல்லாம் பார்த்த பிறகு விவசாய இலாகா, உணவு இலாகா, மீன் இலாகா, காட்டு இலாகா முதலியவைகளைப் பார்த்துக் கொண்டே வந்து கொண்டிருந்தோம்.

ஒரு இடத்தில் திருவாரூர் தேர் வடம் பிடிக்க நீளமாக



எம். எஸ். திரௌபதி

பாடியும் உல்லாசமாகப் பேசியும் ரஸிகர்களின் உள்ளத்தைக் கவர்கிறான். மீனாக்ஷி என்னும் கிராமத்துப் பெண்ணாக நடிக்கும் எம். எஸ். திரௌபதியின் இயற்கையான சோக நடிப்பு படம் பார்ப்பவர்களைக் கண்ணீர் விடச் செய்கிறது. "வாழ்க்கை"ப் படத்தை ஒரு தடவை பார்த்தவர்கள் தங்கள் வாழ்க்கை முழுதும் அதை மறக்க முடியாது. "வாழ்க்கை வாழ்வதற்கே!" என்னும் பழமொழி ஸ்ரீ ஏ. வி. மெய்யப்பன் அவர்களால் மாறி, "வாழ்க்கை பார்ப்பதற்கே!" என்னும் புது மொழி ஏற்பட்டு விட்டது. ★ ★ ★



வைஜயந்திமாலா

★ ★ ★ வெள்ளித்திரையில் இரண்டு புதிய நடிகை நட்சத்திரங்கள் தோன்றிச் சுடர் வீசிப் பிரகாசிக்கிறார்கள். ''வாழ்க்கை'' என்னும் படத்தில் அவர்கள் கதாநாயகிகள் ''வாழ்க்கை'' சென்னை வாசிகளின் வாழ்க்கையைக் குதூகலத்தில் ஆழ்த்தியிருக்கிறது. ''நாம் இருவர்'' ''வேதாள உலகம்'' முதலிய படங்களைக் கொண்டு வந்து தமிழ்நாட்டு ரசிகர்களைத் திணற அடித்த ஸ்ரீ ஏ. வி. மெய்யப்பர்தான் ''வாழ்க்கை''யையும் சிருஷ்டித்திருக்கிறார். இந்தப் படத்தில் மோகனா என்னும் கதாபாத்திரமாகத் தோன்றும் வைஜயந்திமாலா ஆடியும்

வயிற்றுப் போக்கும் ஏற்படும். குழந்தைகள் (கும்பலில்) பெற்றோர்களைக் காண முடியாமல் இடம் ஓலம் ஏ. ஆர். பி. சங்கையும் தோற்கடிக்கும். இதன் நடுவில் ஒரு குழந்தையைக் காணாமல் போய் நீங்கள் ஸ்டேஷனுக்குப் போகும்படியாகவும் நேரிடும். உங்கள் வீட்டுக் கண்ணாடி, பித்தளை, வெள்ளிச் சாமான்கள், குழாய், மேஜை, நாற்காலிகள், புத்தகங்கள், அடியோடு உரு மாறிவிடும். இவைகளை முன்னிட்டு இந்த ராசிக்காரர்கள் வார ஆரம்பத்திலேயே ஊரை விட்டுக் கிளம்பி விடுவது நல்லது. மளிகை, வாழை இலை வியாபாரிகளுக்கும், டாக்டர்களுக்கும் இது நல்ல வாரம். ரேஸ் கூடாது.

கும்பம் :—(அவிட்டம் ½, சதயம், பூரட்டாதி ¾)

இவர்களுக்கு முதல் நான்கு நாட்களில் தனலாபம், மனைவியின் அனுதாபம், புதுத் துணி வாங்குதல் ஏற்படும். அடுத்த இரண்டு நாட்களில் கீழ் அதிகாரிகளின் தொல்லை, குழந்தைகளின் சுகக் குறைவு ஏற்படும். சனிக்கிழமை திடீரென்று பணம் வர ஏது இருக்கிறது. ரேஸ் ஆடவும் லாட்டரி போடவும் நல்ல வாரம். தையல் காரர்கள், புடவை, வளையல் வியாபாரிகளுக்கு இது நல்ல வாரம்.

மீனம் :—(பூரட்டாதி ¼, உத்திரட்டாதி, ரேவதி)

இந்த ராசிக்காரர்களுக்கு இது ஒரு அபூர்வமான வாரம். வாரத்தின் ஏழு நாட்களும் ஒரு சினிமா, டிராமா, கச்சேரி, டீ பார்ட்டி அல்லது மீட்டிங்குக்காவது போக நேரிடும். இந்த ராசிக்காரர்கள் மந்திரிகளாய் இருந்தால் மேலே சொன்னவை கட்டாயம் நடக்கும். மந்திரிகளாய் இல்லாதவர்கள் இந்த விஷயங்களை வார முழுதும் பேப்பரிலாவது படிக்கலாம், சோடா கலர் வியாபாரிகளுக்கும், பூமாலை வியாபாரிகளுக்கும், ஹோட்டல் முதலாளிகளுக்கும் இது வரும்படியைக் கொடுக்கும் வாரம். ஆனால் வாரத்தின் கடைசி நாள் கேது பார்வையால் நாட்டிய ராணிகளும் (முக்கியமாக நாட்டிய 'பேபிகளும்') சினிமா அரசிகளும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நாட்டிய ராணிகள் நடு ஆட்டத்தில் தடுக்கி விழ நேரிடும். சினிமா அரசிகளாயிருந்தால் நடு ஷூட்டிங்கில் கதா நாயகன் அவர்களுடைய தலைப் பின்னலைப் பிடித்திழுக்கும்போது 'டோபா' கையோடு வந்து எலி வால் பின்னலை வெளிப்படுத்திவிடும். கத்திரிக்காய், சர்க்கரை வள்ளிக் கிழங்கு வியாபாரிகள் துணிந்து 'ஸ்பெகுலேஷன்' செய்யலாம். மற்றபடி, சர்க்கரை, கோதுமை வியாபாரிகளுக்கு இது நல்ல வாரம். குதிரைப் பந்தயத்துக்குப் போவதாயிருந்தால் அதிர்ஷ்ட எண் - பதின்மூன்று.

# உங்கள் ராசி பலன் இந்த வாரம்

எம். எஸ். மணி

குறிப்பு :—இது பொதுவாக இந்த வாரம் இருக்கும் நிலைமையை ஆராய்ந்து அலசி எழுதப்பட்டது., மற்றப்படி நல்ல காலம் இருப்பவர்களுக்கு எல்லாம் நல்லதாகவும் கெட்ட காலம் இருப்பவர்களுக்கு எல்லாம் கெடுதலாகவும் நடக்கும். பொன், வெள்ளி, பங்கு வியாபாரிகளும், லாட்டரி, குதிரைப் பந்தயத்தில் ஈடுபடுபவர்களும் இதை நம்பிக் காரியத்தில் இறங்கி லாபமோ நஷ்டமோ அடைந்தால் அடியேன் ஜவாப்தாரியல்ல.

மேஷம் :—(அஸ்வினி, பரணி, கார்த்திகை ¼)

இந்த வாரத்தில் இவர்களுக்கு முதல் மூன்றேகால் நாள் கடுமையான ஜலதோஷம் பிடிக்கும். ஜலதோஷம் பிடிக்காவிட்டால் 'டபிள் நிமோனியா' வாவது வரும். ஆனால் வியாழக்கிழமை முதல் குரு பெயர்வதால், வியாதி சுகம், தனலாபம், எடுத்த காரியம் வெற்றி ஏற்படும். அதே சமயத்தில் மனைவியின் பந்துக்களால் (முக்கியமாக மாமியார்களால்) அதிகச் செலவும் வயிற்று வலியும் ஏற்படும் என்று சொல்லாமல் இருக்க முடியாது. சனிக்கிழமை வீட்டில் கலகம் ஏற்பட வழியுண்டு. கண்டைக்காய் வியாபாரிகளும் வெண்டைக்காய் வியாபாரிகளும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். 'ஸ்பெகுலேஷன்' கூடாது.

ரிஷபம் :—(கார்த்திகை ¾, ரோகிணி, மிருகசீர்ஷம் ½)

இந்த வாரம் இந்த ராசிக்காரர்களுக்கு ஏற்படும் சிரமத்தை வர்ணிக்க முடியாது. காரணம் சனியும் செவ்வாயும், ராகுவும் கேதுவும் ஒரே வீட்டில் உட்கார்ந்து கொண்டு இந்த ராசிக்காரர்களை கோரகப் பார்ப்பதுதான். குறைந்த பக்ஷம் ஒரு மோட்டார் விபத்து அல்லது 'டைபாய்டு' ஜுரம் அல்லது ரத்தக்காயமாவது ஏற்படும். முதல் தடவைக் கச்சேரி செய்யும் 'வித்வான்களாய்' இருந்தால் கச்சேரியை அடுத்த வாரம் ஒத்திப் போட்டுவிடவும். ரத்தக் காயத்தை இதனால் தடுக்கலாம்.

மிதுனம் :—(மிருகசீர்ஷம் ½, திருவாதிரை, புனர்பூசம் ¾)

இவ்வாரம் திங்கட்கிழமையிலிருந்து இந்த ராசிக்காரர்களுக்குத் தனலாபம், குடும்ப சுகம், மாமியார் மாமனார் வகையறுத் திருப்தி, மேலதிகாரிகளின் புகழ்ச்சி, மனைவியின் ஆதரவு ஆகியவை ஏற்படும். வரவேண்டிய கடன் வட்டியுடன் எதிர்பாராமல் வரும். சிறிய பிரயாணமும் சிலருக்கு ஏற்படலாம். ரேஸ், லாட்டரி இன்னும் எந்தவிதமான பண வருமான விஷயத்திலும் துணிந்து ஈடுபடலாம். இந்த ராசியிலுள்ள பொன் வெள்ளி வியாபாரிகளுக்கும், புடலங்காய் வியாபாரிகளுக்கும் இது அமோகமான வாரம். இந்த ராசி பால் வியாபாரிகள் துணிந்து தண்ணீரையே வியாபாரம் செய்தாலும் வாடிக்கைக்காரர்களுக்கு அது பாலாகவே இருக்கும். (வாடிக்கைக்காரர்களும் இந்த ராசிக்காரர்களாகவே இருந்தால் இந்த வழி பிரயோசனப்படாது. அவர்கள் வேறு ராசிக்காரர்களா என்று விசாரித்துக் கொள்ளவும்.)

கடகம் :—(புனர் பூசம் ¼, பூசம், ஆயில்யம்.)

இந்த வாரம் முதல் மூன்று நாட்கள் இந்த ராசிக்காரர்களுக்கு நன்மையாக இருக்கும். அனுகூலமான கடிதங்கள், நண்பர்களால் பண வரவு, மனைவி அல்லது குழந்தைகளின் ஆரோக்கியம் காணப்படும். வார மத்தியிலிருந்து கவலையைக் கொடுக்கக்கூடிய விஷயங்கள் ஏற்படலாம். அரிசி, களிமண், கல் வியாபாரிகளும், வக்கீல்களும் டாக்டர்களும் முன்னெச்சரிக்கையாக இருப்பது நல்லது. வாரத்தின் கடைசி நாளில் எதிர்பாராத வருமானம் அல்லது விபத்து ஏற்படலாம்

சிம்மம் :—(மகம், பூரம், உத்திரம் ¼)

இவர்களுக்கு இது ஒரு விநோதமான வாரம். ஏனென்றால் ஒன்று விட்டொரு நாள் கெட்டதும் நல்லதும் மாறி மாறி நடக்க வழியிருக்கிறது. உதாரணமாக, ஞாயிற்றுக்கிழமை தூரத்திலிருந்து துக்கச் செய்தி என்றால், திங்கட்கிழமை ஒரு கல்யாணம் கட்டாயம் நடக்கும். செவ்வாய்க்கிழமை வீட்டில் குடும்பக் கலகம் அல்லது மாமியார் மாட்டுப் பெண் யுத்தம் என்றால், புதன் கிழமை ஒரு குழந்தை பிறக்கும். (இந்த ராசிக்காரர்கள் ஆண்களாய் இருந்தால், அவர்கள் மனைவிக்குப் பிறக்கும் என்று வைத்துக் கொள்ளவும். கல்யாணமாகாதவர்களாய் இருந்தால் அவர்கள் வீட்டு நாய் கட்டாயம் குட்டி போடும். நாய் வளர்க்காதவர்கள் நாயை உடனே வாங்கிக் கொள்ளவும்). வியாழக்கிழமை மறு

படியும் ஆபத்து. அதாவது ராசிக்காரர்கள் ஆணாயிருந்தால் மனைவியின் பாட்டையும் அல்லது நச்சரிப்பையும் பெண்ணாயிருந்தால் மாமியாரின் முனகலையும் நாள் முழுதும் கேட்டுக் கடுமையான தலைவலி உண்டாகும். கல்யாணமாகாதவர்கள் ரேடியோவைக் கேட்டு 'ரேடியோத் தலைவலி' வரவழைத்துக் கொள்வார்கள். ரேடியோ இல்லாதவர்கள் கல்யாணம் செய்து கொள்ளவும். வெள்ளிக்கிழமை சிநேகிதன் அல்லது சிநேகிதியின் கல்யாணம். சனிக்கிழமை (கல்யாணச் சாப்பாட்டினால்) வயிற்று வலி அல்லது அஜீர்ணம் ஏற்படும். பூசணிக்காய் வியாபாரிகள் கண்டிப்பாய் 'ஸ்பெகுலேஷன்' செய்யக் கூடாது. பங்கு, பொன், வெள்ளி வியாபாரிகள் தலைகீழாக நின்று 'ஸ்பெகுலேஷன்' செய்யலாம். மற்றும் புளி, உளுத்தம் பருப்பு, ரேடியோ, விறகு, மொச்சக்கொட்டை, மோட்டார்கார், எலுமிச்சம் பழ வியாபாரிகள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

கன்னி :—(உத்திரம் ¾, ஹஸ்தம், சித்திரை ½)

இந்த வாரத்தில் இந்த ராசிக்காரர்களுடைய கிரகங்கள் எல்லாம் ஒன்றின் இடத்தை மற்றொன்று பிடித்துக் கொள்வதால் இவர்களுக்கு ஒரு பெரிய ஆபத்து இருக்கிறது. அது என்னவென்றால், இவர்கள் குடியிருப்பவர்களாய் இருந்தால் வீட்டுக்காரர்கள் இவர்களுடைய சாமான்களை நடுரோட்டில் வைத்துவிடுவார்கள். அல்லது இந்த ராசிக்காரர்கள் சொந்த வீட்டுக்காரர்களாய் இருந்தால் குடியிருப்பவர்கள் எல்லாரும் சேர்ந்து இவரை வீட்டை விட்டுக் கிளப்பிவிடுவார்கள். ஆகையால் இந்த ராசிக்காரர்கள் வார முழுதும் தங்கள் வீட்டின் கதவுகளை மூடிவைத்துக் கொண்டு ஜாக்கிரதையாக இருப்பது நல்லது.

துலாம் :—(சித்திரை ½, சுவாதி, விசாகம் ¾)

இந்த வாரம் இவர்களுக்கு மந்தமான வாரம். ஆகையால், பருப்பு, உருளைக்கிழங்கு, விளக்கெண்ணெ வியாபாரிகள் உஷாராய் இருக்க வேண்டும். மேலும் உடலில் உஷ்ணாதிக்கம், தூரத்துச் செய்தி, நீண்ட பிரயாணம், ஆகியவை ஏற்படலாம். நண்பர்களுடன் அதிகமாய்ப் பழகவேண்டாம். ரேஸ் கண்டிப்பாய்க் கூடாது.

விருச்சிகம் :—(விசாகம் ¼, அனுஷம், கேட்டை)

இது பொதுவாக மேலான வாரம். தொழிலபிவிருத்தி, தனலாபம், வீடு புதுப்பித்தல், கட்டுரை முதன் முதலாக வெளி வருதல், பத்திரிகை ஆசிரியர்களின் அனுதாபமும் நன் மதிப்பும் ஏற்படும். எழுத்தாளர்களாய் இருந்தால் பேனாவை வைத்துக் கொண்டு இங்கியால் காகிதத்தின் மேல் எழுதினால் பலன் ஏற்படும். ஆனால் கடைசி இரண்டு நாட்களில் லேசான ஜுரமும், பயமுறுத்தல் கடிதங்களும் வரலாம். பயமுறுத்தல் கடிதங்கள் வந்தால் அவைகள் அநேகமாக உங்கள் கட்டுரைகளைப் படித்தவர்களிடமிருந்துதான் இருக்குமாதலால் நீங்கள் பயப்பட வேண்டியதில்லை. பயப்பட வேண்டியவர்கள் உங்கள் கட்டுரைகள் வெளிவந்துள்ள பத்திரிகையின் ஆசிரியரே. காகிதம், கண்ணாடி, மருந்து வியாபாரிகளுக்கு இது நல்ல வாரம்.

தனுசு :—(மூலம், பூராடம், உத்திராடம் ¼)

இந்த வாரம் முற்பகுதி துன்பமாயும் பிற்பகுதி இன்பமாயும் இருக்கும். காரணம் அநேகமாக புதன் அல்லது வியாழக்கிழமை உங்கள் மனைவி, தன் பரிவாரங்களோடு பிறந்தகம் போய்விடுவாள். ராசிக் காரர்கள் ஸ்திரீகளாயிருந்தால், புருஷன் 'காம்ப்' போய்விடுவார் என்று வைத்துக் கொள்ளவும். அவருடைய நச்சரிப்பும் உங்களுக்கு இருக்காது. கல்யாணமாகாதவர்களாய் இருந்தால் உங்கள் பக்கத்து வீட்டில் எப்போதும் குலைத்துக் கொண்டிருக்கும் நாய்க் குட்டி அல்லது சங்கீதம் கற்றுக் கொள்ளும் (கொல்லும்) பெண்ணுக்கு ஜலதோஷமும், தொண்டைக் கட்டலும் ஏற்பட்டு பல் வலியும் கூட சேர்ந்து வாயைத் திறக்க முடியாமல் போய்விடும். சங்கீதம் கற்றுக் கொடுக்கும் வாத்தியாருக்கு நடுக்கல் ஜுரமும் வர ஏதுவிருக்கிறது. தேங்காய், மாங்காய் வியாபாரிகளுக்கு இது சுமாரான வாரம்.

மகரம் :—(உத்திராடம் ¾, திருவோணம், அவிட்டம் ½)

இந்த வாரம் செவ்வாய்க் கிழமை ஏற்படும் கிரக மாறுதல் இந்த ராசிக்காரர்களை ஒரே குழப்பத்தில் ஆழ்த்திவிடும். வீடு பூராவும் ஒரே விருந்தாளிகளும் அவர்களுடைய குழந்தைகளும் சேர்ந்து மொத்தம் குறைந்தது ஐம்பது, அறுபது பேர்களாவது கூடுவார்கள். வீடு ஒரு சத்திரமாக மாறும். ரயில்வே ஸ்டேஷன் என்றும் வைத்துக் கொள்ளலாம். நீங்கள் உங்கள் மனைவியை வீடு பூராவும் தேடினாலும் அகப்படமாட்டாள். ஏனென்றால் அவள் உங்களைத் தேடிக் கொண்டு உங்கள் பின்னாலேயே சுற்றுவாள். போதாததற்கு இரண்டு விருந்தினர்களுக்குத் தேள் கடியும், நான்கு பேர்களுக்கு

செட்டியார் வற்புறுத்தினார். ஆனால் சுத்தசேசப் பிள்ளை அதை ஏற்றுக்கொள்ளவில்லை. தேவாரத்தைக் கோவில்களோடு மட்டும் நிறுத்தாமல், சங்கீத அரங்குகளுக்கும் புது முறையிலே கொண்டு வரவேண்டும் என்பது அவர் கருத்து.

நான்கு நாட்கள் தேவாரத்தை அனுபவித்த ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் தமது உள்ளக் களிப்பைச் சுருக்கமாக எடுத்துக் கூறினார்கள். தாம் சிறு வயதாக இருக்கும்போது பல இடங்களில் தேவாரப் பாடல்களைக் கேட்க முடிந்ததென்றும், மறுபடியும் அம்மாதிரி நிலைமை ஏற்படவேண்டும் என்று தெரிவித்தார்கள்.

பஞ்சமம் என்ற பண் ஆஹிரியில் பாடப் பெறுவதுதான் வழக்கம் என்று அறிந்தபோது பேராசிரியர் சாம்பமூர்த்திக்கு உண்டான மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.



கணவன் :—என்ன பத்மா! யோசனை ரொம்பப் பலமாக இருக்கிறதே!

மனைவி :—ஒன்றுமில்லை. 'எக்ஸிபிஷனில்' இரண்டு 'யரோப்ளேன்' பார்டர் புடவை, நெக்லெஸ், டோலாக்கு, கோளர் நெக்லெஸ், மோதிரம் ஒன்று உங்களுக்கு. இன்னொன்று எனக்கு. வளையல்கள் வாங்கலாமோ என்று யோசிக்கிறேன். ஆமாம் நீங்கள் என்ன யோசிக்கிறீர்கள்?

கணவன் :—நான் எந்த 'அமெரிக்கா'வைப் பிடித்தால் நிறையக் கடன் கொடுப்பான் என்று யோசனை செய்கிறேன்!

"இவ்வளவு நுட்ப கருதிகளையுடைய ராகம் வெகு காலத்திற்கு முன்பே கையாளப்பட்டதிலிருந்து நமது தமிழ் நாட்டு இசையின் பெருமையை அறிந்து கொள்ளலாம்" என்று கூறிச் சந்தோஷப்பட்டார்கள்.

முடிவாகக் கீழ்க்கண்ட ஒன்பது பண்களையும் இன்று பாடும் ராகங்களைப் பற்றிய பெரும்பாலோருடைய சம்மதத்தின் பேரில் நிர்ணயம் செய்யப்பட்டது.

| பண் | | ராகம் |
|---|---|---|
| கொல்லி | — | நவரோஜ் |
| சீகாமரம் | — | நாதநாமக்கிரியா |
| செந்துருத்தி | — | மத்தியமாவதி |
| பஞ்சமம் | — | ஆஹிரி |
| கௌசிகம் | — | பைரவி |
| தக்கேசி | — | காம்போதி |
| செவ்வழி | — | யதுகுலகாம்போதி |
| வியாழக்குறிஞ்சி | — | சௌராஷ்டிரம் |
| காந்தார பஞ்சமம் | — | கேதாரகௌள |

இன்னும் சில பண்களைப் பற்றி ஆராய்ச்சிகள் நடந்தபோதிலும் அவைகளைப் பற்றி அபிப்பிராய பேதம் இருந்தமையால் அடுத்த ஆண்டிற்கு ஒத்தி வைக்கப்பட்டது. மேலே கண்ட முடிவுகளெல்லாம் பண்கள் இன்று எந்த ராகங்களில் பெரும்பாலோரால் பாடப் பெறுகின்றன என்பதைத்தான் காட்டுகின்றன. அப் பண்களும் ராகங்களும் ஒன்றேதானா என்பதை நிச்சயமாகக் கூற முடியாது. ஒன்றாகவும் இருக்கலாம்; அல்லது மாறுபட்டுமிருக்கலாம். அதை நிச்சயிப்பது வேறொரு தனிப்பட்ட முயற்சியாகக் கொள்வதே நல்லது. பண்களை இன்று பாடும் ராகங்களை முடிவு செய்துகொண்டு அதை ஒழுங்குபடுத்துவது முதல் வேலை; பிறகு ராகங்களும் பண்களும் ஒன்றேதானா என்று ஆராய்வது இரண்டாவது வேலை. பத்து வருஷம் ஆராய்ந்து ஒரு பண்ணைப் பற்றிய உண்மையைத் திட்டமாகக் கண்டுபிடிக்க முடிக்க முடிந்தால் அதுவே பெரிய காரியமாகும்.

பொதுவாகக் கூறினால் இந்த மகாநாடு பெரிய வெற்றி யென்றே சொல்ல வேண்டும். மேற்கொண்டு தொடர்ந்து பண் ஆராய்ச்சியைச் செய்யலாம் என்ற உறுதியையும் இது தருகின்றது. இசைத் தமிழ் பற்றி எவ்வளவோ விஷயங்களை ஆராய வேண்டியிருக்கிறது. அவற்றிற்கெல்லாம் ஆரம்பமாக இம்மகாநாடு அமைந்தது.

இசைத் தமிழ் ஆராய்ச்சியைத் தொடர்ந்து நடத்தி அதன் மூலம் இக் கலை வளருவதற்கு வேண்டிய காரியங்கள் தொடர்ந்து நடைபெறும் எனவும் நம்புகிறோம்.

மகாநாடு நடைபெற்ற ஐந்து தினங்களையும் சேர்த்துக் கவனித்தால் நிறையக் காரியம் நடந்திருக்கிறதென்பது தெரியவரும். எத்தனையோ பண்களைப் பற்றிய ஆராய்ச்சி நடந்தது. சில பண்களை இன்ன ராகத்தில்தான் இன்று பாடி வருகிறார்கள் என்று நிச்சயமாக முடிவாயிற்று. சில பண்களைப் பற்றி அவ்வாறு நிச்சயம் ஏற்படாததால் அடுத்த வருஷத்திற்கு அவற்றைப் பற்றிய சர்ச்சை ஒத்திப் போடப் பட்டது. ஆராய்ச்சியில் கலந்து கொண்டவர்களில் திரு சாரங்கபாணி செட்டியாரையும், திரு சுந்தரேசப் பிள்ளையையும், திரு இலக்குமண ஐயாவையும் முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். இவர்களுடைய விவாதமோ, பேச்சோ, பாட்டோ இல்லாமல் எந்தப் பண்ணைப் பற்றிய சர்ச்சையும் முடிவு பெறாது. திரு சுந்தரேசபிள்ளை சுவாமி விபுலானந்தர் எழுதிய யாழ் நூலை நன்றாக ஆராய்ந்திருக்கிறார். அதனால் அவர் அந்நூலிலிருந்து ஆதாரம் காட்டித் தமது கொள்கையை நிலைநாட்ட முயலுவார். திரு சாரங்கபாணி செட்டியார் சம்பிரதாயமாகப் பாடும் முறைகளை எடுத்துக்காட்டி அதன் வழியை நிர்ணயம் செய்ய முற்படுவார். இலக்குமண ஐயா அவர்கள் தமக்கே தனியாயமைந்த முறையில் பாடி இரண்டு மாதம் அவகாசம் கொடுத்தால் தமது கருத்தே சரியென்பதைக் காட்டுவதாகக் கூறுவார்.

தமது கட்சிக்கு ஆதரவில்லை என்று கண்டால், சுந்தரேசபிள்ளை பேசாமல் விட்டு விட மாட்டார். "நான் ஒருவன் மட்டும் இன்று இந்தக் கொள்கையை ஆமோதிக்கலாம். இருந்தாலும் இதுதான் உண்மை என்பது பின்னால் விளங்கும். எனக்கு ஒரு நாள் அவகாசம் கொடுத்தால் எனது கொள்கைதான் சரி என்று நன்றாக எடுத்துக் காட்டுவேன்" என்று அழுத்தமாகப் பேசுவார். "இந்தளம் என்ற பண் இன்றைய இந்தோளந்தான்; அடிகளார் எழுதிய நூலில் ஆதாரம் காட்டுவேன்" என்று முழங்குவார். அவருக்கே சில சமயங்களில் தான் பேசுவது கொஞ்சம் கடுமையாக இருக்கிறதோ என்று சந்தேகம் வந்துவிடும். அதனால், "நான் முடுக்காகப் பேசுவதற்கு மன்னிக்க வேண்டும்; அது என் குற்றமல்ல; என் இளமையின் குற்றம்" என்று சொல்லிவிட்டு அமருவார்.



மகாநாட்டில் ஒரு காட்சி.

சாரங்கபாணி செட்டியார் சிரித்த முகத்தோடு சம்பிரதாய முறையில் பண்களைப் பாடுவார். இடையிடையே தேவாரத்தின் பெருமையைப்பற்றி எல்லோருக்கும் ஞாபக மூட்டுவார். "எங்கள் தேவாரம் சாமானியப் பாட்டுக்கள் அல்ல. அவை மந்திரசக்தி வாய்ந்தவை. சூலை நோயை அன்று தீர்த்த தேவாரப் பதிகங்கள் இன்னும் பல நோய்களைத் தீர்க்கின்றன" என்று பெருமையோடு பேசுவார். நோயைத் தீர்க்கும் சக்தி தேவாரப் பண்களுக்கு உண்டு என்பதைக் கல்வி ஆசிரியர் தமது சொந்த அனுபவத்தைக் கூறியே நிரூபித்து விட்டார்.

அவர் தேவாரத்தின் பெருமையைப் பற்றிப் பேசும்போது ஹாஸ்யமாக ஒரு விஷயம் சொன்னார். "நோயைத் தீர்க்கும் சக்தி தேவாரத்திற்கு உண்டென்று சாரங்கபாணி செட்டியார் சொல்லுகிறார். அது வாஸ்தவமென்று என்னுடைய சொந்த அனுபவத்திலேயே அறிந்து கொண்டேன். மண்டபத்தில் இன்று நுழையும்போது கொஞ்சம் தலைவலியாக இருந்தது. தேவாரத்தைப் பற்றிய விவாதங்களைக் கேட்ட பிறகு அந்தத் தலைவலி ஓடியே போய் விட்டது. இப்போது வேறு புதிய தலைவலி தான் வந்திருக்கிறது!" என்று கூறியதை ஓதுவாமூர்த்திகள் ரசித்து மகிழ்ந்தார்கள்.

தேவாரத்தைப் பழைய சம்பிரதாயப் படியே பாட வேண்டுமென்றும், அதிலே ஸ்வரம் பாடுதல் முதலான புது முறைகளை நுழைக்கக்கூடாது என்றும் சாரங்கபாணி

நிறைந்து, மகாநாட்டின் வெற்றிக்கு அறிகுறியாக ஒலித்தது. அதன் பின்னர் மகாநாட்டை டாக்டர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்கள் ஆரம்பித்து வைக்கும்போது இசைத்தமிழின் பெருமையைப் பற்றியும், பண் ஆராய்ச்சியின் அவசியத்தைப் பற்றியும் அழகாக எடுத்துரைத்தார். பேராசிரியர் சாம்பமூர்த்தி அவர்கள் இந்த ஆராய்ச்சியில் தமக்குள்ள ஆர்வத்தையும், இப்படிப்பட்ட ஆராய்ச்சி நடைபெற வேண்டுமெனத் தாம் நெடுநாள் விரும்பியதையும் கூறி மகிழ்ந்தார். இவ்வாறாக மகாநாடு சிறப்பாகத் தொடங்கியது.

பேராசிரியர் சாம்பமூர்த்தி அவர்கள் மகாநாட்டுக்காகத் தயாரித்திருந்த கட்டுரையிலே பண்களின் சிறப்பியல்புகள் பற்றியும், ஆராய்ச்சியிலே நிர்மாணிக்கப்பட வேண்டிய விஷயங்களைப் பற்றியும் குறிப்பிட்டார். அதன்பின்னர் பண்களின் வரலாற்றை சங்க காலம் முதற்கொண்டு இந்தக் காலம் வரை விரிவாக ஆராய்ந்து ஸ்ரீ ம. ப. பெரியசாமித் தூரன் ஒரு விரிவான கட்டுரை வாசித்தார். இவ்விருவரும் பழந் தமிழ்ப் பண்களே இக்கால ராகங்களின் தோற்றத்திற்கு ஆதாரமென்று எடுத்துக் காட்டியிருப்பது அனைவரும் கவனிக்க வேண்டிய விஷயம். கர்ணாடக சங்கீதம் என்பது தமிழ்நாட்டுச் சங்கீதந்தான். இதை வேறு எங்கும் காண முடியாது. அது சங்க காலத்திற்கு முன்பே பிறந்து வளர்ந்து பலவகையான அபிவிருத்தியடைந்து நமக்கு இன்று கிடைத்திருக்கிறது.

“தோடுடைய செவியன்” என்ற தேவாரப் பதிகத்தைத்தான் திருஞான சம்பந்தர் முதன் முதலாகப் பாடினார் என்பது நமக்குத் தெரியும். அந்தப் பாடலின் பண்ணாகிய நட்டபாடையைப் பற்றியே ஆராய்ச்சியும் தொடங்கியது. திரு சுப்பையா ஓதுவார் அவர்கள் அந்தப் பண்ணைப் பாடிக் காண்பித்தார். வேறு சிலரும் பாடினார்கள். ஆராய்ச்சி யென்று சொன்னால் பல வேறு அபிப்பிராயங்கள் எழ வேண்டும்; அவைகளைப்பற்றி விவாதங்கள் நடைபெற வேண்டும். அப்பொழுதுதான் உண்மையைக் கண்டுபிடிக்க முடியும். அந்தமாதிரி இந்த முதல் பண்ணிலேயே மாறுபட்ட அபிப்பிராயங்கள் தோன்றி ஆராய்ச்சிக்குக் களை கட்டி விட்டது! சிலர் இந்தப் பண்ணை நாட்டையில் பாடவேண்டும் என்றார்கள்; வேறு சிலர் கம்பீர நாட்டையில் பாட வேண்டும் என்றார்கள்; இன்னும் சிலர் நாட்டைக் குறிஞ்சியில் பாடவேண்டும் என்றார்கள். அதோடு தாளத்தைப் பற்றியும் அபிப்பிராயபேதம் இருந்தது.

தோடுடைய திருப்பதிகத்தை ஆதி, ரூபகம், ஜம்பை, திருபுடை தாளங்களில் அமைத்துப் பாடும் வழக்கத்தைப் பலர் எடுத்துக் காண்பித்தார்கள். நெடுநேரம் ஆராய்ந்த பிறகு தாளத்தைப் பற்றிய பிரச்னையை வேறொரு சமயத்தில் வைத்துக் கொள்ளலாமென்றும் இந்த மகாநாட்டில் பண்களைப்பற்றி மட்டும் ஆராயலாம் என்றும் முடிவு செய்யப்பட்டது. மேலும் நட்டபாடைப் பண் மூன்று ராகங்களில் பாடப்படுவதால் அதைப்பற்றிப் பின்னால் முடிவாகத் தீர்மானம் செய்யலாம் என்றும் தள்ளிவைக்கப் பட்டது. இவ்வாறு முதல் நாள் கூட்டம் இனிது முடிவடைந்தது. ஆராய்ச்சி செய்யும்போது எல்லா விஷயங்களையும் ஒன்றாக எடுத்துக்கொண்டு ஒரே குழப்பமாகச் செய்து கொள்ளாமல் ராக ஆராய்ச்சியையும், தாள ஆராய்ச்சியையும் தனித் தனியாகப் பிரித்துக் கொண்டது பொதுவாக நல்ல காரியமாகும். அதோடு இந்தப் பண் ஆராய்ச்சி மகாநாட்டில் அவசரப்பட்டு ஏதாவது ஒரு முடிவுக்கு வந்து விடவேண்டுமென்ற மனப்பான்மை இல்லாமல் தீர ஆலோசித்து உண்மையைக் கண்டுபிடிக்கவேண்டும் என்ற எண்ணம் பரவியிருந்தது மிகவும் விசேஷமாகும்.

பண் ஆராய்ச்சி தொடர்ந்து மேலும் மூன்று நாட்கள் நடைபெற்றது. சிதம்பரம், திருக்களர், மதுரை, காஞ்சீபுரம், தர்மபுரம் முதலான ஸ்தலங்களிலிருந்து வந்த ஓதுவாமூர்த்திகள் நெற்றியில் திருவெண்ணீறு அணிந்து சரியாகப் பத்து மணிக்கு மண்டபத்திலே பிரசன்னமாகி விடுவார்கள். இசையரசு தேசிகர் அவர்கள் தலைமைப் பீடத்தில் அமர, அவருக்குப் பக்கபலமாகப் பேராசிரியர் சாம்பமூர்த்தி அவர்கள் இருக்க, மகாநாடு ஆரம்பமாகும். ரஸிகமணி டி. கே. சி., கல்கி ஆசிரியர், டாக்டர் ஆர். கே. எஸ்., இசை மன்னர் சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை, ராஜா ஸர் முத்தையா செட்டியார் முதலானவர்கள் ஆவலோடு நிகழ்ச்சிகளைக் கவனித்துக்கொண்டு தேவாரகானம் செவிமடுத்து மகிழ்ந்திருந்தார்கள். என்னமோ யாரோ பாடிக்கொண்டும் விவாதம் செய்துகொண்டுமிருக்கிறார்கள் என்றெண்ணாமல் பொது மக்கள் பலரும் சபையிலே தினமும் கூடியிருந்தது அவர்களுக்குத் தேவாரத்திலும் பழைய இசைத் தமிழிலும் இருந்த ஆர்வத்தை நன்கு வெளிப்படுத்திற்று.




# பண் ஆராய்ச்சி மகாநாடு

இசைத்தமிழ் வாணன்

சென்ற டிஸம்பர் மாதம் 24-ந் தேதி காலையிலே கந்தர்வலோகத்திலே ஒரே பரபரப்பாக இருந்தது. சகோட யாழுக்கு ஒரு கந்தர்வன் இசை கூட்டுகிறான். செங்கோட்டு யாழுக்கு மற்றொரு கந்தர்வன் இசை கூட்டுகிறான். சீறியாழை எடுத்துத் துடைத்துச் சுத்தப்படுத்துகிறான் இன்னொருவன். ஆயிரந் தந்திகள் கொண்ட பேரியாழை வைத்துக்கொண்டு அவசரம் அவசரமாக இன்னொருவன் சுருதி சேர்க்க முயன்று கொண்டிருக்கிறான். இப்படியாக ஒரே அமர்க்களமாக இருந்தது. சீக்கிரமாக எல்லாம் தயார் செய்துகொண்டு குறித்த காலத்திலே போய்ச் சேரவேண்டுமே என்று எல்லோருக்கும் ஒரே கவலை. அந்தச் சமயத்திலே பிரம்மலோகத்திலிருந்து விபுலானந்த அடிகளார் அங்கு வந்து சேர்ந்தார். வந்தவர் ஒரு கணங்கூடத் தாமதியாமல் "என்ன எல்லாம் தயாரா?" என்றார். "இதோ புறப்பட்டு விட்டோம்" என்றார்கள் கந்தர்வர்கள். "சகோட யாழ், செங்கோட்டு யாழ், சீறியாழ், பேரியாழ், வில்யாழ் எல்லாம் இருக்கின்றன; மகரயாழைக் காணோமே?" என்றார் அடிகளார். "அது மேல் நாட்டிலிருந்து வந்ததாயிற்றே என்று தள்ளிவிட்டோம்" என்றான் ஒரு கந்தர்வன்.

"மகர யாழ் நம் தமிழ்நாட்டில் தானே பிறப்பெடுத்தது? அப்படியிருக்கக் கந்தர்வலோகத்தில்கூட இந்தக் குறுகிய நோக்கமா? அதை உடனே கொண்டு வாருங்கள்" என்று யாழ்நூல் கண்ட அடிகளார் அறிவுரை விளத்தினார்கள். "இதோ மகர யாழ் தயாராக இருக்கிறது" என்று மேல் நாட்டு இசைக் கந்தர்வன் ஆர்பியஸ் சந்தோஷம் பொங்கத் துள்ளிக் குதித்து வந்தான். இப்படியாக அனைவரும் சேர்ந்து டிஸம்பர் மாதம் இருபத்திநாலாந் தேதி காலையில் சரியாக பதினொரு மணிக்குச் சென்னை மெமோரியல் ஹாலிலே வந்து தோன்றாமல் தோன்றி நின்றார்கள்.

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழ் நாட்டில் பிறந்த இசைத் தமிழைப் பற்றியும், பழந் தமிழர்கள் கண்ட பண்களைப் பற்றியும், அப்பண்கள் தேவாரத்திலும், திருவாசகத்திலும், திருவாய்மொழியிலும் தெய்வ இசையாக அமைந்திருப்பதைப் பற்றியும் ஆராய்ச்சி செய்வதற்காகத் தமிழிசைச் சங்கத்தின் சார்பிலே அநேக பல ஓதுவா மூர்த்திகளும், இசையறிஞர்களும் கூடியிருந்தார்கள். அந்தக் காட்சியைக் கண்டு ஆனந்திப்பதற்காகத்தான் கந்தர்வர்களும் விபுலானந்த அடிகளும் அத்தனை அவசரமாக வந்திருக்கிறார்கள்.

ஆரம்பத்திலே இசையரசு தண்டபாணி தேசிகர் அவர்களின் தேவாரப் பண்ணிசை கடவுள் வணக்கமாகச் சபை முழுவதும்

# பவநகர் மகாராணி

பவநகர் மகாராஜாவைச் சென்னைக் கவர்னராக நியமிக்கப்போகிறார்கள் என்ற செய்தி முதன் முதலில் வந்தபோது நம்மில் பலருக்கு அதைப் பற்றிச் சந்தேகம் இருந்தது. பவநகர் மகாராஜா கவர்னர் பதவியை எப்படி வகிக்கப் போகிறாரோ என்று சந்தேகப்பட்டோம். அதைக் காட்டிலும் பவநகர் மகாராணி கவர்னராணி பதவியை எப்படி வகிக்கப் போகிறாரோ என்று பயப்பட்டோம். ஏனெனில் ஆங்கிலேய கவர்னர்களுடன் வரும் அவர்களுடைய மனைவிமார்கள் தாங்களும் அந்தப் பதவிக்குரிய பொறுப்புகளை வகித்துப் பொது வாழ்க்கையில் பங்கு கொள்வது வழக்கம். சென்னை மாகாணத்தின் கடைசி ஆங்கில கவர்னரான ஸர் ஆர்ச்பால்டு நையின் மனைவி லேடி நை பல பொதுக் காரியங்களில் ஈடுபட்டு நம்மையெல்லாம் திணற அடித்துவிட்டார் அல்லவா? அப்படியிருக்க, அரண்மனை அந்தப்புரத்தில் கோஷா ராணியாக விளங்கிய பெண்மணி திடீரென்று கவர்னராணியானால், அந்தப் பதவியை வகிக்க முடியுமா என்று பலருக்கும் கவலையாயிருந்தது.

அந்தச் சந்தேகங்கள், பயங்கள், கவலைகள் எல்லாம் இப்போது தீர்ந்து விட்டன. சென்னை மாகாணத்தின் சமூக வாழ்க்கையில் பவநகர் மகாராஜா நன்கு கலந்துகொண்டிருப்பது போலவே பவநகர் மகாராணியும் ஈடுபட்டு வருகிறார். சமூகத் தொண்டு இயக்கங்களிலும் கலைவளர்ச்சிக் கழகங்களிலும் ஊக்கம் கொண்டு மற்றவர்களுக்கும் ஊக்கம் அளித்து வருகிறார்.

சென்ற டிசம்பர் கடைசியில் சென்னையில் பல சங்கீத விழாக்கள் நடந்தன. சங்கீதத்தைப் பற்றிப் பல சொற்பொழிவுகளும் நடந்தன. அவற்றில் வார்த்தைப் பந்தல்களும் பொருளில்லாத விவாதங்களும் அதிகமாயிருந்தன. ஆனால் பவநகர் மகாராணி தியாகராஜ நகர் வாணி மகாலில் கலை விழாவைத் திறந்து வைத்து நிகழ்த்திய பேச்சு ரத்தினச் சுருக்கமாயிருந்தது. ஆனால் அதில் ஒரு தெளிவான உண்மை மிக அழகாகச் சொல்லப் பட்டிருந்தது.

“வட இந்தியாவில் வழங்கும் சங்கீதத்தில் பிறநாட்டின் படையெடுப்பினால் பல கலப்புக்கள் ஏற்பட்டிருக்கின்றன. தென்னிந்தியாவில் வழங்கும் கர்நாடக சங்கீதமோ கலப்பில்லாத தூய்மையுடன் நம்முடைய கலைப்பெருமையை நிலைநாட்டிக் கொண்டு விளங்குகிறது. ஆகையால் என்னுடைய மனம் கர்நாடக சங்கீதத்திலேயே அதிகமாக ஈடுபடுகிறது. இந்த நாட்டில் மக்களின் வாழ்க்கையில் பல துறைகளிலும் சங்கீதம் முக்கியமான இடம் பெற்றிருப்பதைக் கண்டு மகிழ்கிறேன். இப்படிப்பட்ட அபூர்வமான சங்கீதக் கலைச் செல்வத்தை அதன் தூய்மை கெடாமல் காப்பாற்றுங்கள். சகல ஜனங்களும் அதன் இன்பத்தை அறிந்து அநுபவிக்கும்படி செய்யுங்கள்!” என்று பவநகர் மகாராணி கூறிய முத்துப் போன்ற வார்த்தைகள் உண்மையான கர்நாடக சங்கீத ரஸிகர்களுக்கெல்லாம் அளவில்லா மகிழ்ச்சியைத் தந்திருக்கும். இந்த வார்த்தைகள் வெறும் உபசாரத்துக்காகச் சொன்னவையல்லவென்பதும், இதய பூர்வமான அநுபவ உணர்ச்சியுடன் கூறிய மொழிகள் என்பதும் படிக்கும் போதே தெரிந்து விடுகின்றன.

அரண்மனையில் பிறந்து வளர்ந்து அரசனை மணந்து அடக்கத்துடன் பொது வாழ்க்கையில் ஈடுபட்டுத் தொண்டு செய்யும் பவநகர் மகாராணி இந்தியப் பெண் குலத்துக்குப் பெருமையளித்து வருகிறார். அவருடைய படத்தை நமது இந்த இதழ் அட்டையில் மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம்.

---

ஸ்ரீ ஆ. ஏழுமலை, உப-தலைவர், சேத்துப்பட்டு தேசிய வாலிபர் சங்கம், சேத்துப்பட்டு, சென்னை 4 4 4

ஸ்ரீ ஏ. பார்த்தசாரதி பிள்ளை, ராயப்பேட்டை, சென்னை 4 0 0

ரூ. 3—0—0 தந்த அன்பர்கள்:—

ஸ்ரீ பி. சுப்ரமணியம் (பி. என். மணி) தியாகராய நகரம், சென்னை; ஸ்ரீ டி. என். கிருஷ்ணமூர்த்தி, எஸ். ஐ. ஆர். கட்டிங் ஒர்க்ஸ், கும்பகோணம்; ஸ்ரீ என். டி. மாணிக்கம், ஆர்காடு ரோடு, கோடம்பாக்கம்; ஸ்ரீ டி. எஸ். நாகலிங்கம், வண்ணையம்பதி, சென்னை; ஸ்ரீ பி. ஆர். நடராஜன், பழைய மாம்பலம், சென்னை; ஸ்ரீ ஆர். மனவாள நாயுடு, அமைந்தகரை, சென்னை.

ஆக ரூ. 18 0 0




# ரத்னகுமார்

டைரக்ஷன்: கிருஷ்ணன் பஞ்சு    ஸ்டுடியோ: நியூடோன்

... ... மேற்கண்ட இடங்களில் வெற்றிகரமாக நடைபெறுகிறது ... ...

| | | | |
|---|---|---|---|
| மதுரை ... | நியூ சினிமா | புதுச்சேரி ... | காமர்ஷியல் நியூடோன் |
| திருச்சிராப்பள்ளி | சென்ட்ரல் தியேட்டர் | காரைக்குடி ... | ஸ்ரீ ராம விலாஸம் |
| சேலம் ... | அம்பிகா டாக்கீஸ் | திருப்பாபுலியூர் ... | நியூ சினிமா |
| சிதம்பரம் ... | வடுகநாதன் டாக்கீஸ் | திருவனந்தபுரம் ... | பத்மனாபா தியேட்டர் |
| கோயமுத்தூர் ... | ராஜா தியேட்டர் | நாகர்கோவில் ... | கிருஷ்ணா டாக்கீஸ் |
| " ... | ஷண்முகா தியேட்டர் | செங்கோட்டை ... | பத்மனாபா டாக்கீஸ் |
| " ... | பாலஸ் தியேட்டர் | எர்ணாகுளம் .. | மேனகா டாக்கீஸ் |
| திருநெல்வேலி ... | ராயல் டூரிங் டாக்கீஸ் | பாலக்காடு ... | கௌடர் பிக்சர் பாலஸ் |
| தஞ்சாவூர் ... | நியூடவர் டாக்கீஸ் | ராஜபாளையம் .. | சித்ரா டாக்கீஸ் |
| வேலூர் ... | தினகரன் டாக்கீஸ் | பழனி .. | சிவா டூரிங் டாக்கீஸ் |

பெங்களூர் - சாரதா. சிடி டாக்கீஸில் 14-1-50 பொங்கல் தினத்தன்று ஆரம்பமாகிறது

சென்னை பிராபாத்தில் கூடிய சீக்கிரம் ஆரம்பமாகும்




**முருகன் டாக்கீ பிலிம் கம்பெனி, மதுரை, பெங்களூர் சிடி பெஜவாடா...**

அந்த நன்கொடைகளினால் பொருள் படைத்த பயனை அவர்கள் பெற்றார்கள் என்று சொல்வது மிகையாகாது.

ஆனால் செல்வர்களின் பெரிய நன்கொடைகளைக் கொண்டே மகாத்மா ஞாபகார்த்த ஸ்தூபியைக் கட்டி விடுவது சிலாக்யமானதல்ல. காந்தி மகான் ஏழை பங்காளர். ஏழைகளுக்காகவே உயிர் வாழ்ந்தவர். அல்லும் பகலும் ஏழைகளின் நன்மைக்கே உழைத்தவர். இன்றையதினம் இந்தியத் தொழிலாளிகள் அடைந்திருக்கும் உரிமைகள்-நன்மைகள் எல்லாவற்றுக்கும் மூலகாரண புருஷர் மகாத்மா காந்திதான். ஆகையால் மகாத்மாவின் ஞாபகார்த்த ஸ்தூபியில் ஏழைகளின் பங்கும் சேரவேண்டியது அவசியம். செல்வர்களின் ஆயிரம் ரூபாய்களைப் போலவே ஏழைகளின் ஒரு ரூபாயும் மகாத்மா ஞாபகத் திருப்பணியில் சேர வேண்டும். உங்களுடைய காணிக்கையை இந்தப் புனிதமான திருப்பணிக்கு உடனே அனுப்பி வையுங்கள்.

• • •

தமிழில் ஸினிமாப் பத்திரிகைகள் பல அவ்வப்போது வெளிவந்து உலாவுகின்றன. அவற்றில் "குண்டூசி" என்னும் பத்திரிகை தோன்றியது முதலே தமிழ் நாட்டு ரஸிகர்களின் மனதைக் கவர்ந்திருக்கிறது. கலை வளர்ச்சியில் கருத்துடன் உயர்ந்த முறையில் பத்திரிகை நடத்தப்பட்டு வருகிறது. "குண்டூசி"யை இப்போது 18,200 அன்பர்கள் மாதந்தோறும் விலைகொடுத்து வாங்குகிறார்கள். ஒவ்வொரு பிரதிக்குக் காலணா விதம் கணக்கிட்டுக் "குண்டூசி" நிர்வாகிகள் ரூ. 284-6-0 மகாத்மா ஸ்தூபி நிதிக்குக் காணிக்கை செலுத்தியிருக்கிறார்கள். நமது சகோதரப் பத்திரிகையின் இந்த அருமையான செயலைப் பாராட்டி வாழ்த்துகிறோம். "குண்டூசி" வாசகர்கள் "குண்டூசி" நிர்வாகிகளைப் பின்பற்றி மகாத்மா ஸ்தூபி நிதிக்கு மனமுவந்து உதவுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# மகாத்மா காந்தி ஸ்தூபி நிதி

| | | | | |
|---|---|---|---|---|
| ஸ்ரீ வி. என். தியாகராஜ முதலியார், திருவாரூர் | ரூ. | 1001 | 0 | 0 |
| T. I. Cycles of India Ltd., (ஸ்ரீ ஏ. எம். எம். முருகப்பச் செட்டியார்,) அரண்மனைக்காரத் தெரு, சென்னை | | 1001 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. வி. மெய்யப்பச் செட்டியார், ஏ. வி. எம். ஸ்டூடியோஸ், கோடம்பாக்கம் | ரூ. | 1001 | 0 | 0 |
| ஸ்ரீ ஆ. மு. ஆ. முரு. முருகப்பச் செட்டியார், கல்லல், ராமநாதபுரம் ஜில்லா | ரூ. | 1000 | 0 | 0 |
| ஸ்ரீ கே. என். நாராயண ஐயங்கார், புரொப்ரைட்டர், கே. என். நாராயணன் கம்பெனி, மவுண்ட் ரோடு, சென்னை | ரூ. | 1000 | 0 | 0 |
| "கல்கி" காரியாலயம், சென்னை | ரூ. | 1000 | 0 | 0 |
| ஸ்ரீ எம். எம். பரமேசுவர ஐயர், சென்ட்ரல் லாட்ஜ், சென்னை | | 501 | 0 | 0 |
| ஸ்ரீ டி. என். ஆதிமூலம், ஜில்லா போர்டு தலைவர், திருநெல்வேலி | | 500 | 0 | 0 |
| ஸ்ரீ குழந்தையன் செட்டியார், ராயவரம், புதுக்கோட்டை | | 500 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ஏ. அம்பி ஐயர், அம்பீஸ் கபே, சென்னை | | 300 | 0 | 0 |
| "குண்டூசி" நிர்வாகிகள், சென்னை | | 284 | 6 | 0 |
| ஸ்ரீ சி. வி. சுப்ரமணிய ஐயர், சகவாசி லஞ்ச் ஹோம், புரசவாக்கம், சென்னை | | 101 | 0 | 0 |
| ஸ்ரீ கே. சுப்ரமணியம், எம். எல். ஏ. "சுப்ரி" கோயமுத்தூர் | | 25 | 0 | 0 |
| ஸ்ரீ சோமநாராயணன், கபே டிலைட், மதுரை | | 16 | 0 | 0 |
| ஸ்ரீ என். வெங்கட்ராமன், அக்கௌண்டெண்ட், 'கல்கி' காரியாலயம், சென்னை | | 15 | 0 | 0 |
| ஸ்ரீ டி. நடராஜன், சுதந்திர வாலிபர் சங்கம், சென்னை | | 11 | 0 | 0 |
| ஸ்ரீ அ. பொ. நாராயணன், தலைவர், ஆர். 2. புளியம்பட்டி கோ-வாப்பரேடிவ் ஸ்டோர்ஸ், அருப்புக்கோட்டை | | 11 | 0 | 0 |

ரூ. 10—0—0 அளித்த அன்பர்கள் :—

ஸ்ரீ எம். ராமசாமி செட்டியார், சுதந்திர வாலிபர் சங்கம், சென்னை ; ஸ்ரீ சபரிராஜன், உதவி ஆசிரியர், 'கல்கி' சென்னை ; ஸ்ரீ பஞ்சாட்சரம் செட்டியார், வக்கீல், ராணிப்பேட்டை ; ஸ்ரீமதி என். குஜலாம்பாள் அம்மாள், சத்தியமே ஜெயம் சிறுவர் சங்கம், திருச்சி.

| | | | | |
|---|---|---|---|---|
| | ஆக ரூ. | 40 | 0 | 0 |
| ஸ்ரீ கே. எஸ். பிரம்மச்சாரி, பார்க் டவுன், சென்னை | | 6 | 0 | 0 |
| ஸ்ரீ டி. எம். ராஜுபாதர் ('கல்கி' போர்மேன்) சிந்தாதிரிப்பேட்டை, சென்னை | | 5 | 5 | 5 |
| மதுரை அம்மன் சன்னதி, காந்தி ஜெயந்தி கமிட்டியார் | | 5 | 1 | 0 |

ரூ. 5—0—0 கொடுத்த அன்பர்கள் :—

ஸ்ரீ என். வெங்கடசுப்ரமணியம் (என். வி. என்.) தியாகராஜ நகரம், சென்னை ; ஸ்ரீ சோமசுந்தரன் (ஸோமசுஸ்) பெரம்பூர், சென்னை ; ஸ்ரீ வி. வேதாந்த ஐயங்கார், பார்க் டவுன், சென்னை ; ஸ்ரீ எம். வெங்கடேசச் செட்டியார், சுதந்திர வாலிபர் சங்கம், சென்னை ; ஸ்ரீ வி. ஷண்முக முதலியார், சுதந்திர வாலிபர் சங்கம், சென்னை ; ஸ்ரீ கே. சுப்பிரமணியம் தம்பிரான், சுதந்திர வாலிபர் சங்கம், சென்னை ; ஸ்ரீ பி. கிருஷ்ணசாமி செட்டியார், சுதந்திர வாலிபர் சங்கம், சென்னை ; ஸ்ரீ கே. என். நாராயணசாமி செட்டியார், ராமாபுரம் கிராமம் ; சங்கீத வித்வான் ஸ்ரீ என். ஜி. காசி ஐயர், மயிலாப்பூர், சென்னை ; ஸ்ரீ கே. எஸ். தங்கவேலு முதலியார், திருமழிசை ; ஸ்ரீ சி. பி. குப்புசாமி, மதுரை ; ஸ்ரீ நா. க. நாகப்ப பிள்ளை அண்டு ஸன்ஸ், கோடிக்கரை ; ஸ்ரீ என். நடராஜ ஐயர், விழுப்புரம் ; ஸ்ரீ கே. நாகராஜன், சென்னை.

ஆக ரூ. 70 0 0

உதாரணமாகப் பாருங்கள்: வருஷா வருஷம் இறக்குமதி செய்யவேண்டிய அரிசியின் அளவு அதிகமாகி வருகிறது. சர்க்கார் கொடுக்கவேண்டிய விலையும் கோடிக் கணக்கில் அதிகமாகி வருகிறது. சர்க்கார் அதிக விலைக்கு வாங்கி ஜனங்களுக்குக் குறைந்த விலைக்குக் கொடுப்பதன் மூலம் சர்க்காருக்கு 1948—49-ம் வருஷம் மாத்திரம் சுமார் இருபத்தேழு கோடி ரூபாய் நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. இறக்குமதி செய்யும் உணவுப் பொருள்கள் ஜனங்களுக்குப் போதுமானவையாக இல்லை. ஆனால், கறுப்பு மார்க்கெட்டில் உணவுப் பொருள்கள் யாவும் தேவையான அளவு கிடைக்கின்றன. இதிலிருந்து, உணவுப் பற்றாக் குறைக்குக் கறுப்பு மார்க்கெட்டும் முக்கிய காரணம் என்பது வியக்தமாகத் தெரிகிறது.

எனவே, சர்க்கார் சமாளிக்க வேண்டிய மகத்தான அரசியல் பிரச்னைகள் ஒருபுற மிருக்க, மேற்படி சங்கடமான பொருளாதார நிலைமைக்கும் பரிகாரம் தேடவேண்டிய பொறுப்பு அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

நமது நாட்டின் உணவு உற்பத்தியையும் மற்ற சாதனங்களின் உற்பத்தியையும் பெருக்குவதற்கு சர்க்கார், இஞ்ஜினீரிங் திட்டங்கள், மின்சாரத் திட்டங்கள், நீர்ப்பாசனத் திட்டங்கள் முதலிய மற்றும் பல்வேறு திட்டங்களையும் கைக்கொள்ளத் தீர்மானித்திருக்கிறார்கள்.

அத்தகைய திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வருவதெனில், வெளிநாடுகளிலிருந்து ஏராளமான யந்திர சாதனங்களைத் தருவித்தாக வேண்டும். அவற்றைத் தருவிப்பதற்கு எத்தனையோ கோடி ரூபாய் தேவையாக இருக்கிறது. அப்படியிருக்க, சர்க்கார் உணவுப் பொருள் இறக்குமதியில் கோடிக்கணக்கான தொகையை விரயமாக்கிக் கொண்டிருந்தால் தேசத்தின் எதிர்காலம் என்ன ஆவது?

* * *

பாபு ராஜேந்திரப் பிரசாதர், உணவுப் பொருள்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதால், இந்தியாவின் பொருளாதார நிலைமை எவ்வளவு தூரம் சீர்குலைகிறது என்பதைப் புள்ளி விவரங்களுடன் தெளிவாகக் குறிப்பிட்டதோடு நின்றுவிடவில்லை. உணவு உற்பத்தி பெருகுவதற்கு ஒவ்வொரு சாராரும் செய்யவேண்டிய கடமையைத் திட்டவட்டமாக எடுத்துக் கூறியிருக்கிறார்.

பத்து மணங்கு விளையும் இடத்தில் பதினோரு மணங்கு விளையும்படி செய்வதில் அதிகக் கஷ்டம் இருக்க இடமில்லை என்று கூறியுள்ள தலைவர், அவ்வாறு விளைவதற்கான வசதிகளை அதிகாரிகள் விவசாயிகளுக்குத் தாமதமின்றிச் செய்து கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்தி யிருக்கிறார்.

அதாவது சர்க்கார் விவசாயிகளுக்கு நீர்ப்பாசன வசதி அளிக்க வேண்டும். தகுந்த எருக்கள் கிடைக்கும்படி செய்ய வேண்டும். அவர்களுக்கு முதல்தரமான விதைகளும் சிறந்த வேளாண்மைக் கருவிகளும் கிடைக்க வழி வகை செய்ய வேண்டும்.

அரசாங்கம் உணர்ச்சியற்ற ஓர் யந்திரத்தைப் போலிராமல் விவசாயிகளின் நம்பிக்கையைப் பெற்று, அவர்களிடையே உற்சாகத்தை உண்டு பண்ண வேண்டும்.

ஓர் அதிகாரி மற்றொரு அதிகாரியையும், ஒரு இலாகா மற்றொரு இலாகாவையும் கையைக் காட்டும் சிவப்புநாடா விபரீதம் ஒழியவேண்டும்.

லஞ்சம், சலுகை முதலிய நேர்மையற்ற காரியங்களுக்கு இடமே இருக்கக் கூடாது.

இவ்விதம் பாபு ராஜேந்திரர் வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்ற முறையில் புத்திமதி கூறியுள்ளார்.

நெய்க்குத் தொன்னை ஆதாரமா அல்லது தொன்னைக்கு நெய் ஆதாரமா என்று ஆராய்ச்சி செய்துகொண்டு காலத்தை வீணாக்குவதைக் காட்டிலும் விவசாயிகளின் தேவைகளை நேரடியாக அறிந்து, அவைகளைத் தாமதமின்றிப் பூர்த்தி செய்வதால் "உணவைப் பெருக்குக" என்ற பிரசாரம் அதிக பலனைக் கொடுக்கும் என்பதையும் தலைவர் எடுத்துக் கூறியிருக்கிறார்.

பத்து விளைவது பதினொன்றாக விளையும்படி செய்யும் சக்திகூட இந்தியாவுக்கு இல்லை என்றால், ஒரு நாட்டுக்கு.—ஒரு காலத்தில் வேளாண்மையில் திளைத்து தானியக் களஞ்சியமாக விளங்கிய இந்தியாவைப் போன்ற ஒரு நாட்டுக்கு அதைவிட வெட்கக்கேடான விஷயம் வேறென்ன இருக்க முடியும்?

எனவே தலை சிறந்த தலைவரான பாபு ராஜேந்திரப் பிரசாதர் தலைமை வகிக்கும் பாக்கியத்தைப் பெற்ற அகில இந்திய விவசாய மகாநாட்டின் பலனாக, உணவுப் பற்றாக்குறை சாபக்கேட்டிலிருந்து விடுதலைபெற்று சுபிட்சமடையும் பாக்கியம் பாரத நாட்டு மக்களுக்கு ஏற்படுமாக!

# மனம் உவந்த காணிக்கை

காந்தி மகாத்மா தம்முடைய வாழ்நாளில் பொதுக் காரியங்களுக்காக எத்தனையோ நிதிகள் வசூல் செய்ததுண்டு. நிதி வசூலிப்பதில் இணையற்ற சக்தி வாய்ந்தவர் என்ற பெயரும் பெற்றிருந்தார். தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு வந்த பிறகு மகாத்மா வசூலித்த முதல் நிதி என்ன தெரியுமா? ஜாலியன் வாலாபாக்கில் உயிர் நீத்தவர்களுக்காக ஒரு ஞாபகார்த்தம் எழுப்புவதற்கு வசூல் செய்த நிதிதான். 1919-ம் வருஷம் டிசம்பரில் அமிருதஸரஸில் நடந்த காங்கிரஸில் ஜாலியன் வாலாபாக் தோட்டத்தை வாங்கி அதில் ஒரு ஞாபகார்த்தம் நிறுவவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. மகாத்மாவின் யோசனையின் பேரில் தான் இத்தீர்மானம் நிறைவேறியது. அதைக் காரியத்தில் நடத்தும் பொறுப்பு மகாத்மாவுக்கே விடப்பட்டது. எனவே, அதற்காகக் காந்தி மகான் நிதிவசூல் தொடங்கினார்.

1920-ம் வருஷம் நவம்பர் மாதம் 18-ந் தேதி வெளியான "எங் இந்தியா"வில் ஜாலியன்வாலாபாக் ஞாபகச் சின்னத்தின் அவசியத்தைப்பற்றிப் பின்வருமாறு மகாத்மா காந்தி எழுதினார் :—

"ஜாலியன் வாலாபாக் தோட்டத்தை வாங்குவது பற்றி ஒரு சிறு தகராறு ஏற்பட்டிருந்தது. பண்டித மாளவியா, சுவாமி சிரத்தானந்தர் ஆகியவர்களின் முயற்சியால் அந்தத் தடை நீங்கி விட்டது. இந்த மாதம் 6-ந் தேதியிலிருந்து மூன்று மாதத்துக்குள் ரூபாய் 5,36,000 சேர்த்துக் கொடுக்கவேண்டும். அப்படிச் சேர்த்துக் கொடுத்தால் மேற்படி தோட்டம் தேசத்தின் பொதுச் சொத்தாகி விடும்.......

"தேசத்துக்காக ஜாலியன்வாலாபாக் தோட்டத்தை வாங்குவதின் அவசியத்தைப் பற்றிச் சில விஷயங்கள் சொல்ல வேண்டும். சிலர் அதன் அவசியத்தைப் பற்றி ஆட்சேபித்திருக்கிறார்கள். ஜாலியன்வாலாபாக்கில் உயிர் நீத்தவர்களின் ஞாபகத்தை நாம் மறந்து விடலாமா? அவர்களை நாம் மறந்து விட்டால் 'இந்தியர்கள்' என்று அழைக்கப்படுவதற்கே தகுதியற்றவர்களாவோம். நம்முடைய விடுதலைப் போரில் உயிர் நீத்தவர்களின் ஞாபகத்தை நாம் போற்ற வேண்டும். அவர்களை இந்நாட்டில் வரப்போகும் சந்ததிகள் நினைவுகூர்ந்து போற்றும்படியான ஞாபகச் சின்னத்தையும் ஏற்படுத்த வேண்டும். இதுகூட நாம் செய்யாவிட்டால் நம்முடைய தேசிய உணர்ச்சி அர்த்தமற்றதாகும். நம்முடைய சுதந்திரப்போர் முடிவு பெறுவதற்குள் ஜாலியன்வாலா பாக்கில் இறந்தவர்களைப் போல் பலர் உயிரைவிட நேரிடலாம். அப்படித் தேசத்துக்காக உயிரை விடுகிறவர்களின் ஞாபகத்தை நாம் புனித ஞாபகமாகப் போற்றி வருவோம் என்பதை இக்காலத்தவர்களுக்கும் வருங்காலத்தவர்களுக்கும் நாம் சொல்லிவிட வேண்டும். ஜாலியன் வாலாபாக் ஞாபகச் சின்னத்தின் முக்கிய நோக்கம் இதுதான்......"

காந்திஜி இவ்வாறு எழுதினார்; பேசினார். வேண்டிய நிதியும் சேர்ந்தது. ஜாலியன் வாலாபாக் தோட்டம் வாங்கப்பட்டது. அதில் ஒரு ஞாபகச் சின்னம் நிறுவப்பட்டிருக்கிறது. இந்த ஞாபகார்த்தத்துக்காகச் செலவான பல லட்சம் ரூபாயும் மிக உத்தமமான கைங்கரியத்துக்குச் செலவானதாகவே காந்திஜியும் மற்ற தேசியத் தலைவர்களும் கருதினார்கள்.

பாரத நாட்டுக்காக உழைத்துப் பாடுபட்டவர்களுக்குள்ளே மகாத்மா காந்தியை மிஞ்சியவர் யாரேனும் உண்டா? தேசத்துக்காகவே வாழ்ந்து தேசத்துக்காகவே அவர் உயிரை விடவில்லையா? மகாத்மா இல்லையென்றால், இந்தியா நம் நாளில் சுதந்திரம் அடைந்திருக்க முடியுமா? அதனால் அல்லவா 'இந்தியாவின் தந்தை' என்று மகாத்மா காந்தியை நாம் போற்றி வணங்குகிறோம்?

அத்தகைய மகாபுருஷருக்குச் சென்னை நகரில் ஒரு சிறந்த ஞாபகச் சின்னம் ஏற்படுத்த வேண்டாமா?

கல்கத்தாவிலும் பம்பாயிலும் மகாத்மாவுக்கு ஞாபகச் சின்னங்கள் கட்டி முடித்து விட்டார்கள். சென்னை மட்டும் ஏன் பின் வாங்க வேண்டும்?

சென்னைக் கடற்கரையில் அமைக்க உத்தேசித்திருக்கும் மகாத்மா ஞாபகார்த்த ஸ்தூபி, காந்தி மகானுடைய மகிமையை இந்நாட்டு மக்களுக்கு என்றென்றைக்கும் ஞாபகமூட்டிக் கொண்டிருக்கும். அவருடைய முக்கியமான போதனைகளை நமக்கும் நம் வருங்கால சந்ததிகளுக்கும் நினைவூட்டிக் கொண்டிருக்கும். மகாத்மாவின் மனதுக்கு உகந்த நிர்மாணப் பணிகளில் நம்மை ஈடுபடும்படி அந்த ஞாபகார்த்த ஸ்தூபி தூண்டிக் கொண்டே யிருக்கும்.

சில அன்பர்கள் மகாத்மா ஞாபகார்த்த ஸ்தூபி நிதிக்குப் பெரிய நன்கொடைகள் அளித்திருக்கிறார்கள். அந்த நன்கொடைகளின் விவரங்களைக் கீழே காணலாம்.

# பத்து, பதினொன்றால்....

அந்த ஊரிலுள்ள தீர்த்தக் கரைப் பிள்ளையாருக்கு யார் நூற்றெட்டு குடம் தண்ணீர் எடுத்து அபிஷேகம் செய்கிறாரோ, அவர் ஒரு மகாராஜாவாக விளங்குவார் என்று ஜோசியர்கள் சொல்லி வந்தார்கள்.

ஆனால், அந்த ஜோசியத்தை யாரும் நம்பவில்லை. கஷ்டப்பட்டு நூற்றெட்டு குடம் தண்ணீரை எடுத்து அபிஷேகம் செய்து விட்டுப் பிறகு ஏமாந்துபோக அவர்கள் விரும்பவில்லை.

எனினும், ஒருவர் மாத்திரம் தாம் மகாராஜாவாக இருக்கவேண்டும் என்ற ஆசையால், தேக சிரமத்தைப் பொருட்படுத்தாமல் பிள்ளையாருக்கு அபிஷேகம் செய்ய முன் வந்தார்.

ஒன்று, பத்து, இருபது, ஐம்பது, நூறு குடம் தண்ணீர் அபிஷேகம் செய்தாகி விட்டது.

நூற்றேழு குடமும்கூட அபிஷேகம் செய்தாகி விட்டது.

கடைசியில் ஒரே ஒரு குடம்தான் பாக்கி. ஆனால், அபிஷேகம் செய்தவர் அரசனாவதற்கான அறிகுறி எதுவுமே தென்படவில்லை.

உடனே அவருக்கு விக்னேசுவரரின் மீது பிரமாதமான கோபம் ஏற்பட்டது. கஷ்டப்பட்டு அபிஷேகம் செய்தது வீணாகி விட்டதே என்ற ஏமாற்றமும் உண்டாயிற்று.

அதனால் அவர் ஆத்திரத்துடன் நூற்றெட்டாவது குடத்தைப் பிள்ளையாரின் தலையில் போட்டு உடைத்தார்.

அவ்வளவுதான்! அபிஷேகம் செய்தவர் ஏமாறவில்லை! பிள்ளையார் உடனே பிரத்யட்சமானார்!

"நீ மகாராஜாவாகக் கடவாய்" என்று வரம் தந்து அருளினார்.

அபிஷேகம் செய்தவர், நம்பமுடியாத அந்தக் காட்சியைக் கண்டு ஆச்சரியத்தில் மூழ்கிப் போனார்.

"ஆனால், நூற்றெட்டாவது குடத்தை நீ என் தலையில் போட்டு உடைத்ததால் என் தலை நொறுங்கவில்லை. உன் முடியையே நீ நொறுக்கிக் கொண்டாய். ஒரு காலத்தில் நீ மாத்திரமல்ல, இந்த உலகத்திலே மகாராஜாவாக உள்ள எல்லோருமே முடி யிழப்பார்கள்" என்று தீர்த்தக்கரைப் பிள்ளையார் மேலும் திருவாய் மலர்ந்து சாபம் கொடுத்துவிட்டு மறைந்தார்!

* * *

அதுபோலவே, நமது தலைவர்கள் இப்போது ஒரு விஷயத்தை இடைவிடாது வற்புறுத்தி வருகிறார்கள்.

இவ்வளவு கஷ்டப்பட்டு இந்தியாவில் நெல் கண்டு முதல் செய்யும் விவசாயிகள் பொறுமை யிழந்து விடாமல் மேற்கொண்டு பத்துக்கு ஒரு மணி அதிகமாக விளையும்படி செய்து விட்டால் போதுமானது என்கிறார்கள்.

"பத்து மணங்கு நெல் விளையும் வயலில் மேற்கொண்டு ஒரு மணங்கு அதிகமாக, பதினொரு மணங்கு நெல் விளையும்படி செய்து விட்டால் இந்தியாவில் எல்லாரும் மகாராஜாவாகி விடலாம், அதாவது உணவுப் பற்றாக் குறைக் கஷ்டத்திலிருந்து கரையேறி விடலாம்" என்று பாபு ராஜேந்திரப் பிரசாத் சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடந்த அகில இந்திய விவசாயப் பொருளாதார மகாநாட்டின் தலைமை உரையில் குறிப்பிட்டார்.

இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் மேற்படி மகாநாட்டுக்கு விஜயம் செய்த ஏராளமான பிரதிநிதிகளையும் சென்னை நிதிமந்திரி கனம் கோபால ரெட்டி வரவேற்க, பிரதமர் கனம் குமாரசாமி ராஜா மகாநாட்டை ஆரம்பித்து வைத்தார்.

பாபு ராஜேந்திரர் பாரத நாட்டின் அருந்தவப் புதல்வர்களில் ஒருவர் என்பதுடன், விவசாயத்திலும் கிராம வாழ்க்கையிலும் தீவிரமான அனுபவமும் பற்றுதலும் உடையவர்.

விவசாயிகளின் குடும்பத்தில் பிறந்து, நடையுடை பாவனையில் விவசாயியாகவே திகழ்ந்துவரும் ராஜேந்திரப் பிரசாதர், நம் நாட்டின் வேளாண்மையிலுள்ள குறைபாடுகளையும், அவற்றை நிவர்த்தித்து உணவு உற்பத்தி அதிகமாவதற்கான வழிகளையும் சாங்கோபாங்கமாகப் புள்ளி விவரங்களுடன் விவரித்தார்.

தற்போது நமது நாட்டில் புதிர் போன்ற அசாதாரணமான ஒரு நிலைமை ஏற்பட்டிருக்கிறது.


5 ... ஆந்திர மாகாணத்துக்குப் போகும்படி
நேருமோ என்று ஐ.ஸி.எஸ். உத்தியோகஸ்-
தர்கள் தெரிந்து கொள்ள
ஆரம்பித்திருக்கிறார்கள்...


6 ....என்.ஜி.ஓ.க்கள் கனவு உலகத்தில்
சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார்கள்....
"எனக்குப் பெரிய உத்தியோகம் கிடைக்கப்போவது நிச்சயம்"


7 வீடு கிடைக்காமல் தவிப்போர்
நம்பிக்கையுடன் இருந்து வருகிறார்கள்...,
ராமுலு
"கவலைப்படாதே அவர் ஆந்திர மாகாணத்துக்குப் போய்விடுவார்."


8 ...மிருகக் காட்சி சாலையிலும் பரபரப்பு
ஏற்பட்டிருக்கிறது.
"நீ ஆந்திராவுக்குப் போகிறாயா அல்லது இங்கேயே இருக்க உத்தேசித்திருக்கிறாயா?
SHASTRY

பாடினார். (நாள் என்பது நட்சத்திரம்; கோள் என்பது கிரஹம்.) ஆயினும் இக்காலத்தில் நம்முடைய வாழ்க்கையில் நல்ல நாள், நல்லவேளை பார்ப்பதிலும், சகுனம் பார்ப்பதிலும், ஜோசியம்—ஜாதகம் பார்ப்பதிலும் எத்தனை காலத்தை வீணாக்குகிறோம் என்பதைக் கணக்குப் பார்த்தால், அதன் மொத்தக் கணக்கு நம்மைப் பயங்கரத்தில் ஆழ்த்திவிடும். சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற பகுத்தறிவாளர் மகாநாட்டில் டாக்டர் பராஞ்சபே அவர்கள் எதற்கெடுத்தாலும் பஞ்சாங்கத்தைப் பார்க்கும் குருட்டு நம்பிக்கையை வன்மையாகக் கண்டித்திருக்கிறார். சுதந்திரம் அடைந்த இந்தியாவில் மக்கள் மூட நம்பிக்கைகளின் அடிமைத்தனத்திலிருந்தும் விடுதலை அடைந்து வாழ்வது மிகவும் முக்கியமாகும்.

## காட்சியும் கலையும்!

வருஷந்தோறும் டிசம்பர் - ஜனவரியில் நடைபெறும் சுதேசிப் பொருட்காட்சி விழா சென்னை நகர வாசிகளின் வாழ்க்கையில் ஒரு முக்கியமான அம்சமாக ஆகியிருக்கிறது. இந்த இரண்டு மாதங்களிலும் சென்னை நகர மக்கள் தினந்தோறும் பதினாயிரக் கணக்கில் கண்காட்சிக்குச் சென்று பார்த்து அநுபவித்து வருகிறார்கள். பொருட்காட்சியில் மக்களின் அறிவு விசாலத்துக்கும் கலைப் பண்பாட்டுக்கும் உரிய பல நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். மொத்தத்தில் கண்காட்சியின் சிறப்பு ஆண்டுதோறும் வளர்ச்சியடைந்து வருகிறது. ஒரு ராஜ்யத்தை நடத்துவதற்கு வேண்டிய நிர்வாகத் திறமை இந்தச் சுதேசிப் பொருட்காட்சி விழாவை நடத்துவதற்குத் தேவை என்று கூறினால் மிகையாகாது. இவ்வளவு திறமையுடன் இந்தக் காட்சியை நடத்தும் பொறுப்பை ஏற்று நடத்தி வருகிறவர்கள் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசி ஸ்ரீ எஸ். வெங்கட்ராமனும் அவருடைய சகாக்களும் ஆவர். தீரர் சத்தியமூர்த்தி ஆரம்பித்து வைத்த இந்தச் சுதேசிப் பொருட்காட்சி விழாவை அவருடைய முக்கிய சீடர்கள் நன்கு நடத்தி ஸ்ரீ சத்திய மூர்த்தியின் பெயர் விளங்கும்படியாகச் செய்து வருவது போற்றத் தக்கதாகும். நம் நாட்டில் நடைபெற்றுவரும் சுதேசிக் கைத்தொழில்களைப் பற்றி இந்தப் பொருட்காட்சி மூலம் பொது மக்கள் அறிந்து கொள்ள முடிகிறது. இதைத் தவிர, பல விதமான கலைகளின் வளர்ச்சியைப் பற்றியும் அறிந்து கொள்ள முடிகிறது. இந்த வருஷத்தில் கலை நிகழ்ச்சிகளை நடத்தி வைக்கும் பொறுப்பை ஏற்றவர்கள் ஒரு புதிய முறையைக் கையாண்டு வருகிறார்கள். சென்னையில் பல ஸ்தாபனங்கள் நடத்தி வரும் சங்கீத விழாவாகவே பொருட்காட்சிக் கலை விழாவையும் நடத்தி விடாமல், நாடகக் கலைக்கு முக்கியமான இடம் தந்திருக்கிறார்கள். பெரும்பாலான தினங்களில் நாடகங்கள் நடைபெறுகின்றன. நாடகக் கலைத்துறையில் புகழ்பெற்ற சக்தி நாடக சபையார், டி. கே. எஸ். சகோதரர்கள் முதலியோர் தொடர்ந்து பல தினங்கள் தங்களுடைய சிறந்த நாடகங்களை நடத்துகிறார்கள். சாதாரணமாக நாடகக் கொட்டகைகளில் நடைபெறும் நாடகங்களை ஆயிரம் பேருக்குமேல் பார்க்க முடியாது. இங்கே பதினாயிரம் ஜனங்கள் பார்க்க முடிகிறது. "ஔவையார்" போன்ற கலைப் பண்பு நிறைந்த நாடகங்களைப் பதினாயிரக் கணக்கான மக்கள் நாலணாச் செலவில் பார்ப்பதற்கு வசதி ஏற்படுத்திக் கொடுப்பது ஒரு பெரிய கலைத்தொண்டு என்பதில் சிறிதும் ஐயமில்லை. இவ்வளவு சிறந்த ஏற்பாட்டை இந்த வருஷத்தில் ஏற்படுத்தியிருக்கும் கலை நிகழ்ச்சிப் பகுதி நிர்வாகிகளைப் பாராட்டுகிறோம்.

"கண் காட்சியின் முடிவில் லாபம் காட்ட வேண்டும்" என்று ராஜாஜி கண்காட்சித் திறப்பு விழாவிலே கூறியது நேயர்களுக்கு நினைவிருக்கலாம். மக்களுக்கு இவ்வளவு உபயோகமாயுள்ள விழா நஷ்டத்தில் முடிந்து, வருகிற வருஷங்களில் நடத்த முடியாமல் போகக்கூடாது என்னும் விருப்பத்தையே ராஜாஜி வெளியிட்டார். அந்த விருப்பத்தைப் பொருட் காட்சி நிர்வாகிகள் நன்கு நிறைவேற்றி வருகிறார்கள். கண்காட்சியின் கணக்குகள் நல்ல முறையில் வைக்கப்பட்டுத் தக்க முறையில் 'ஆடிட்' செய்யப்படுகின்றன. சென்ற இரு வருஷங்களில் கண்காட்சி மூலம் கிடைத்த நிகரலாபம் தேனாம்பேட்டைக் காங்கிரஸ் மைதானத்தை அபிவிருத்தி செய்வதற்கும், கண் காட்சியில் அவசியமான சில முக்கிய கட்டிட வேலைகளுக்கும் பயன்பட்டிருக்கிறது. நிர்வாகச் செலவுகள் மிகச் சிக்கனமாகவும் பொறுப்பான முறையிலும் செய்யப்படுகின்றன. இத்தகைய உபயோகமான பொருட்காட்சியை இவ்வளவு நல்ல முறையில் நடத்துகிறவர்கள், நாட்டுக்கு எவ்வளவு அருமையான சேவை செய்கிறார்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? கண்காட்சி விஷயத்தில் சென்னை சர்க்கார் இலாகாக்களின் ஒத்துழைப்பு பெரிதும் பாராட்டத் தக்கதாகும். அத்தகைய ஒத்துழைப்புக்குத் தகுந்த பிரசார பலன்களைச் சென்னை சர்க்கார் அடைந்து வருவதையும் குறிப்பிட வேண்டும்.

# பிரிவினை ஜுரம்

- சாஸ்திரி














மலர் 9 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 23

# என்ன சேதி?

## நல்ல சேதி

ஆங்கிலப் புது வருஷத்தின் ஆரம்பத்தில் நேயர்களுக்கு ஒரு நல்ல செய்தியைத் தெரிவிக்க விரும்புகிறோம். சில வருஷங்களாக நம்மைப் பிரிந்து நெடுந் தூரத்திலிருந்த நம்முடைய தலைவர் ராஜாஜி அவர்கள் ஜனவரி 26உக்குப் பிறகு தமிழ் நாட்டுக்குத் திரும்பி வந்துவிடுவார்கள். இந்தியக் குடியரசின் முதல் தலைவர் பதவிக்கு அவர்கள் 'நிற்பதில்லை' என்ற திட்டமான முடிவுக்கு வந்துவிட்டார்கள். ராஜாஜியின் மன நிலையையும் வாழ்வு நெறியையும் நன்கு அறிந்திருப்பவர்களுக்கு இந்த முடிவு பற்றிச் சிறிதும் வியப்பு ஏற்படாது. சமீபத்தில் ராஜாஜி சென்னைக்கு விஜயம் செய்திருந்தபோது ஒருவாறு அவர்களுடைய மனநிலையைத் தெரியப்படுத்தினார்கள் அல்லவா? "சென்ற வருஷம் நான் வேண்டாத போது 'பிறந்த நாள்' கொண்டாடினார்களே? இந்த வருஷம் ஏன் கொண்டாடவில்லை? எனக்கு வயது எழுபது ஆகிறது என்பதை நீங்களும் ஞாபகப்படுத்திக் கொண்டு மற்றவர்களுக்கும் ஞாபகப் படுத்துங்கள். என்னிடம் மேலும் வேலை வாங்க யத்தனிக்க வேண்டாம்!" என்று கூறினார்கள். கவர்னர்-ஜெனரல் பதவியாகட்டும், பிரஸிடெண்ட் வேலையாகட்டும், ராஜாஜியின் உள்ளப் போக்குக்கு உகந்ததாக இருக்க முடியாதுதான். தவிர்க்க முடியாத கடமையாகத் தலையில் சுமந்திருந்தேதான் இத்தனை காலமும் ராஜாஜி கவர்னர் ஜெனரல் பதவியை வகித்து வந்தார்கள். விட்டு விலக ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால், அதைப் பயன் படுத்திக் கொள்ளவே அவர்கள் விரும்புவார்கள்.

நமது ஒப்பற்ற தலைவருக்குத் தமிழ் மக்களின் சார்பாக நல்வரவு கூறுகிறோம். இனித் தமிழ் நாட்டில் வந்து தங்கி, அவருடைய மனதுக்கு உகந்த தமிழ் இலக்கியத் தொண்டில் ஈடுபட்டு நம்மை மகிழ்விக்குமாறு வேண்டிக் கொள்கிறோம்.

## கோள் என் செயும்?

1929 டிஸம்பரில் நடைபெற்ற லாகூர் காங்கிரஸில் அடுத்த ஜனவரி 26உ சுதந்திரத் திருநாளாகக் கொண்டாடப்பட வேண்டும் என்று தீர்மானம் செய்யப்பட்டது. அது முதல் பிரதி வருஷமும் இந்தியாவில் ஜனவரி 26உ சுதந்திரத் திருநாள் கொண்டாடப் பட்டு வருகிறது. நாளது 1950-ம் வருஷம் ஜனவரி 26உ நமது சுதந்திரப் பேரியக்கத்தின் இலட்சியத்தை முடிவாக அடையப் போகிறோம். அன்று புதிய அரசியல் திட்டத்தின் பிரகாரம் இந்தியக் குடியரசு ஸ்தாபிதம் ஆகவேண்டும் என்று நாட்டின் தலைவர்கள் தீர்மானித்திருக்கிறார்கள். இந்த நிலைமையில் நமது சென்னை மாகாணத்தைச் சேர்ந்த அபூர்வமான பிரதிநிதி ஒருவர், "ஜனவரி 26உ நாள் நட்சத்திரம் நன்றாயில்லையென்பதாகத் தென்னாட்டிலிருந்து தகவல் வந்திருக்கிறதா? அதைப் பற்றி இந்திய சர்க்கார் கவனம் செலுத்தினார்களா?" என்று இந்திய சட்டசபையில் ஒரு கேள்வி போட்டார். அதற்குப் பண்டித ஜவாஹர்லால் நேரு பதில் தருகையில், "**கிரகங்களும் நட்சத்திரங்களும் பார்த்து இந்தியாவின் அரசியல் காரியங்களை நடத்துவதற்கு நான் சித்தமாயில்லை!**" என்று சொல்லியிருக்கிறார். இவ்வாறு அசட்டுக் குருட்டு நம்பிக்கைகளின் தலையில் ஒரு பெரிய அடி போட்ட நம்முடைய பிரதமர் ஜவாஹர்லால் நேருவைப் பாராட்டுகிறோம்.

நாளும் நட்சத்திரமும் ஜோசியமும் சகுனமும் பார்த்தே நம்முடைய நாட்டுப் பழைய காலத்து மன்னர்கள் எல்லா விதக் காரியங்களையும் ஆரம்பித்தார்கள். அதன் பலனாகப் பல யுத்தங்களில் படுதோல்வியடைந்து அன்னிய நாட்டார்களுக்குத் தங்கள் ராஜ்யங்களைப் பறி கொடுத்தார்கள்! 'நாள் என் செய்யும்? கோள் என் செய்யும்?' என்று தமிழ்நாட்டு அப்பர் பெருமான் ஆயிரத்து முன்னூறு வருஷங்களுக்கு முன்னாலே

# கல்கி

## பொருளடக்கம்


மலர் 9 இதழ் 23 | ஜனவரி 8 | விரோதி ஹூ மார்கழி 25




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே



# சிறந்த சலவை...




EAZ 15 T.M

தயாரிப்பவர்கள்:

தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) லிமிடெட்

மதராஸ்

---

இப்போது! சாப்பிட்டவுடன்

**கோல்கேட் டென்டல் க்ரீமால் பல் துலக்குவதானது**

# பல் சிதைவைத் தவிர்க்க உதவுகிறது

இதுவே பத்திரமும் உறுதியுமான வழி என்பது ருசுவாகிவிட்டது.

பிரபல பல் வைத்தியர்களின் மேற்பார்வையில் ஒரு தொகுதி காலேஜ் மாணவர்கள் சாப்பாட்டிற்குப் பின் 'கோல்கேட்' உபயோகித்துப் பல் துலக்கினர். மற்றொரு தொகுதியினர் வழக்கமாகப் பல் துலக்கும் முறைப்படி செய்தார்கள். கோல்கேட் உபயோகித்தோருக்கு பற்களுக்கிடையே இடுக்கு விழுகிற எண்ணிக்கை வேகமாகக் குறைந்தது. மற்றவர்களுக்கோ பற்களுக்கிடையே புதிய புதிய இடுக்குகள் அதிகமாகிக் கொண்டே வந்தது. 'கோல்கேட்'டை உபயோகிப்பதால் எல்லாவித பல் சிதைவையும் தடுக்க முடியும் என்று ஜம்பம் கூறவில்லை. ஆனால் சாப்பாட்டிற்குப் பிறகு 'கோல்கேட்'டை உபயோகிப்பது பல் சிதைவை நிறுத்த உதவுகிற வழி என்பது நிரூபிக்கப்பட்டிருக்கிறது.




எப்போதும் கோல்கேட் *உபயோகியுங்கள்

அதன்மூலம் உங்கள் பற்களை துலக்குவதோடு கூடவே சுவாஸ துர்கந்தத்தை அகற்றி

பல் சிதைவைத்தடுங்கள்!

*சாபிட்டவுடன்

கோல்கேட் நைலன் டூத் பிரஷை வாங்குங்கள்




நைலன் குஞ்சங்கள் உங்கள் ஈறுகளை பாதுகாப்பது போல் அமைக்கப்பெற்றுள்ளன.

ஜனவரி 14 உ முதல்
வெளி வருகிறது

மாடர்ன் தியேட்டர்ஸ்

# பொன்முடி

உணர்ச்சி மிகுந்த காதல் கதை



கதை. பாரதிதாசன்

டைரக்ஷன்
எல்லிஸ் R. டங்கன்

# ஜனவரி 14
## பரவசத்திற்குரிய நாள்
## ஜூபிடரின்
# கிருஷ்ண விஜயம்

**புராணப்படத்தில் ஒரு புதுமை**

ஏராளமான பொருட்செலவில் உங்களுக்
காகத்தயாரிக்கப்பட்டிருக்கிறது..

டைரக்ஷன் சுந்தர் ராவ் நட்கர்ணி





# ஒவ்வொரு ஸ்னானமும் உங்களுக்குக் கொடுக்கக்கூடியது எண்ணெய் ஸ்னானத்தின் வழவழப்பு



கேரளா எண்ணெய் ஸ்னான சோப்பின் செழிப்பான நுரை உள்ளே நன்றாக இறங்கி உங்களுடைய சர்மத்தை சுத்தமாகவும் அதிக மிருதுவாகவும் செய்கிறது. அதன் லேசான, சுத்தமான எண்ணெய்கள் இயற்கையான வாசனைகளையும் கிருமி நாசினிகளையும் சர்மத்தின் வெகு கீழே கொண்டு போகின்றன. ஆனாலும் குளிர்ந்த ஸ்னானத்தால் உங்கள் சர்மத்திலிருந்து ஒரு விநாடியில் கேரளா நுரையைப் போக்கிவிடலாம். மேலும் புதிய மணமும் பாதுகாப்பும் கேரளா ஸ்னானத்திற்குப் பிறகு பல மணி வரையும் தங்குகின்றன.

# கேரளா ஸோப்

சுத்தமான எண்ணெயே மூலப்பொருள்




கிருமிகளைப் போக்குவதும், குளிர்ச்சிபொருந்தியதும், சர்மத்தை மிருதுவாக்குவதுமான குணங்கள் வேப் சோப்பில் மார்கோஸா அல்லது நிம் எண்ணெயால் ஏற்பட்டு முக்கியமாக உஷ்ணகாலத்தில் சௌக்கியத்தையும் பந்தோபஸ்தையும் கொடுக்கக்கூடியது.

தயாரிப்பாளர்கள் —

**கேரளா ஸோப் இன்ஸ்டிட்யூட்**
**கள்ளிக்கோட்டை**

டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் அண்டு காமெர்ஸ்

**கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்**

SISTA'S-KS-32-TAMIL

# அற்புதமான படம்

*என்கிறார்கள் பொதுமக்கள்...*




*சென்னையில்* பாரகன் · மஹாராணி · லக்ஷ்மி
மற்றும் தென்னாடெங்கும்

## குளிர்காலம்

உழவன் கம்பளியில் தன் கைகளை நுழைத்துக் கொள்ளுகிறான். இலைகள் உதிர்ந்த மரக்கிளைகள் மூலமாக குளிர் காற்று வீசுகிறது. வளைந்து செல்லும் மணல் ரஸ்தாவின்மீது மாட்டு வண்டி மெதுவாகச் செல்கிறது. வண்டிக்காரன் பல்லிட்டும் குளிருக்கஞ்சி போர்வையை இழுத்துப் போர்த்திக்கொள்ளுகிறான். ரஸ்தாவின் மீதும், குடிசையிலும், வயல்களிலும், மரத்தடியிலும் உள்ள ஒவ்வொருவரும் டீ யின் கதகதப்பையும் சூட்டையும் எதிர்நோக்கி நிற்கிறார்கள். டீ யைப்போல மலிவாக, சுலபமாக எங்கும் கிடைக்கக்கூடியதும் திருப்தியளிக்கக்கூடியதுமான பானம் வேறொன்றுமே இல்லை



சென்ட்ரல் டீ போர்டின் வெளியீடு

எல்லோரும் டீ அருந்தும் வேளை.